உள் அட்டையில் காணும் சிற்பக்காட்சியில் பகவான் புத்தரின் அன்னைமாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுனன் மலைச் சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. படஉதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி.)

# பொருளடக்கம்



*'கொடையறத்தின் திருவுருவைக் கொடுத்துவளர் திருக்கையை
நடையறத்தின் திருவடியை நான்மலரின் திருமுகத்தை
விடையறத்திற் சிவன்போல விளங்குகின்ற திருநிறத்தை
தொடையறத்தின் திருவழகைத் தொழுதுநின்று பார்த்தார்கள்'*

# ஒரு சொல்

'**வ.** சுப. மா.' எனச் சுருக்கமாக அழைக்கப்படும் வ.சுப. மாணிக்கம் தமிழுக்கும் தமிழர்க்கும் தமிழகத்திற்கும் பல்லாண்டுக் காலம் நிலைத்த தொண்டாற்றியவர்; 'முனைவர்', 'மூதறிஞர்', 'செம்மல்', 'தமிழ்க் காந்தி', 'தமிழ் இமயம்' என்னும் சிறப்புப் பட்டங்களைப் பெற்றவர்; 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்ற கொள்கையைப் பறைசாற்றுவதற்காகத் 'தமிழ் வழிக் கல்வியியக்கம்' கண்டவர்; ஆடல்வல்லான் ஆடுகின்ற அம்பலத்தில் அன்னைத் தமிழும் அரியாசனம் ஏறவேண்டும் என்று போராடி வென்றவர்; 'மானுடம் வென்றதம்மா' என்ற கூற்றுக்கு இணங்க ஒரு நல்ல மனிதராக-உள்ளும் புறமும் ஒத்த மாமனிதராக-வாழ்ந்து காட்டியவர்; எளிய பண்பும் கொள்கைப் பிடிப்பும் செயலாண்மையும் கொண்டவர்; அழகும் நயமும் எங்கிருந்தாலும் சுவைக்கத் தக்கவையே என்பதைத் தம் எழுத்திலும் பேச்சிலும் விளக்கி யவர்; ஆராய்ச்சி மாணவராகத் தொடங்கி, படிப் படியாகத் தம் கடுமையான உழைப்பால் உயர்ந்து, பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஆனவர்; தமிழுக்குப் புதிய புதிய சொல்லாக் கங்களையும் உவமைகளையும் படைத்துத் தருவதில் தனி ஈடுபாடு உடையவர்; ஆராய்ச்சி, கட்டுரை, நாடகம், கவிதை, உரை, கடித இலக்கியம், பதிப்பு எனப் பலவகை நூல்களை வெளியிட்டு, தமிழ் இலக்கிய, இலக்கண ஆய்வு உலகில் தனித்துவம் ஒன்றை நிலை நாட்டியவர். அவரது சீரிய வாழ்வையும் நேரிய எழுத்தையும் அறிமுகம் செய்யும் நோக்கில் எழுதப்பட்டுள்ள சிறுநூல் இது.

'இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை'யில் இந்நூலினை உருவாக்கும் அரியதோர் வாய்ப்பினை அருளிய சாகித்திய அக்காதெமியினருக்கு என் மனமார்ந்த நன்றி. இந்நூலாக்கத்தின் போது எனக்கு உற்றுழி உதவிய வ.சுப.மா.வின் இளவல் **வ.சுப. சொக்கலிங்கனார்** அவர்களுக்கும், வ.சுப.மா.வின் அருமைப் புதல்வியார் திருமதி. **மாதரி வெள்ளையப்பன்** அவர்களுக்கும்,

என் வாழ்க்கைத் துணைவி டாக்டர் நிர்மலாவுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியறிதலை இவ்வேளையில் உரித்தாக்கு கின்றேன்.

*மதுரை-21,*
*28.9.95*

**இரா. மோகன்**

# 1. வாழ்க்கைச் சித்திரம்

*'ஈடிலா அன்பன், எளியன், இனியன்*
*கேடிலா மனத்தன், கிளர்ச்சித் தலைவன்...*
*நண்பன், பண்பன், நயத்தகு தமிழைக்*
*கண்ணென உயிரெனக் கருதும் இயல்பினன்...*
*பொய்யா மாணிக்கப் புலவன் அவனே*
*உண்மைத் தமிழ்த் தொண்டன்.'*

-கவியரசு முடியரசன்*

தமிழ் கூறு நல்லுலகால் 'வ.சுப.மா.' என்று தனியன் போடும் பெருமதிப்போடும் அழைக்கப்பெறும் வ.சுப. மாணிக்கம், புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த மேலைச் சிவபுரியில் 17.4.1917 - இல் நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபில் (வைரவன் கோயில் பிரிவில்) வ. சுப்பிரமணியன் செட்டி யார்க்கும் தெய்வானை ஆச்சிக்கும் மகனாகப் பிறந்தார். 'அண்ணாமலை' என்பது இவரது இயற்பெயர்-'பிள்ளைத் திருநாமம்'; எனினும் 'மாணிக்கம்' என்பதே இவருக்குக் கூப்பிடு பெயராக - பிற்காலத்தில் இலக்கிய உலகில் என்றென்றும் நிலையாக இடம்பெறத்தக்க பெயராக-அமைந்தது. வ.சுப.மா.வுடன் பிறந்தோர் நால்வர்; ஆடவர் இருவர்; மகளிர் இருவர். வ.சுப. திருப்பதிச் செட்டியார் வ.சுப.மா. வினும் இரண்டு ஆண்டுகள் மூத்தவர். இவரைக் குறித்து வ.சுப.மா. 'வள்ளுவம்' என்னும் தம் நூலில்-'அன்புறை'யாக இரு பாடல்கள் பாடியுள்ளார்.

*'எங்கள் குலமுதல்வன்; இல்லாண்மை ஏற்றமகன்;*
*பொங்கல் மனைபோற் பொலிவுடையன்; - சங்கத்*
*தமிழனைய தூயன்; தனைமறந்த தொண்டன்;*
*கமழுங் குடிமைக்கோர் காட்டு'*

என்னும் முதற்பாடலின் மூலம் வ.சுப.மா. தம் அண்ணன் திருப்பதியைப் படிப்பவர் மனக்கண் முன்னே அப்படியே

---

★ 'வள்ளுவம் தந்த மாமணி', வள்ளுவம், ப.9.

கொண்டு வந்து நிறுத்துகிறார். குடும்பத்தில் இரண்டாவது உறுப்பினராக இடம்பெற்றவர் வ.சுப.மா. ஆவார். மீனாட்சி ஆச்சி, சிட்டாள் ஆச்சி இருவரும் அவரது தங்கையர் ஆவர். இருவருள் முன்னவர் வ.சுப.மா.வினும் 11 திங்கள் இளையவர்; இவர் இப்போது உயிருடன் இல்லை; பின்னவர் வ.சுப.மா. வினும் மூன்று ஆண்டுகள் இளையவர். வ.சுப. சொக்கலிங்கம் செட்டியார் குடும்பத்தில் 'கடைக்குட்டி'; அவர் வ.சுப.மா. வினும் ஐந்து ஆண்டுகள் இளைய தம்பி ஆவார்.

## பெற்றோர் இறத்தல்

வ. சுப. மா. தமது இளமைப் பருவத்திலேயே பெற்றோரை இழந்து துன்புற்றார். அவரது அன்னையார் தெய்வானை ஆச்சி காலரா நோயால் தாக்குண்டு இறந்தார்; அடுத்த பத்தாவது மாதத்தில் தொடர்ந்து அவரது தந்தையார் சுப்பிரமணியன் செட்டியாரும் அதே நோய்வாய்ப்பட்டு மரணமுற்றார். அப்போது வ. சுப. மா. வுக்கு வயது ஆறு. இத்துன்பச் சூழலில் அவரது தாய்வழிப்பாட்டி மீனாட்சி ஆச்சியும் தாத்தா அண்ணாமலைச் செட்டியாருமே அவரைக் கண்ணும் கருத்து மாகப் பேணி வளர்க்கும் பொறுப்பினை ஏற்றனர். இவர்களின் தூய நினைவைப் போற்றும் வகையில் 1947-ஆம் ஆண்டில் வெளியிட்ட 'மனைவியின் உரிமை' என்னும் தம் நாடகப் படைப்பின் 'அன்புறை'யில் வ.சுப.மா. ஓர் அரிய பாடலைப் புனைந்து மகிழ்ந்தார். அப்பாடல் இதோ:

> ***'என்னை உடனைவர் ஏங்காதே வாழ்வளித்த***
> ***அன்னை முதல்வர் அடிபணிந்தோம்;-பொன்னை***
> ***உறவினர் வாழ உவந்தளித்தார்; ஆயுள்***
> ***நிறைவினர் நின்ற நெறி.'***

அழகிய இப்பாடலின் வாயிலகாகத் தம்மை 'ஈன்று புறந்தந்த' தாயின் பெற்றோர்களை - தாயின் மறைவுக்குப் பின் அக் கறையோடும் பொறுப்போடும் இருந்து தம்மைச் 'சான்றோன் ஆக்கிய' அந்த நல்லுள்ளங்களை-ஆழ்ந்த நன்றி யுணர்வோடும் ஈடுபாட்டோடும் நினைவுகூர்ந்துள்ளார் வ.சுப.மா.

## ஏட்டுப் பள்ளியில் கல்வி பயிலல்

வ.சுப.மா. ஏழு வயது வரையில் புதுக்கோட்டையில் ஏட்டுப் பள்ளிக்கூடம் ஒன்றில் கல்வி பயின்றார். குருகுல வாழ்க்கை போல இரண்டு ஆண்டுக் காலம் அங்கேயே வாழ்ந்து தொடக்கக் கல்வியைக் கற்றார் அவர்.

## 'பொய்சொல்லா மாணிக்கம்'

வ. சுப. மா. வின் இளமை வாழ்க்கை பர்மாவின் தலை நகரான இரங்கூனில் ஒரு வட்டிக் கடையில் 'பெட்டி அடிப்பைய' னாகத் தொடங்கியது. 'கை பழகுதல்' என்னும் வணிக வாழ்வின் தொடக்க நிலையில் இருந்து தொழில் கற்றுக்கொள்வதற்காக அவர் அங்கே சென்றிருந்தார். அப்போது அவருக்கு வயது பதினொன்று. இரங்கூனில் இருந்து தொழில் பழகிய காலகட்டத்தில் வ.சுப.மா. இடையே இருமுறை தமிழகத்திற்குக் கப்பலில் வந்து சென்றார்; அங்ஙனம் வரும்போது கைச்சங்கிலி, கழுத்துச் சங்கிலி ஆகிய இரண்டைத் தம் ஊதியத்தின் பயனாகக் கொண்டு வந்தார்.

ஒரு நாள் கடை முதலாளி அவரை அழைத்து, குறிப்பிட்ட இன்னார் வந்து கேட்டால், 'முதலாளி இல்லை என்று சொல்லி விடு!' என்று கட்டளையிட்டார்; வ.சுப.மா.வோ அதற்கு மறுமொழியாக 'முதலாளி வெளியில் சென்றிருந்தால் இல்லை என்பேன்; இருக்கும்போது கேட்டால், எவ்வாறு இல்லை என்று சொல்வது? அப்படியெல்லாம் நான் பொய் சொல்ல மாட்டேன்!' என்று முதலாளியிடம் உறுதியாகக் கூறினார். இதனால் கோபம் கொண்ட முதலாளி அன்றே அவரை வேலை யில் இருந்து நீக்கிவிட்டார்; இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பி விட்டார். 'பொய் சொல்லா மாணிக்கம்' என்று பிற்காலத்தில் வ.சுப.மா. பெருமையோடு அழைக்கப்படுவதற்கு இந்த இளமை நிகழ்ச்சியே காரணமாக அமைந்தது எனலாம். 'என் பதினெட்டாம் அகவையில் பருமாவின் தலைநகரமான இரங்கூனில் கடைப்பணியாளராக இருந்தபோது வாய்மைக் குறிக்கோள் கொண்டேன்' என வ.சுப.மா.வே ஓர் இடத்தில் இந்நிகழ்ச்சியை நினைவுகூர்ந்து எழுதியுள்ளார் ('உரைப்

பாயிரம்', தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழி மரபும் மாணிக்கவுரை, ப. v.)

காந்தியடிகளின் ஆளுமை வளர்ச்சிக்குத் தென்னாப்பிரிக்க வாழ்க்கை காரணமாக அமைந்ததுபோல், வ.சுப.மா.வின் ஆளுமை வெளிப்பாட்டிற்குப் பர்மா வாழ்க்கை காரணமாக அமைந்தது.

## தமிழ்க் கல்வியும் ஆய்வும்

வ. சுப. மா. வின் வாழ்வில் பதினெட்டு வயதில் ஒரு திருப்பு முனை ஏற்பட்டது. பொய் கூற மறுத்து வட்டிக் கடைப் பணியைத் துறந்து பர்மாவிலிருந்து தமிழகத்திற்குத் திரும்பிய அவரது நாட்டம் மெல்ல மெல்லத் தமிழ்க் கல்வியின்பால் படரத் தொடங்கியது. அதற்குக் காரணமாக அமைந்தவர் பண்டிதமணி மு. கதிரேசனார் ஆவார். அவரது உதவியால் வ. சுப. மா. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வித்துவான் வகுப்பில் சேர்ந்தார்; அரிதின் முயன்று படித்து முதல் வகுப்பில்-முதல் நிலையில் - தேர்ச்சி பெற்றார்(1936-1940). பின்னர் அவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தனிக்கல்வி வாயிலாகப் பயின்று பீ: ஓ.எல்.(1945),எம்.ஏ.(1951) ஆகிய பட்டங்களைப் பெற்றார்; அடுத்து, 'தமிழில் வினைச்சொற்கள்' ( A Study of Tamil Verbs) என்னும் பொருளில் ஆராய்ந்து எம். ஓ.எல். பட்டமும் (1948), 'தமிழில் அகத்திணைக் கொள்கை' (The Tamil Concept of Love) என்னும் பொருளில் ஆராய்ந்து பிஎச். டி. பட்டமும் (1957) பெற்றார். இவ்வகையில் தமிழகத்தில் பிஎச்.டி. என்னும் உயர்பட்டம் பெற்ற தமிழறிஞர் வரிசையில் ஆறாவதாக இடம் பெறும் வாய்ப்பினை அடைந்தார் வ. சுப. மா.

வ.சுப.மா. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வித்துவான் வகுப்பில் மாணவராகப் பயின்றபோது, பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்கார், நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், ரா. கந்தசாமியார், ஆ. பூவராகன்

பிள்ளை, மு. அருணாசலம் பிள்ளை முதலானோர் ஆசிரியப் பெருமக்களாக இருந்து அவருக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கினர். இப்பெருமக்களைப் பற்றிய தம் 'மலரும் நினைவு' களை 'என் ஆசிரியர்' என்ற தலைப்பில் எழுதிய ஓர் அரிய கட்டுரையில் அவர் வெளியிட்டுள்ளார். '' 'என் ஆசிரியர்' என்ற தொடரை நினைக்கும்போது இவ்வுடம்பொடு கூடிய தெய்வத் தோற்றங்கள் கண்முன் நிற்கின்றன. அச்சங் கலந்த பணிவும், அறிவு கலந்த நன்றியுணர்வும் தோன்றுகின்றன'' (ஒப்பியல் நோக்கு, ப.175) - வ.சுப.மா.வின் ஆசிரியப் பற்றைப் புலப்படுத்தும் அழகிய வரிகள் இவை.

சிறுபள்ளியில் எழுத்தறிவித்த ஆசிரியர் முதலாகப் பல்கலைக்கழகத்தில் இலக்கியம் அறிவித்த ஆசான்கள் முடிய எத்தனையோ பேர் இருந்தாலும், அவர்களுள் தம் படிப்புக்கும் பதவிக்கும் உற்றுழியெல்லாம் உதவிசெய்த பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரின் மீது வ.சுப.மா. பெருமதிப்பும் பேரன்பும் கொண்டவராக விளங்கினார். ''ஆசிரியப் பயிற்சி படிக்குங்கால் இப்பெருந்தகை கைம்மாற்றாகப் பொருளுதவி செய்தனர். ஆராய்ச்சி மாணவனாக வரவும் துணைபுரிந்தனர். பல்கலைக்கழகம் நிறுவிய பெருவள்ளல் அண்ணாமலை அரசரிடம் என்னை அழைத்துச் சென்று தமிழ்த் துறையில் ஆசிரியப் பணியும் பெற்றுத் தந்தனர். இந்நன்மைக்கு ஈடு ஏது? பண்டிதமணி நினைவாக என் இல்லத்திற்குக் 'கதிரகம்' என்ற பெயர் வைத்தேன். என் இரண்டாவது மகனுக்குப் 'பூங்குன்றன்' என்று பெயரிட்டேன். அவர்களின் நூல்கள் தொடர்ந்து பதிப்பாகி வர ஆவ'ன செய்கிறேன். பண்டிதமணி அவர்கள் பல்கலைக்கழகத்திலிருந்து ஓய்வு பெற்றுத் தம்மூரான மகி பாலன்பட்டியில் இருந்தபோது காரைக்குடி அழகப்பா கல்லூரி யில் பணியாற்றி வந்த நான் வாரந்தோறும் சென்று உடனிருந்து அவர்கள் இட்ட பணியைச் செய்து வந்தேன்'' எனப் பண்டித மணிக்கும் தமக்கும் இடையே நிலவிய நெருங்கிய தொடர் பினைக் குறித்து அவரே ஒரு கட்டுரையில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார் (ஒப்பியல் நோக்கு, பக். 184-185).

## திருமணம்

வ.சுப.மா.வின் திருமணம் 14.11.1945-இல் அவரது இருபத்தெட்டாவது வயதில் நடைபெற்றது; நெற்குப்பையைச் சார்ந்த ஏகம்மை ஆச்சியைத் தம் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றார். நேரு பெருமகனார் பிறந்த திங்களும் நாளும் வ.சுப.மா. மணம் செய்துகொண்ட திங்களும் நாளும் ஒன்றாக அமைந்தன. ஆசிரியப் பணியில் இருந்த வ.சுப.மா. தம் திருமணத்தின்போது பெற்ற மாதச் சம்பளம் அறுபது ரூபாய் ஆகும். வ.சுப.மா.-ஏகம்மை இருவரது இனிய இல்லற வாழ்வின் விளைவாகத் தொல்காப்பியன் (1946 டிசம்பர்), பூங்குன்றன் (1949 சனவரி), பாரி (1954 நவம்பர்) என்னும் ஆண்மக்கள் மூவரும், தென்றல் (1951 மார்ச்), மாதரி (1958 பிப்ரவரி), பொற்றொடி (1960 மே) என்னும் பெண்மக்கள் மூவரும் பிறந்தனர். இவ்வகையில் 'ஆறுமுகம் பெற்ற குடும்ப'மாக அவரது இல்லற வாழ்க்கை அமைந்தது.

'மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை' என்னும் குறளுக்கு (51) நல்லதோர் இலக்கியமாக விளங்கினார் ஏகம்மை ஆச்சி. கணவரின் வருவாய்க்கு ஏற்பச் சிக்கனமாக இருந்து, கணவரிடம் இது வேண்டும், அது வேண்டும் என்று இறுதிவரை எதுவும் கேட்காமலே வாழ்ந்து வந்த அவரது மனைமாட்சி வியந்து போற்றத்தக்கதாகும். ''நான் படிப்பிலும் எழுத்திலும் ஆய்வி லும் பதவிப் பணியிலும் முழுநேரமும் ஈடுபடுமாறு குடும்பப் பொறுப்பை முழுதும் தாங்கியவள் ஏகம்மை என்ற என் ஒரே மனைவி. திட்டமிட்டுக் கணக்கிட்டுக் குடும்பம் நடத்தும் கலை வல்லவள். உலகியலறிவுமிக்கவள். நான் மேற்கொண்ட பல துணிவுகட்கு எளிதாக உடன்பட்டவள். பதவிகளை இடையே துறந்த காலையும், எதிர்காலம் என்னாகுமோ என்று கலங்காமல், உங்கட்கு இது நல்லது என்று பட்டால் சரிதான் என்று சுருங்கச் சொல்லி அமைபவள். குடும்பவுழைப்புக்கு ஓர் எடுத்துக்காட்டு'' என வ.சுப.மா.வே 'தற்சிந்தனை'களில் (கையெழுத்துப் படி, பக். 68-69) தம் நலமான வாழ்க்கைத் துணையைக் குறித்து மனமுருகி எழுதியுள்ளார்.

## ஆசிரியப் பணி

வ.சுப.மா.வின் ஆசிரிய வாழ்க்கை அவர் மாணவராகப் பயின்ற அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலேயே 1941-ஆம் ஆண்டில் தொடங்கியது. வித்துவான் வகுப்பில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்றதும் ஓராண்டு (1940-1941) அப்பல்கலைக் கழகத்திலேயே அவர் ஆய்வு மாணவராக இருந்தார்; பின்னர் ஏழு ஆண்டுகள் (1941-1948) அங்கேயே விரிவுரையாளராகப் பணியாற்றினார். 1948-ஆம் ஆண்டில் வ.சுப.மா.வின் ஆசிரிய வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவர் அண்ணா மலைப் பல்கலைக்கழகத்திலிருந்து விடைபெற்று, காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகச் சேர்ந்தார்; முதுகலைப் பேராசிரியராகப் பதவி உயர்வு பெற்றார்; ஆறு ஆண்டுகள் (1964-1970) அக் கல்லூரியிலேயே முதல்வராகப் பணிபுரியும் வாய்ப்பினையும் பெற்றார். இந்நிலையில் 1970-ஆம் ஆண்டில் வ.சுப.மா.வின் ஆசிரிய வாழ்க்கையில் மீண்டும் ஒரு மாறுதல் நேர்ந்தது; அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அவரைத் திரும்பவும் பணியாற்ற வருமாறு அழைப்பு விடுத்தது; அங்கே அவர் மீண்டும் ஏழு ஆண்டுகள் (1970-1977) தமிழ்த் துறைத் தலைவராகவும் இந்திய மொழிப்புல முதன்மையராகவும் தொண்டாற்றினார். இங்ஙனம் அண்ணா மலைப் பல்கலைக்கழகமும் காரைக்குடி அழகப்பர் கல்லூரியும் வ.சுப.மா.வின் கல்விப் பணிக்கு உரிய களங்களாய் மாறி மாறி அமைந்தன; மீண்டும் மீண்டும் அவருக்குப் பல வகையான பொறுப்புக்களைத் தந்து மகிழ்ந்தன. வ.சுப.மா வும் இவ்விரு கல்வி நிலையங்களையும் குறித்துத் தம் எழுத்திலும் பேச்சிலும் வாய்ப்பு நேர்ந்த இடங்களில் எல்லாம் நன்றியணர்வுடன் நினைவு கூர்ந்து போற்றினார்.

வ.சுப.மா., அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது 'என் கல்வித் தாயகம்' என்றே பெருமதிப்புடனும் பேரன்புடனும் சுட்டுகின்றார்; ''அண்ணா மலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் மாணவனாகப் படிப்புதவி பெற்றுச் சேர்ந்து 1940-இல் வித்துவான் பட்டம் எய்தியதும், ஆய்வு மாணவனாக இருந்தபின் விரிவுரையாளனாகப் பணி

தொடர்ந்ததும், நெட்டிடைக்குப் பின், முத் துறையும் ஒருங் கிணைந்த தமிழ்ப் பெருந்துறைக்கு 1970 முதல் ஏழாண்டுக் காலம் தமிழ்ப் பேராசிரியராகவும் இந்தியப் புல முதன்மை யராகவும் பணியில் இருந்தும், பல்கலைக்கழகம் 1979- இல் பொன் விழாக் கொண்டாடிய ஞான்று மூதறிஞர்(D.Litt.) என்ற சிறப்புப் பட்டம் எனக்கு வழங்கியதும் எல்லாம் என் வாழ்வின் நற்கூறுகளாகும்'' (முன்னுரை, 'கம்பர்', ப. viii)என அவரே ஓர் இடத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும் தமக்கும் இடையே நிலவிய நெருங்கிய உறவினைக் குறித்து அக மகிழ்வோடு எழுதியுள்ளார். சுருங்கக் கூறின், சங்கச் சான்றோர் கபிலருக்குப் பறம்பு மலையின் மேல் இருந்த பற்றும் பாசமும், வ.சுப. மா. வுக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் மேல் இறுதிவரை இருந்தன எனலாம்.

இதேபோல், காரைக்குடியில் அழகப்பர் கல்லூரியை நிறுவிய வள்ளல் அழகப்பரின் மீதும் வ.சுப. மா. வற்றாத பேரன்பு கொண்டிருந்தார். வள்ளல் அழகப்பரின் கொடைப் பண்பினைப் போற்றிக் 'கொடை விளக்கு'(1957) என்னும் கவிதை நூலைப் படைத்த அவர், 'கொடையின் திருவுரு' என்னும் தலைப்பில் அழகப்பர் கல்லூரி வெள்ளிவிழா மலருக்கு 1972-இல் ஒரு கட்டுரையும் எழுதியுள்ளார், 'ஞானத்தின் திருவுருவை' எனத் தொடங்கி திருஞான சம்பந்தரைக் குறித்துத் தெய்வச் சேக்கிழார் பாடிய பாடலை அடியொற்றி,

> 'கொடையறத்தின் திருவுருவைக் கொடுத்துவளர் திருக்கையை
> நடையறத்தின் திருவடியை நாள்மலரின் திருமுகத்தை
> விடையறத்திற் சிவன்போல விளங்குகின்ற திருநிறத்தை
> தொடையறத்தின் திருவழகைத் தொழுதுநின்று பார்த்தார்கள்'

என்று வள்ளல் அழகப்பரை வளமான தமிழ்ச் சொல்லில் நிழற்படமாக எடுத்துத் தந்துள்ளார் வ.சுப.மா.(சிந்தனைக் களங்கள், ப.432).

### நாள் வாழ்க்கை

வ.சுப.மா. தம் நாள் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் ஓர்

ஒழுங்கினையும் திட்டத்தினையும் இறுதி வரை உறுதியாகக் கடைப்பிடித்து வந்தார். அவர் ஒவ்வொரு நாளும் விடியற் காலை 5.30 மணிக்கு எழுவார்; எழுந்திருக்கும் போதே அவரது வாயிலிருந்து திருவாசகமும் பிற பாசுரங்களும் ஒலிபரப்பாகும். காலையில் அரை மணி நேரம் உலாவச் செல்வார்; தமிழ், ஆங்கிலச் செய்தித் தாள்களைப் படிப்பார்; ஏழே கால் செய்தியை வாசலில் நாற்காலியில் அமர்ந்து கேட்பார். காலையில் 6.30 முதல் 9 மணிவரை, மாலையில் 4 மணி முதல் 6 மணி வரை படிப்பு, எழுத்துப் பணிகளில் மூழ்குவார். எப்போதும் தரையில் அமர்ந்து எழுத்துப் பலகையைப் பயன்படுத்தியே எழுதுவார்; மை எழுதுகோலாலேயே எழுதுவார். காலையில் ஒன்பதி லிருந்து ஒன்பதே முக்கால் மணிக்குள் குளியல், துவைத்தல், உணவு உண்ணல் போன்ற பணிகளை முடித்துக் கொள்வார். அறையைத் தூய்மை செய்தல், செம்பில் தண்ணீர் எடுத்து வைத்தல் போன்ற அவரது வேலைகளை அவரே செய்து கொள்வார்; அன்றன்று அவரது துணிகளை அவரே துவைத்துக் கொள்வார்; சட்டை, நான்கு முழவேட்டி, துண்டு என எளிய உடைகளையே எப்போதும் அணிவார்; வழக்கமாகத் தரையில் ஓரிடத்தில் உட்கார்ந்தே சாப்பிடுவார்; பாயில்தான் படுத்து உறங்குவார். வீட்டில் முழுவதும் தூய தமிழிலேயே பேசுவார். காப்பியில் அவருக்கு ஈடுபாடு மிகுதி. அடிக்கடி குடிப்பார்; குறைந்த அளவினதாகக் குடிப்பார். இரவில் நாள்தோறும் இயன்றவரை நாட்குறிப்பு எழுதுவார். யாருக்கு எழுதினாலும் கைப்பட மடல் எழுதுவது அவரது வழக்கம். உறங்கு முன் சில நல்லறப் பாடல்கள் சொல்லிக் கொள்வார்; நாள்தோறும் ஐந்து மணித்துளி ஒருமை நினைவு கொள்வார்.

குழந்தைகளுடன் பழகும்போது வ.சுப.மா. ஒரு குழந்தை யாகவே மாறி விடுவார். குழந்தைகளுடன் அவர் தாயம் ஆடுவார்; 'ரிங் பால்' ஆடுவார்; அவர்களைத் திருக்குறளிலிருந்து ஓர் அதிகாரம் ஒப்பிக்குமாறு செய்து பத்துப் பைசா வழங்குவார்; அடிக்கடி அவர்களை வம்புக்கு இழுத்து மகிழ்வார். ஒரு முறை மகள் பொற்கொடி 'மாங்காய் மாலை' என்னும் நகைவேண்டும் என்று கேட்க, 'மாங்காய் மாலைதானே? மரத்திலே காய்த்துத்

தொங்குகிறது; சணலிலே கட்டித் தொங்கவிட்டுக் கொள்;' என்று நகை யாடினார் வ.சுப.மா.

## எழுத்துப் படைப்புக்கள்

வ.சுப.மா.வின் முதல் நூல் 'மனைவியின் உரிமை'. ஐந்து நாடகங்களின் தொகுப்பான அந்நூல் 1947-இல் வெளிவந்தது. முதல் படைப்பு வெளியான 1947 தொடங்கி 1989 வரையிலான 42 ஆண்டுக் காலப் பகுதியில், 23 நூல்களை வெளியிட்டு அன்னைத் தமிழ்மொழிக்கு வளமும் வனப்பும் சேர்த்தார் வ.சுப.மா.

'வள்ளுவம்' (1953), 'தமிழ்க் காதல்' (1962), 'கம்பர்' (1965) ஆகியன வ.சுப.மா.வின் ஆய்வு வன்மையைக் காட்டும் ஒரு பொருள் ஆய்வு நூல்கள். இவற்றுள் 'கம்பர்' தமிழக அரசின் பரிசினைப் பெற்ற நூலாகும்.

'தொல்காப்பியப் புதுமை' (1958), 'எந்தச் சிலம்பு' (1964), 'இலக்கிய விளக்கம்' (1972), 'சிந்தனைக் களங்கள்' (1975), 'ஒப்பியல் நோக்கு' (1978), 'தொல்காப்பியத் திறன்' (1984) என்பன வ.சுப.மா. வெளியிட்டுள்ள பல்பொருள் ஆய்வு நூல்கள்.

'மனைவியின் உரிமை' (1947), 'நெல்லிக்கனி' (1962), 'உப்பங்கழி' (1972), 'ஒரு நொடியில்' (1972) ஆகிய நான்கும் வ.சுப.மா.வின் படைப்பு நெஞ்சம் ஈன்ற புறந்தந்த நாடக நூல்கள்.

'கொடை விளக்கு' (1957), 'மாமலர்கள்' (1978), 'மாணிக்கக் குறள்' (1991) என்பன வ.சுப.மா.வின் கவிவண்ணம் காட்டும் கவிதை நூல்கள்.

'இரட்டைக் காப்பியங்கள்' (1958), 'நகரத்தார் அறப் பட்டயங்கள்' (1961) இரண்டும் வ.சுப.மா.வின் பதிப்பு நூல்கள்.

'தலைவர்களுக்கு' (1965) என்பது வ.சுப.மா. கடித வடிவைக் கையாண்டு எழுதியுள்ள நூல். 'தொல்காப்பியம்

எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழிமரபும் மாணிக்கவுரை' (1989), 'திருக்குறள் தெளிவுரை' (1991), 'நீதிநூல்கள் உரை' (1991) என்பன வ.சுப.மா. வெளியிட்டுள்ள உரை நூல்கள்.

'The Tamil Concept of Love', 'A Study of Tamil Verbs', 'Collected Papers', 'Tamilology' என்பன வ.சுப.மா. எழுதியுள்ள ஆங்கில நூல்கள்.

இவை தவிர, கையெழுத்துப் படிகளாக **உலக முரசு,** (உலக நிகழ்ச்சிகள் குறித்த வ. சுப.மா.வின் கருத்தோட்டங்கள்), **தற்சிந்தனைகள் (நாட்குறிப்பு)** என இரண்டு நூல்கள் உள்ளன. தமிழ் ஆர்வலர்களும் ஆய்வாளர்களும் இவ்விரு நூல்களும் அச்சு வடிவில் வெளிவரும் நாளை ஆவலோடு எதிர் நோக்கியுள்ளனர்.

மேலும், **பாரதீயம்** என்னும் தலைப்பில் ஒரு கற்பனைப் பொழிவு நூலையும், **நாட்டு மறை** என்ற இந்திய வேத நூல் ஒன்றினையும், **இந்தியச் செக்கு** என்னும் வ.உ.சி. பற்றிய ஒரு நாடக நூலையும், தொல்காப்பியம் போல **மாணிக்கம்** என்ற பெயரால் யாப்பில் ஓர் இலக்கண நூலையும் எழுதி முடிகக வேண்டும் என்ற திட்டமிட்டிருந்தார் வ.சுப.மா. ('தற் சிந்தனைகள்', கையெழுத்துப்படி, ப.8). ஆயின், அவரது திட்டம் கைகூடுவதற்கு முன்பே அவர் காலமானார்.

''பழமைக்குள் மூழ்கினாலும் புதுமை மேல் நீந்தினாலும் நாட்டின் எதிர்கால முன்னேற்றமும் நிகழ்கால நல்வாழ்வுமே என் எழுத்துக்களின் உள்ளொளி, என் எனை வகை நூல்களிலும் இவ்வொளிக்கதிர் பிறங்கக் காணலாம்'' (முன்னுரை, இலக்கியச் சாறு, ப. ix) என்னும் வாக்குமூலத்திற்கு ஏற்பவே வ.சுப.மா. வின் அனைத்து நூல்களும் அமைந்துள்ளன. எப்பொருள் எழுதினாலும் - எவ்வடிவினில் எழுதினாலும்- அவர் தம் ஒவ்வோர் எழுத்தையும் நாட்டின் எதிர்கால முன்னேற்றமும் நிகழ்கால நல்வாழ்வும் கருதியே உருவாக்கியுள்ளார்.

## பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஆதல்

வ.சுப.மா. 1979 ஆகஸ்டு 17 முதல் 1982 சூன் 30 முடிய,

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பொறுப் பேற்றிருந்தார். ஒரு சில ஆண்டுகளுக்கு முன் வெள்ளி விழாக் கண்ட இப்பல்கலைக்கழகத்தில் இதுவரை மூன்று தமிழறி ஞர்கள் துணைவேந்தர்களாக இருந்துள்ளனர். முதலில் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், தொடர்ந்து மு. வரதராசனார், பிறகு வ.சுப. மாணிக்கனார் என்ற இம்மூன்று தமிழ்த் துணைவேந்தர்களின் ஆட்சிக் காலத்தையும், பிற துணைவேந்தர்களின் ஆட்சிக் காலத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் உண்மை விளங்கும். முனைவர் தமிழண்ணல் கூறுவது போல், ''ஆட்சித் திறன் என்பது, தாம் சார்ந்த நிறுவனத்தை ஓர் அங்குலமேனும் உயர்த்துவது என முடிவெடுத்தால் தமிழ்த் துணைவேந்தர்களின் காலங்களே பெரிதும் காட்டாக அமையத்தக்கனவாகும். அதிலும் வ.சுப.மா.வின் காலம் கோபுரத்திற்குகக் கலசம் வைத்தது போன்ற சிறப்புடைய காலமாகும்'' ('துணைவேந்தர் வ.சுப.மா.', நகரத்தார் குரல், பிப்ரவரி 1993, ப.24). சாதாரண வெள்ளை அரைக்கைச் சட்டை, வேட்டி, தோளில் துண்டு இவற்றுடன் மிக எளிய தோற்றத்தில் வ.சுப.மா. பல்கலைக் கழக வளாகத்தில் காலடி எடுத்து வைத்தபோது, 'இத்தனை பெரிய பல்கலைக்கழகத்தை இவரால் எப்படிக் கொண்டு செலுத்த முடியும்?' என்றே பல்கலைக்கழக ஆசிரியர், ஆய்வாளர், அலுவலர் உள்ளிட்ட அனைவரும் நினைத்தனர். ஆயின், துணைவேந்தராகப் பொறுப்பேற்ற முதல் ஐந்து நாட்களிலேயே அவர் தம் தனித்தன்மையை வெளிப் படுத்தியதையும், தம் குறுகிய பதவிக் காலத்திற்குள் பல்வேறு ஆக்கப் பணிகள்ள மிகத் திறம்பட முடித்துக் காட்டியதையும் அவரிடம் நேர்முக உதவியாளராகப் பணியாற்றிய ஆர்.ஆர். சத்தியமூர்த்தி 'தமிழ்த் துணைவேந்தர்' என்னும் தலைப்பில் வ.சுப.மா. குறித்து எழுதிய ஒரு கட்டுரையில் நினைவு கூர்ந்துள்ளார் ('தமிழ் மாருதம்', வைகாசி 1993, பக்.25-27).

''நாளும் செய்ய வேண்டியவற்றைத் தம் கையேட்டில் குறித்துக் கொண்டு எவர் உதவியுமின்றித் தாமாகவே முடிவு எடுக்கும் திறன் பெற்றார். பல்கலைக் கழக வளர்ச்சியில் எப்போதும் நாட்டம் உடையவர். அதனால், கல்லூரி அல்லது

பொது நிகழ்ச்சிகளுக்குச் செல்வதை நிறுத்திக் கொள்வார். மடலோ, கோப்போ எதுவாயினும், நன்றாகப் படித்துப் பார்த்த பின்பே கையெழுத்திடுவார். முடிந்தால், உயர் அலுவலர் களிடமும் கலந்து சிந்திப்பார். பொதுமக்களுக்கும் மாணவர் களுக்கும் பயன்படும்படியாகவே எல்லாச் செயல்களும் அமைய வேண்டும் என்பார். ஒரு காசு செலவு செய்வதானாலும் அதனால் விளையும் பயனைத்தான் எண்ணுவார். தமது சொந்த வாழ்க்கையானாலும், பல்கலைக் கழகம் ஆனாலும், வசதி களைப் பெருக்கிக் கொள்ளலாகாது என்பார். கல்விப் பணி ஒன்றே நோக்கமாகக் கொண்டிருந்தார். பல வழிகளிலும் வரவு செலவுக் கணக்குப் பார்ப்பார்... தரம் பார்த்தே படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் மாணவர்களைச் சேர்க்க வேண்டும் என்பார். பெரிய இடங்களிலிருந்து வரும் பரிந்துரைகளுக்குச் செவி சாய்க்கமாட்டார்''

- துணைவேந்தர் வ.சுப.மா. குறித்து அவரது நேர்முக உதவியாளர் **ஆர்.ஆர். சத்தியமூர்த்தி** தீட்டியுள்ள அருமையான சொற்சித்திரம் இது !

மதுரையில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடை பெற்றபோது பல்கலைக்கழகத்தின் சார்பில் அரியதொரு கண் காட்சியை அமைத்துக் காட்டியமை, முதன்முதலாகப் பல் கலைக்கழக ஆசிரியர்களும் அலுவலர்களும் சொந்தமாக வீடு கட்டிக்கொள்ள கடனுதவி வழங்கும் திட்டத்தினைக் கொண்டு வந்தமை, ஆள்வினைத்துறை (M.B.A.), எரியந்துறை (School of Energy), வணிகவியல் துறை, மொழியியல் துறை, உலகத் தமிழ்ப்பணி (World Tamil Service), பதிப்புத்துறை (Pub-lication Unit), தமிழியற் புலம் (Tamilalogy) முதலான பத்துப் புதிய துறைகளைப் பல்கலைக்கழகத்தில் தொடங்கி யமை, தம் ஆசிரியரை நினைவுகூறும் வண்ணம் 'பண்டிதமணி அரங்'கினை நிறுவியமை, புலத்துறை விருந்தில்லத்தை உருவாக்கியமை, நுழைவாயிலில் கலைவாயிலை உருவாக் கியமை, பல்கலைக்கழக வளாகத்தில் அனைத்துக் கோப்புக் குறிப்புக்களும் தமிழிலேயே இருக்க வேண்டும் என ஆணை பிறப்பித்தமை, ஊதிய உயர்வு, பதவி உயர்வு, பணி உறுதி,

மருத்துவப்படி உயர்வு முதலான பல்வேறு நன்மைகளைப் பல்கலைக்கழக ஊழியர்களுக்கு நடைமுறைப் படுத்தியமை, எல்லாவற்றுக்கும் மேலாகப் பல்கலைக்கழக நிதி நிலைமை யைச் சீர்செய்து, இரண்டு கோடிக்கு மேல் சேமித்துக் காட்டியமை - இப்படிப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்தபோது வ.சுப.மா. நிகழ்த்திக் காட்டிய சாதனைகளைப் பட்டியலிட்டுக் கொண்டே செல்லலாம். என்றாலும், முழுமை யாக மூன்று ஆண்டுக்காலமும் துணைவேந்தர் பதவியில் இருக்காமல், பதவிக் காலம் முடிவதற்குச் சில மாதங்களுக்கு முன்னரே வ.சுப.மா. தாமாகவே விரும்பிப் பதவியிலிருந்து விலகினார்; ஆளுநருக்குக் கைப்பட எழுதிய கடிதத்தில் புதிய துணைவேந்தர் நியமனம் கல்வியாண்டின் தொடக்கத்தில் அமைவது பல்கலைக்கழகத்தின் வளர்ச்சிக்கு உகந்ததாக இருக்கும் என்ற கருத்தையும் வெளியிட்டிருந்தார்.

''பல்கலைக்கழகத்தின் கல்வியாண்டு சூலை முதல்நாள் தொடங்குவதாலும், புதியவர் அன்று முதல் பதவியேற்றால் செயல் முறைகளில் ஒரு கொள்கையோட்டமும் ஆட்சித் தொடரும் வலுவும் இருக்கும் என்ற நன்னோக்காலும் மூன்று திங்கட்கு முன்பே தமிழக ஆளுநர்க்கு எழுதி இசைவும் பெற்றேன்' எனத் துணைவேந்தர் பொறுப்பிலிருந்து தாம் விடுவிப்புப் பெற்றதற்கான காரணத்தை வ.சுப.மா. 'தற் சிந்தனைக'ளில் (கையெழுத்துப் படி, ப.3) குறித்துள்ளார்.

## திராவிட மொழியியற் கழகத்தின் பணி

துணைவேந்தர் பொறுப்பிலிருந்து விடுபட்ட பின்னர், வ.சுப.மா. திருவனந்தபுரம் 'திராவிட மொழியியற் கழக' த்தின் நிதித் துணையில் 'தமிழ் யாப்பியல் வரலாறும் வளர்ச்சியும்' என்ற தலைப்பில் சிறப்பானதோர் ஆய்வினை ஆங்கிலத்தில் மேற்கொண்டார். இப்பணிக்காகத் 'திராவிட மொழியியற் கழகம்' அவருக்கு முதுபேராய்வாளர் என்ற பதவியை நல்கிச் சிறப்பித்தது.

## 'தொல்காப்பியத் தகைஞ' ராகப் பணியாற்றல்

பாரதப் பெருநாட்டில் மொழிக்கெனத் தோன்றிய முதல்

பல்கலைக்கழகம் தமிழ்ப் பல்கலைக்கழகம் ஆகும். எம்.ஜி.ஆர். தமிழக முதல்வராகப் பொறுப்பேற்றிருந்த காலத்தில் இப்பல் கலைக்கழகம் தொடங்கப்பெற்றது. இப் பல்கலைக்கழகத்தின் வல்லுநர் குழுத் தலைவராக இருந்து பல்கலைக்கழக அமைப் பினை உருவாக்கிக் கொடுக்கும் ஒரு நற்பேறு வ.சுப.மா. வுக்குக் கிடைத்தது. இதன் முதல் துணைவேந்தராக அமைந்த வ. அய். சுப்பிரமணியனாரும் ஆட்சிக் குழுவினரும் தமிழ் முதல் நூலான தொல்காப்பியத்தின் தனிப்பெருமை கருதித் 'தொல்காப்பியப் புலத்தகைமை' என்ற ஓர் ஆய்வுக் கட்டிலை உண்டாக்கினர்; அதன் முதல் 'தொல்காப்பியத் தகைஞ'ராக இரண்டு ஆண்டுகள் (1985-86) இருக்குமாறு வ.சுப.மா.வுக்கு அழைப்பு விடுத்தனர். தொல்காப்பியத் தகைஞர் என்ற பேராய்வு நிலைக்கான அழைப்பினைப் பெருமகிழ்வுடன் ஏற்றார் வ. சுப. மா. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 'தொல்காப்பியத் தகைஞ' ராகப் பணியாற்றிய காலத்தில் புதிய விளக்கத்தோடும் எதிர்கால நோக்கோடும் புதிய இன்றைய வழக்குக் காட்டோடும் அவர் உருவாக்கிய நூலே 'தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழிமரபும் மாணிக்கவுரை' என்பதாகும். இந்நூல் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக 1989 அக்டோபரில் வெளிவந்தது. இக்கால கட்டத்தில் வ.சுப.மா.வின் மூத்தமகன் தொல்காப்பியனின் குடும்ப வாழ்வில் ஒரு சிக்கல் ஏற்பட்டது; அதைத் தீர்த்து வைப்பதற்காக வ.சுப.மா. அடிக்கடி வெளியூருக்கும் நீதிமன்றத்திற்கும் செல்ல நேர்ந்தது. இதனால் தொல்காப்பிய ஆய்வுப் பணியில் சிறிது காலத்தாழ்வு ஏற்பட்டது; இதற்காகப் பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டி, பல்கலைக்கழகத் துணைவேந்தர் வ.அய். சுப்பிரமணியனார்க்கு ஒரு மடல் எழுதினார் வ. சுப. மா. ஆயின், ஆறு திங்களுக்குள் விதியின் கை வ.சுப.மா.வின் வாழ்வியலை வேறு வகையாக எழுதி முடித்துவிட்டது!

## சிறப்புப் பட்டங்களும் விருதும் பெறுதல்

வ.சுப.மா. தம் வாழ்நாளில் பட்டங்களையோ விருது களையோ தேடித் திரியவில்லை; மாறாக, பல்வேறு சிறப்புப்

பட்டங்களும் உயரிய விருதுகளும் தாமாகவே வழி கேட்டுக் கொண்டு அவரை வந்தடைந்தன. இவருக்கு மேலைச் சிவபுரி சன்மார்க்க சபை **செம்மல்** என்னும் சிறப்புப் பட்டத்தையும், குன்றக்குடி ஆதீனம் **முதுபெரும் புலவர்** என்னும் சிறப்புப் பட்டத்தையும், ஈப்போ பாவாணர் தமிழ்ச் சங்கம் **பெருந்தமிழ்க் காவலர்** என்னும் சிறப்புப் பட்டத்தையும் நல்கின. முத்தாய்ப்பாக, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் பொன் விழாவின் போது (1979) இவருக்கு மூதறிஞர் (டி.லிட்.) பட்டம் நல்கிச் சிறப்புச் செய்தது. தமிழக அரசு இவரது மறைவுக்குப் பின் 1989-ஆம் ஆண்டிற்கான 'திருவள்ளுவர் விரு'தினை வழங்கிச் சிறப்பித்தது.

## பல்வேறு அமைப்பின் பணிகள்

'இந்தியப்பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற'த்திற்கும், 'தமிழகப் புலவர் குழு' விற்கும் மேலைச் சிவபுரி 'சன்மார்க்க சபை'க்கும், 'கணேசர் செந்தமிழ்க் கல்லூரிக் குழு'விற்கும் தலைவராக விளங்கி வ.சுப. மா. ஆற்றிய பணிகள் மிகப் பலவாகும். மேலும், தமிழ்க் கடல் இராய. சொ. அவர்களுடன் இணைந்து 'காரைக்குடி தமிழ்ச் சங்கம்' நிறுவிச் சங்க இலக்கிய வகுப்பு நடத்தியும், இளஞ்சிறுவர் சிறுமியர்க்கு 'அறநூல்கள் ஒப்பித்தல் போட்டி' நடத்திப் பரிசுகள் நல்கியும் ஒல்லும் வகையெல்லாம் தமிழ்த் தொண்டு செய்தார் அவர்.

## தமிழ் வழிக் கல்வியியக்கம்

மறைமலையடிகளார் 'தனித்தமிழ் இயக்கம்' கண்டது போல், வ.சுப.மா. 'கல்வித் துறையில் எங்கும் எதிலும் தமிழ் ஒன்றே பயிற்று மொழியாதல்; மழலைப் பள்ளியெல்லாம் தமிழ் வழிப் பள்ளியாதல்' என்னும் கொள்கையினைப் பரப்பும் நோக்கில் 'தமிழ் வழிக் கல்வியியக்கம்' கண்டார்; இயக்கத்தின் தலைமைப் பொறுப்பினை ஏற்று, தமிழகம் முழுவதும் தமிழ் பரப்பவும் பிறமொழித் தாகத்தைத் தீர்க்கவும் **தமிழ் யாத்திரை** தொடங்கினார்; இயக்கத்தின் செயல் நோக்கங்களையும், கருத்து விளக்கங்களையும் பரப்பு நெறிகளையும் தெரிவித்து அவர் ஓர்

அருமையான மொழியறிக்கையை வெளியிட்டார். இம் மொழியறிக்கையின் வாயிலாக வ.சுப.மா.வின் தமிழுணர் வினையும் திட்டமிடும் பாங்கினையும் தொலைநோக்குப் பார்வையினையும் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

'தமிழ் வழிக் கல்வியியக்கம்' போல் வ. சுப.மா. தம் வாழ்நாளில் முடித்துக் காட்டிய பிறிதோர் அருஞ்சாதனையும் உண்டு. தில்லைத் திருக்கோவிலில் பொன்னம்பலத்தின்கண் நின்று திருமுறைகளை ஓதி வழிபடும் வாய்ப்பு அண்மைக் காலம் வரை இல்லாமல் இருந்தது; வேண்டாத-பொருந்தாத -இம் மரபுக்கு எதிராகப் பேராசிரியர் **வெள்ளைவாரணனார்** போன்றோரின் துணையோடு போர்க்கொடி உயர்த்தி, தம் போராட்ட முயற்சியில் வெற்றியும் பெற்றார் வ.சுப.மா.

இங்ஙனம் எந்தப் பொறுப்பான பதவியிலும் இல்லாத நிலையில் வ.சுப.மா. தமிழுக்கும் தமிழர்க்கும் தமிழகத்திற்கும் ஆற்றிய தொண்டுகளைப் போற்றும் வகையிலேயே முத்தமிழ்க் காவலர் **கி.ஆ.பெ. விசுவநாதம்,** ''அப்பெருமான் (வ.சுப.மா.) மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திலிருந்து செய்த தமிழ்த் தொண்டுகளைவிட பதவியை விட்டு விலகிய பிறகு செய்த தமிழ்த் தொண்டுகள் மிகப் பலவாகும்'' ('வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வும் பணியும்', ப.4) என மதிப்பீடு செய்துள்ளார்.

## விருப்ப முறி

வ.சுப.மா., 22.8.1986-இல் வழக்கறிஞருடன் கலந்து பேசித் தம் விருப்ப முறியினை (உயிலை) எழுதினார்; அதில், தம் சொத்துக்களில் (Net Assets) ஆறில் ஒரு பங்கினை அற நிலையத்தின் (Trust) வைப்பு மூல நிதியாக (Capital Fund) வைத்து, அதிலிருந்து வரும் வருமானத்தினைத் தாம் பிறந்த ஊரான மேலைச் சிவபுரியில் கல்வி, மருத்துவம், நலவாழ்வு, குழந்தைகள் நலம், அஃறிணை உயிர்களின் நலம் முதலான ஊர்ப் பொது நலங்களுக்கு எவ்வகைச் சாதி சமய வேறுபாடுமின்றி இலவசமாகச் செலவு செய்ய வேண்டும் என்றும், தம் நூலகத்தில் தாம் தொகுத்து வைத்துள்ள நூல்கள்

எல்லா வற்றையும் காரைக்குடி அழகப்பர் பல்கலைக் கழகத்திற்கு அன்பளிப்பாக வழங்க வேண்டும் என்றும் குறித்திருந்தார். மேலும், 'என் குறிக்கோள்' எனத் தலைப்பிட்டு தம் விருப்ப முறியில் வ.சுப.மா. எழுதி வைத்துள்ள உயிரனைய வாழ்வியல் நெறிகள் வருமாறு:

' யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும், வாய்மையின் நல்ல பிற' என்ற வள்ளுவம், என் வாழ்க்கையில் என்ஞான்றும் கடைப்பிடித்து ஒழுகிவரும் உண்மை நெறி யாகும். என் எண்ணங்களும் செயல்களும் எழுத்துக்களும் முன்னேற்றங்களும் பணிமுறைகளும் வாய்மையாற் செம்மைப் பட்டன...

எளிய வாழ்வு, அளவான பேச்சு, எந்நிலையிலும் எதிர்கால நம்பிக்கை, பதவிகளைத் தொண்டாக மதித்தல், தன்னைப் பற்றிய திருத்தமான சிந்தனைகள், வாழ்க்கைத் திட்டங்கள், பெரியவர்களின் வரலாறுகளைப் படித்தல், சோர்வுக்கு இடங் கொடாத ஊக்கங்கள், பகட்டின்றித் தூய எண்ணத்தால் இறை வனை வழிபடுதல் இவையெல்லாம் நான் கண்ட முன்னேற்ற நெறிகள். தமிழுக்குத் தொல்காப்பியமும், வாழ்வின் உயர்வுக்குத் திருக்குறளும், உயிர்த் தூய்மைக்குத் திருவாசகமும் எனக்கு வழிகாட்டிய தமிழ் மறைகள்.

எங்கள் தாய்வழி அய்யாவுக்கும், ஆயாளுக்கும், என் ஆசான் இருமொழிப்புலமை சான்ற பண்டிதமணி கதிரேச னார்க்கும் நானும் என் வழியினரும் நன்றியுடையோம்'' (நகரத்தார் குரல், பிப்ரவரி 1993, பக். 17-18).

இவ்வாழ்வியல் நெறிகளைக் கசடறக் கற்று, அவற்றிற்குத் தக நிற்போர் எவராயினும், அவர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வர்; தம் வாழ்வில் எண்ணியாங்கு முன்னேறுவர்.

## இறுதிநாள்

**வ.சுப.மா. 24.4.1989- இல் பாண்டிச்சேரி பல்கலைக்கழக நாடகத் துறை ஆசிரியர் நியமனத் தேர்வுக்காகக் காரைக் குடியிலிருந்து புறப்பட்டுச் சென்றார்; காலை உணவை முடித்துக்**

கொண்டு, மதிய உணவிற்குச் சாதத்தைப் பொட்டலமாகக் கட்டி எடுத்துக்கொண்டு பேருந்தில் ஏறித் தஞ்சாவூர், கடலூர் வழியாகப் பாண்டிச்சேரிக்குப் பயணம் மேற்கொண்டார்; பாண்டிச்சேரி உப்பளம் அரசினர் சுற்றுலா விடுதியில் கீழே உள்ள ஓர் அறையில் தங்கினார்; இரவு 11 மணி வரை திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் பொன். சௌரிராசனுடன் பேசிக்கொண்டிருந்தார்; பிறகு உறங்கு வதற்காகத் தமது அறைக்குச் சென்றார்; அதுவரை அவரது உடல் நலம் நன்றாகவே இருந்தது. நள்ளிரவு 1 மணி அளவில் அவருக்கு அடிக்கடி இருமல் வந்தது; வாந்தியும் எடுத்தார்; உடற்சோர்வுக்கு இடந்தந்துவிடக்கூடாது என்ற எண்ணத்தில் வேக வேகமாக நடந்து பார்த்தார். ஆனால், சில மணித் துளிகளில் அவரது உடல்நிலை மிகவும் மோசமாயிற்று; கடுமையான நெஞ்சுவலி அவருக்கு ஏற்பட்டது; வாசலில் உள்ள படுக்கையில் இயலாமல் படுத்தார்; விடுதி வரவேற் பாளர்களிடம் 'மேலே உள்ளவர்களைக் கூப்பிடுங்கள்' என்றார்; துணைவேந்தரையும் அழைக்குமாறு பணித்தார்; அவ்வளவு தான்; நினைவிழந்த நிலையில் அவரை 'ஆம்புலன்'ஸில் ஏற்றி ஜிப்மர் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல முயன்றனர்; ஆனால் மருத்துவமனைக்குச் செல்லும் வழியிலேயே எப்போதும் தமிழ் தமிழ் தமிழ் என்றே ஒலித்துக் கொண்டிருந்த அந்த இனிய இதயம் நின்றுவிட்டிருந்தது; அண்ணாமலையில் பூத்து, காரைக்குடியில் காய்த்து, மதுரையில் பழுத்த அந்த மாங்கனி-தமிழன்னையின் இதயக் கனி - பாண்டிச்சேரியில் உதிர்ந்துவிட்டிருந்தது. 25.4.1989- **தமிழ் இமயம்** வ.சுப.மா. இல்லாமலே தமிழகம் விடியலைச் சந்தித்தது!

★★★

# 2. உரைநடையாளர்

*'நம் எழுத்தாளர்கள் சிறுசிறு தொடர்களையே உரைநடையமைப்பாகக் கருதிப் பின்பற்றாது, சிந்தனை யளவுக்குத் தக்க தொடரளவை ஏற்ற பெற்றி அமைக்க வேண்டும்.'*

-வ.சுப. மாணிக்கம்*

இருபதாம் நூற்றாண்டு உரைநடை உலகில் தம் செந்தமிழ் நடையால், செவ்விய நயத்தால், நடைமுறைப் பார்வையால், பழுத்த புலமையால், புதிய சொல்லாக்கத்தால், உவமைப் பெருக்கத்தால், படைப்பாக்கத் திறனால் 'நேமியொடு வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை நீர்செல, நிமிர்ந்த மாஅல் போல' (முல்லைப்பாட்டு, வரி 1-3) உயர்ந்து நிற்பவர் வ.சுப. மாணிக்கனார். அவரது அருந்தமிழ் நடையின் அழகும் ஆற்றலும் குறித்து - வண்ணமும் வனப்பும் குறித்து- இவ்வியலில் காண்போம்.

## செந்தமிழ் நடை

கலப்புத் தமிழ் நடை, பேச்சுத் தமிழ் நடை, எதுகை மோனைத் தொடை நடை, தனித்தமிழ் நடை, செந்தமிழ் நடை, மறுமலர்ச்சி நடை என இக்காலத்தில் வழங்கி வரும் உரை நடை வகைகள் பலவாகும். இவற்றுள் வ.சுப.மா.வின் நடை தூய செந்தமிழ் நடையாகும். பழைய உரையாசிரியர்களின் நடைப் போக்கைப் பின்பற்றி, பழந்தமிழ்ச் சொற்களுக்கு முன்னுரிமை வழங்கி தூய செந்தமிழ் நடையில் அவர் தம் நூல்களை உருவாக்கியுள்ளார். "என் நடை பற்றி ஒரு குறிப்பு: என் எழுத்துக்கள் கட்டளைச் சொற்களால் கட்டளை நடையால் அமைந்தவை; சொற்பல்குதல் என்ற மிகைக்கு இடமில்லா

---

★ சிந்தனைக் களங்கள், ப. 452.

தவை; செறிவு மிகுந்தவை; வேண்டுங்கால் புதிய சொல்லாக்கங்களும் புதிய சொல்வரவுகளும் புதிய தொடராட்சிகளும் உடையவை. நீண்ட செந்தமிழுக்கு எதனையும் நிறைவாகத் தூய்மையாகச் சொல்லவல்ல தற்கிழமைத் திறம் உண்டு; அம்மொழித் திறத்தைப் பயன்படுத்தும் பயில்திறம் எழுத்தாண்மையர்க்கு வேண்டும்; தூய செந்தமிழால் ஒருவர் எழுதவில்லையெனின், அது தமிழ்க் குறைபாடன்று; தெளிவும் உறுதியும் பயில்வும் இல்லா எழுதுகையர் குறைபாடு என்று உணர்வதே மெய்யுணர்வு'' (திருக்குறட் சுடர், 'ஆசிரியன் முன்னுரை', ப. X) என வ.சுப.மா.வே, தம் நடை பற்றிய கருத்தினைத் தெள்ளத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்திற்கு ஏற்ப, வ.சுப.மா. தெளிவும் உறுதியும் பயில்வும் உடைய எழுத்தாண்மையராக விளங்குகிறார்; சொற்செட்டும் செறிவும் வாய்ந்த தூய செந்தமிழ் நடையில் அவரது எழுத்துக்கள் அமைந்துள்ளன.

பிறிதோர் இடத்திலும் வ.சுப.மா. செவ்விய உரைநடை எது என்பது பற்றிய தம் கருத்தினை வெளியிட்டுள்ளார். ''செவ்விய உரைநடைக்குத் தொடர் இரத்தம் ஆகும்; சொற்கள் எலும்பு ஆகும். நல்ல தமிழ்ச் சொல்லும் பொருந்திய தொடர்ப்பாடும் பெருவரவாக அமைந்தால் தான் வருங்காலத் தமிழ் உரைநடை பின்வாங்காது சீர்மையும் நீர்மையும் நேர்மையும் பொலிந்து வானுயிர் தோற்றமாக வளரும்'' (சிந்தனைக் களங்கள், ப.454) என்பது அவரது அழுத்தமான கருத்து. 'எல்லார்க்கும் விளங்க வேண்டும், அதனோடு உரைநடைப் பண்புகளும் உடன் வளர வேண்டும். இவை முரணல்ல' என்பது அவரது ஆழமான நம்பிக்கை. மேலும், ''ஒரு நூல் வழக்குநடையால் அமைவது கற்பாருக்கு எளிதில் விளங்கும். வழக்கிற்கிடையே இலக்கிய நடை மிளிர்வது பன்முறை படிக்கும்படியான சுவையைக் கற்பவர்க்கு ஊட்டும்'' (காப்பியப் பார்வை, ப.126) என வழக்கு நடை, இலக்கிய நடை என்னும் இருவகை நடைகளுக்கு உரிய தனிப்பண்புகளைத் தெளிவு படுத்துவார் அவர். வ.சுப.மா. எல்லோர்க்கும் விளங்கும் வகையில் - எல்லோரும் விரும்பும் வகையில் - சிறுசிறு தொடர்களால் ஆன வாக்கியங்களைக் கையாண்டு எழுதுவதும் உண்டு; சிந்தனை நீளத்திற்கு ஏற்றவாறு

உம்மைகளும் எச்சங்களும் அமைய, நீண்ட தொடர்களால் ஆன வாக்கியங்களைக் கையாண்டு, ஆற்றொழுக்காக எழுதிச் செல்வதும் உண்டு. இவ்விரு வகையான நடைப் போக்கு களையும் அவரது எழுத்துக்களில் பரவலாகக் காணலாம். அவரைப் பொறுத்த வரையில், வாக்கிய அமைப்பை-அளவை-முடிவு செய்வது சிந்தனை நீளமே தவிர வேறு அன்று.

சிறுசிறு வாக்கியங்களால் ஆன வ.சுப.மா.வின் செந்தமிழ் நடைக்கு இரு சான்றுகள் இதோ:

1. ''எப் பருவத்தினரும் எந்நிலையினரும் செய்யக்கூடிய பொதுநலங்கள் ஏராளமாக உள்ளன. இவற்றைச் செய்வதற்குப் பணம் தேவையில்லை, மனமே தேவை. அழைப்புத் தேவையில்லை, உழைப்பே தேவை. அறிவு கூடத் தேவையில்லை; அன்பு கூடத் தேவை''
(திருக்குறட் சுடர், ப.28)

2. ''சங்க இலக்கியமும் அகத்திணையும் (காதலும்) என்பது யான் ஆராயக் கொண்ட ஆய்பொருள். சங்க இலக்கியமாவது எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமேயாம். இது பலர் ஒப்பிய முடிவு... சங்கத் தனிப்பாடல்களின் தொகை 2381 என்ப. அதனுள் அகத்திணை நுதலியவை 1862 என்ப. சங்கப் புலவர் தொகை 473 என்ப. அதனுள் அகம் பாடினோர் 378 சான்றோர் என்க'' (தமிழ்க் காதல், ப.9)

உம்மையும் எச்சமும் கொண்டு, நீண்ட வாக்கியங்களால் ஆன செந்தமிழ் நடைக்கு இரு சான்றுகள் வருமாறு:

1. ''காதல் என்பது இன்பத்துட் பேரின்பம், உணர்ச்சியுள் பேருணர்ச்சி, ஆற்றலுள் பேராற்றல், அடிப்படையுட் பேரடிப்படை, உரிமையுள் எல்லார்க்கும் உரியது, நட்பினுள் இருபாலாரையும் இணைப்பது, கல்வியுட் கசடறக் கற்க வேண்டுவது, நாணினுள் நனி நாணுடையது, ஒழுக்கத்துள் விழுமியது. இத்தகைய காதலை ஒவ்வொருவரும் விளங்கிக் கொள்ள வேண்டும்; அதன் வீறுகளையும் மாறுகளையும்

தெளிந்து கொள்ள வேண்டும்; இணக்கம்
பிணக்கங்களையெல்லாம் புரிந்துகொள்ள வேண்டும்''
(தமிழ்க் காதல், பக். 325-326)

2. ''தெய்வ இராமனை மக்களுட் சிறந்தானாகப் படைத்து, மக்கள் கூறும் இன்ப துன்பமெல்லாம் அவனுக்கும் உறுவித்து, தன் மனைவியைப் பிறன் கவர விடுத்த பெருந்துயரை அவனும் அடைந்தானாகக் காட்டி, எந் நிலையிலும் சீதை கற்பு நெறி நீங்காத் தமிழ்க் குறிக்கோளை நிலைநிறுத்தி, இவ்வுலகில் இல்லற மாட்சிகளை மக்கட்கு அறிவுறுத்துவதே இராம காப்பியம்''

(காப்பியப் பார்வை, ப. 157)

மொழிநடையைப் பொறுத்தவரையில், வ.சுப.மா. நீண்ட செந்தமிழ் நடையில் எதனையும் நிறைவாகத் தூய்மையாகச் சொல்லும் மொழித்திறத்தினையே பெரிதும் போற்றுகின்றார்; அம்மொழித் திறத்தைப் பயன்படுத்தும் பயில்திறமே எழுத்தாளர்க்கு வேண்டும் எனக் கருதுகின்றார். அவருடைய கருத்தில் சங்கப் பனுவலாம் பதிற்றுப்பத்தின் தமிழ் நடையும் பழகு தமிழ் நடையே. எப்படித் தெரியுமா? எப்போது தெரியுமா? இதோ, அவரே கூறுகிறார், கேட்போம்: ''ஈராயிரம் ஆண்டுப் பிந்திய இன்று கூடப் பதிற்றுப்பத்துத் தமிழ் பழகுதமிழ் என்பது என் போல்வார் கருத்து. சங்க நூலில் நூறு செய்யுட்களையோ பதிற்றுப்பத்தில் இரண்டு மூன்று பத்துக்களையோ பயில் வருத்தம் பாராது சில முறை படித்துப் பயிலுங்கள், அருமை எளிமையாகும். உழைப்பு மேலும் சங்க இலக்கியம் படிக்கத் தூண்டும் அழைப்பாகும். எக்காலத் தமிழும் என்றும் விளங்கும் என்பது கருதியன்றோ கன்னித் தமிழ் என்று நம் அன்னைத் தமிழை வணங்குகின்றோம்'' (சங்க நெறி, ப. 144).

பயில் வருத்தம் பாராது, மனம் கலந்து, சில முறை பயின்றால், எவ்வளவு அரிய தமிழும் எளிய தமிழாகும்-இனிய தமிழாகும், 'அருமையில் எளிய அழகே போற்றி' என்று மணிவாசகரைப் போல் தமிழைப் போற்றிப் புகழும் நிலை வரும் என்பதிலே அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவராக விளங்குகின்றார் வ.சுப.மா.

## நயப் பார்வை

தமிழ் கூறு நல்லுலகம் உ.வே. சாமிநாதையரைப் 'பதிப்புத் தந்தை' எனவும், மறைமலையடிகளாரைத் 'தனித்தமிழ் இயக்கத் தந்தை' எனவும், பண்டிதமணி மு. கதிரேசனாரைத் 'தமிழ் நயத் தந்தை' எனவும் சிறப்பித்துப் பேசும். இம் மூவருள் பண்டித மணியார் இலக்கியச் சுவையில் நயங்காணும் புதிய உத்தி முறையைக் கண்டவர்; பாடல் முழுவதையும் மீண்டும் காட்டா மல், முழுப் பாடலை மனத்திலே தேக்கி வைத்துக் கொண்டு, இலக்கியச் செவ்வியுடைய இடங்களை மட்டும் தேர்ந்து அவற்றை நுட்பமான முறையில் நயம்படக் காட்டுவது அவரது இயல்பு. பண்டிதமணியாரை 'ஆசிரியராகவும் அறிவுத் தந்தையாகவும் வாழ்வின் ஞாயிறாகவும் தம் வாழ்வுப் பயிர் விளையும் தமிழ் நன்செய்யாகவும் நெஞ்சத் தாமரையில் குடிகொண்டிருக்கும் தெய்வமாகவும்' (ஒப்பியல் நோக்கு, ப.183) போற்றும் வ.சுப.மா., இலக்கிய நயம் காணும் நெறியில் பண்டிதமணியாரையே பெரிதும் பின்பற்றிச் செல்கின்றார். சொல் நயம், தொடர் நயம், அடை நயம், பொருள் நயம், நிரல் நயம், இலக்கண நயம், குறிப்பு நயம் எனப் பல்வகை நயங்களையும் பாங்குறக் காட்டும் நோக்கோடு அவர் எழுதி யுள்ள இடங்கள் வானத்து மீனினும் வையை யாற்று மணலினும் தவப் பலவாகும். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பதமாக, "தமிழ்நாடு என்பது நம் தாயகத்தின் பெயர். நாட்டின் பெயரே 'தமிழை நாடுக' என்று மொழிப் பற்றையும் குழைத்து ஊட்டக் காண்மின்! தமிழைப் படி என்று ஏவல் செய்வதை ஓர்மின்!" (சங்க நெறி, ப.10) எனத் 'தமிழ்நாடு' என்ற பெயரிலேயே நயம் கண்டு எழுதியிருக்கும் இடத்தைச் சுட்டிக்காட்டலாம்.

ஒன்றை அல்லது ஒருவரைப் பார்ப்பது என்பது வேறு; காண்பது என்பது வேறு; நோக்குவது என்பது வேறு. இம் மூன்றனுள் 'நோக்குதல்' என்ற சொல்லின் பொருள் திட்பமும் நுட்பமும் பொருந்தியதாகும். "நோக்கு என்பது மேலோடான பார்வையன்று; அழுந்திக் காணும் அகக் காட்சி. 'பிறன்மனை நோக்காத பேராண்மை' என்ற குறட் பகுதியில் இப்பொரு ளுண்மை அறிக. 'நோக்காத' என்னும் சொல்லாட்சியால் பிறன்

மனைவியை மனத்துட் கொளல் பிழை என்பதூஉம், இயல்பாய் கண் பார்வை பிழையன்று என்பதூஉம் பெறப்படும்'' (வள்ளுவம், ப.13) என 'நோக்கு' என்ற சொல்லின் பொருண்மையினையும் நயத்தினையும் எடுத்துக்காட்டுகின்றார். வ.சுப.மா. மேலும், 'கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்' (வள்ளுவர்), 'நோக்கு அரிய நோக்கே' (மாணிக்கவாசகர்), 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' (கம்பர்) ஆகிய பெரும்புலவர்களின் வாக்குகளையும் அவர் தம் கருத்திற்கு அரணாக எடுத்தாளுகின்றார். 'புலவன் பாடலில் தொடுக்கும் ஒவ்வொரு சொல்லும் பொருட்கு இன்றியமையாச் சொல் என்றும், மாற்றினால் நயம் கெட்டுப்போம் என்றும் கூறுப' (இலக்கியச் சாறு, ப.190) என்னும் அவரது கருத்து இங்கே நினைவுகூரத்தக்கதாகும்.

> *'கள்ளிருக்கும் மலர்க்கூந்தற் சானகியை*
> *மனச் சிறையிற் கரந்த காதல்*
> *உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து*
> *தடவியதோ ஒருவன் வாளி'*

என்பது மண்டோதரியின் முடிவுப் புலம்பலாய் வரும் புகழ்பெற்ற கம்ப சித்திரம். இதில் இடம்பெறும் 'ஒருவன் வாளி' என்ற இறுதித் தொடர் காப்பிய நோக்கிலும் போக்கிலும் மிகவும் இன்றியமையாதது. இதற்கு வ.சுப.மா. எழுதியிருக்கும் நுண்ணிய நயக் குறிப்பு வருமாறு: 'ஒருவன் வாளி' என்ற இறுதித் தொடர் புதுக்குறிப்புக் காட்டுவது. 'ஒப்பற்ற வண்மை யான அம்பு' என்பது பொருள். வல்வில் ஓரி என்பது போல 'வன்' என்பது வாளிக்கு அடை. ஏனை அம்புகள் உடலைத் தான் துளைக்கும். இராமன் விடுத்த அம்போ இராவணன்தன் உடலுக்குட் புகுந்து அகத்தையும் துளைத்துக் காதலெண்ணத் தையும் தடவிப் பார்த்தது என்பதனால், 'வன்வாளி' எனப் பாராட்டப்பட்டது. இவ்விடத்து இத் தொடருக்கு 'ஒப்பற்ற ஒருவனது அம்பு' எனப் பொருள் கூறல் கவியுள்ளம் ஆகாது. வகரத்தின் முன் லகரம் னகரமாகத் திரியும் சிலவிடங்கள் உள. நன்வாயாகுதல், வென்வேலோன் குன்று, வென்வேற்கிள்ளி என்ற ஆட்சிகளைக் காண்க'' (கம்பர், ப.115). வ.சுப.மா. இதுபோல் காட்டியிருக்கும் தொடர் நயங்கள் மிகப் பலவாகும்.

காப்பிய இலக்கியம், சிற்றிலக்கியம், நீதி இலக்கியம், புதின இலக்கியம் என்பன போல் தொல்காப்பியம் **இலக்கண இலக்கியம்** என்ற புதுப்பெயர் பெறும் தகுதியுடையது என்பது வ.சுப.மா.வின் கருத்து. 'இலக்கணப் புகழ் சான்ற தொல் காப்பியம் இலக்கியமும் ஆகும்' என்ற ஒரு புதுப்பாங்கினைப் புலப்படுத்தும் வகையில் 'தொல்காப்பிய நயம்' என்னும் தலைப்பில் அவர் ஓர் அரிய கட்டுரையினைப் படைத்துள்ளார். அக்கட்டுரையின் தொடக்கத்தில்,

*'வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்*
*பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து*
*பொலிமின்'*

என்ற தொல்காப்பிய அடிகளில்-அடைகளில்-பொதிந்து கிடக்கும் நயக்குறிப்புக்களை அவர் நன்கு எடுத்துக் காட்டி யுள்ளார். ''(இத்) தொல்காப்பிய அடிகள் நாம் விரும்பிய தெய்வத்தை வழிபடும் உரிமையையும், இறைவன் காப்பான், நன்றாக, வளமாக இம்மையில் வாழலாம் என்ற நம்பிக்கை யையும் தருகின்றன. தெய்வத்துக்கு 'வழிபடு' என்ற அடையும், செல்வத்துக்குப் 'பழிதீர்' என்ற அடையும் வெல்லுஞ் சொல்லாக அமைந்துள்ளன'' (தொல்காப்பியக் கடல், ப.1) என்பது அவர் காட்டும் அடை நயம் ஆகும்.

*'ஒன்றே வேறே என்றிரு பால்வயின்*
*ஒன்றி உயர்ந்த பால தாணையின்*
*ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'*

என்பது தொல்காப்பியக் களவியலில் இடம்பெறும் ஓர் அருமையான நூற்பா. இந்நூற்பாவுக்கு வ.சுப.மா. எழுதியுள்ள பொருள் விளக்கம் - நயக்குறிப்பு - பயில்தொறும் இலக்கிய இன்பம் பயக்கும் பான்மையதாகும்: ''உயர்ந்த பாலின் ஆணையால் - நல்லூழின் ஏவலால்-காதற் காட்சி நிகழும் என்பர் தொல்காப்பியர். கிழவன் கிழத்தியைக் காண்பான் என்றோ, கிழத்தி கிழவனைக் காண்பாள் என்றோ, எழுவாயும் செயப்படுபொருளுமாகத் தொல்காப்பியம் நடை தொடுக்க வில்லை. 'முந்திக் காதலித்தவர் யார்?' என்ற வினாவுக்கு இடம் வையாமல், இருவர் பார்வையும் ஒரே நேரத்தில் விழுந்தது

என்ற காதலியல்பு புலப்ப –, 'கிழவனும் கிழத்தியும் காண்ப' என இருவரையும் எழு[illegible]க வைத்துக் காட்டும் நடைப்பாடு அறியத்தகும்'' (தமிழ்க் [illegible] ப.43). இலக்கண நயமும், மலரினும் மெல்லிய காதல் இயல்பும் ஒருங்கே வெளிப்படும் உயரிய பகுதி இது.

அணி செய் காவியம் கற்கும் போதே, அதனுள் ஆழ்ந் திருக்கும் கவியுள்ளத்தையும் கண்டுகொள்கிறார் வ.சுப.மா. நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தின் தொடக்கத்தில் இருக்கும் இயற்கை வாழ்த்துக்கு அவர் காட்டியிருக்கும் குறிப்பு நயம் இவ் வகையில் நினைவுகூரத்தக்கதாகும்: '' 'திங்களைப் போற்றுதும்' என்பதனால் பூம்புகாரில் கண்ணகியின் மெல்லிய பண்புகளும், 'ஞாயிறு போற்றுதும்' என்பதனால் மதுரையில் அவள்தன் வல்லிய செயல்களும், 'மாமழை போற்றுதும்' என்பதனால் வஞ்சியில் சிலம்பணி காட்டுதல், வரந்தருதல் முதலான நல்லிய நிகழ்ச்சிகளும் குறிப்பிற் புலனாகின்றன'' (காப்பியப் பார்வை, ப.233).

இதேபோல்,

> 'துச்சாதனன் எழுந்தே–அன்னை
> துகிலினை மன்றிடை யுரிதலுற்றான்'

என வரும் பாரதியின் 'பாஞ்சாலி சபத' வரிகளுக்கு வ.சுப.மா. கூறியுள்ள குறிப்பு நயங்களும் நினைந்து நினைந்து மகிழத் தக்கவை; நெஞ்சம் நெகிழத் தக்கவை:

''திரௌபதி துகில் என்னாது அன்னை துகில் என்று சொல்லுங்கால், தாயின் துகிலை உரிந்தவன் கொடுமை சட்டெனப் பதிவதோடு, சினவுணர்ச்சியும் தோன்றி விடு கின்றது. 'மன்றிடை யுரிதலுற்றான்' என்றபோது, அவையின் சிறுமையும் உடன் தோன்றக் காண்கின்றோம். 'அன்னை' என்றதனால் உரியத் தகாதவள் துகிலை உரிந்தான் என்ற குறிப்பும், இந்நிகழ்ச்சியைச் சொல்ல வந்த கவிஞனின் அறமும் புலப்படுகின்றன'' (இலக்கியச் சாறு, ப.191).

'காந்திக் கவிதை' என்பது தனக்குவமை இல்லாத காந்தியடி களைப் பொருளாகக் கொண்ட கவிதை நூல்; தமிழ்க் கடல்

இராய.சொ. இந்நூலின் ஆசிரியர். இதில் வரும் தலைவி தமிழே பயின்று, கதரே சுமந்து தளரும் இடை' உடையவளாகக் காட்டப் பெறுகின்றாள். இங்கே எவருக்கும் ஓர் ஐயம் எழலாம். மென்மையான பண்பு கொண்ட தலைவியின் இடைத் தளர்ச் சிக்கு முரட்டுக் கதர் ஆடை அணிதல் காரணம் என்பது சரி; தமிழ் பயில்தல் தலைவியின் இடைத் தளர்வுக்கு எப்படிக் காரணம் ஆகும்? இவ்வினாவுக்கு உரிய விடையினைப் பயில்வோர் அறிவு தித்திக்குமாறு உரைக்கின்றார் வ.சுப.மா. இதோ அவரது நயக்குறிப்பு: ''சிலர் இருந்து படிப்பர்; சிலரோ நடந்து நடந்து படிப்பர். இக்காந்தித் தலைவி நடந்து தமிழ் நூலை ஏந்திப் படிப்பவள் ஆதலின் தமிழும் அவளின் நுசுப்புத் தளர்ச்சிக்குக் காரணமாயிற்று. தமிழ்ப் படிப்பு மெலிவு தரும் என்பதனைத் 'தமிழின் துறைவாய் நுழைந்தனையோ' என்ற திருக்கோவை வினாவால் உய்த்துணரலாம்'' (இலக்கியச் சாறு, ப.167).

இங்ஙனம் 'உயர்நிலைப் பாவலர் மயர்வற ஆக்கிய' விழுமிய சொல்லிலும் தொடரிலும் பொருளிலும் நுண்ணிய நயம்பல காணும் நற்றிறம் கொண்ட வ.சுப.மா., பிற சான்றோர்கள் கூறிய அரிய நயங்களை மேற்கோள் காட்டும் பேருள்ளம் படைத்தவராகவும் விளங்குகின்றார். காட்டாக, ''இலவம் பஞ்சிற் றுயில்'' என்னும் ஆத்திசூடி வரிக்கு மகாவித் துவான் இராகவையங்கார் கூறும் நயமான பொருள் விளக்கத் தினை வ.சுப.மா. தம் 'நீதி விளக்கம்' என்னும் கட்டுரையில் மேற்கோள் காட்டியிருப்பதைச் சுட்டலாம். ''இலவம் பஞ்சிற் றுயில்'' என்பதன் பொருள் என்ன? இலவம் பஞ்சாலான மெத்தையில் படுத்துறங்கு என்பது பொதுப்பட்ட பொருள். இஃது பலர்க்குப் பொருத்தமான அறம் அன்று என்பர் பாரி காதை பாடிய மகாவித்துவான் இராகவையங்கார். 'இலவம் பஞ்சு போலத் துயில்க' என்பது இவர்தம் பொருள். இன் என்பது ஒப்புப் பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமையுருபு எனவும் சிறுகாற்று வீசினும் பஞ்சு அசைவது போலச் சிறு அரவம் கேட்டாலும் விழித்துக் கொள்ளும் மென்துயில் வேண்டும் எனவும் இவர் விளக்கம் தருவர். உறக்கம் துயில் என்ற வினைச் சொற்களுக்கு உள்ள வேறுபாட்டை நினைத்து இப்பொருள் செய்வர்'' (திருக்குறட் சுடர், ப. 121).

## நடைமுறைக் கண்ணோட்டம்

'திருக்குறள்...வினையின் நீங்கி விளங்கிய அறிவன் கண்ட தலைநூல். அந்நூலை நடைமுறைக் கண்ணோடு பார்க்க வேண்டும்; நாள் நிகழ்ச்சிகளோடு உராய வேண்டும்; காலப் போக்கோடு ஒத்திட்டுக் காண வேண்டும்' (திருக்குறட் சுடர், ப.1) என்பது வ.சுப.மா.வின் கருத்து. இக்கருத்தினை அடியொற்றியே அவரது எழுத்தும் பேச்சும் எப்போதும் அமையும். எந்த நூலையும் நடைமுறைக் கண் கொண்டு பார்ப்பது-நாள் நிகழ்ச்சிகளோடு உராய்ந்து நோக்குவது-காலப்போக்கோடு ஒத்திட்டுக் காண்பது அவரது சிறப் பியல்பாகும்; தனிப்பண்பும் ஆகும். உலக நடப்புகள், மக்களின் பேச்சு வழக்குகள், நடைமுறை நிகழ்ச்சிகள், அன்றாடப் பத்திரிகைச் செய்திகள், திரையிசைப் பாடல்கள், தெரு வாசகங்கள், விளம்பர முழக்கங்கள், நொடிக் கதைகள் முதலான வற்றைத் தம் நடையின் இடையிடையே கையாண்டு எழுதிச் செல்லும் போக்கினை வ.சுப.மா.விடம் சிறப்பாகக் காணலாம். சிந்தையை அள்ளும் சீரிய சில சான்றுகளின் வழி நின்று நாம் இக்கருத்தினை நிறுவலாம்.

'இலக்கியத்தில் காணப்படும் வைப்புமுறைக்கு-வரிசை நிரலுக்கு-கருத்து உண்டு, கட்டுப்பாடு உண்டு, அழகும் உண்டு' என்னும் செய்தியினை விளக்க முற்படும்போது, வ.சுப.மா. நடைமுறைச் சான்ற ஒன்றை நயமாசக் காட்டுவார். 'நாட்டுத் தலைவர்கள் வானூர்தியிலிருந்து இறங்கும்போது, முதற்கை கொடுப்பார் யார், அடுத்த கை கொடுப்பார் யார், பிற்கைகள் யார் யார் கொடுப்பார் என்ற வரிசை முறையை நாம் காண்கிறோம் அல்லவா?' (தொல்காப்பியக் கடல், ப.267) என்பது அவர் சுட்டிக்காட்டும் உலக நடப்பு.

அகத்திணையின் உட்பிரிவுகள் மூன்று: 1. கைக்கிளை 2. பெருந்திணை 3. ஐந்திணை. அவற்றுள் கைக்கிளையாவது நிகழா ஒழுக்கம்; பெருந்திணையாவது கழிபேரொழுக்கம்; ஐந்திணையாவது இயல்பொழுக்கம். இக்கருத்தினை எல் லோரும் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் எப்படி விளக்கலாம்? இதோ, அன்றாட நிகழ்ச்சி ஒன்றினைக் கொண்டு

வ.சுப.மா. இக்கருத்தினை எவ்வளவு எளிதாக விளக்குகிறார் என்பதைப் பாருங்கள்: 'உனக்குக் குழந்தைகள் எத்தனை என்று ஒரு மாதினை வினவின், உள்ள குழந்தைகளையும் கூறுவாள்; கருவிற் சிதைந்தவற்றையும் கழிசடையாய்ச் சென்றவற்றையும் உடன்மொழிவாள். அகத்திணைத் தாயின் முப்பகுதிக் குழந்தைகளும் இத்தன்மையனவே' (தமிழ்க் காதல், ப.258).

இதே போல், தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் அகம், புறம் என்னும் இரு பிரிவுகளை விளக்கும்போதும் உலகியலிலிருந்து ஓர் எளிய உதாரணத்தை எடுத்துக்காட்டி எழுதிச் செல்வார் வ.சுப.மா. 'ஒரு நாணயத்திற்கு முன்பின் என இரு பக்கம் உண்டு. முன்பக்கம் நன்றாக இருந்து பின்பக்கம் தேய்ந்திருந்தாலும் காசு செல்லாது; பின்பக்கம் நன்றாக இருந்து முன்பக்கம் சிதைந்திருந்தாலும் காசு நாணயப்படாது. நாணயத்தின் எப்பக்கம் சிறந்தது என்பது சரியான கேள்வியில்லை. எப்பக்கம் சிறவாவிட்டாலும், நாணயத்தின் மதிப்புக் கெட்டு விடும். இரு பக்கமும் ஒத்த சமநிலை பெற்றிருந்தாற்றான் நாணயம் வழங்கும். நாணயம் போன்றது தமிழர் கண்ட பொருளதிகாரம்' (சங்க நெறி, பக். 64-65). இங்ஙனம் தமிழினத்தின் வாழ்க்கையில் அகமும் புறமும்- காதலும் வீரமும், ஒரு பொருளாக - சமனிலையாக - கலந்திருந்த பான்மையினை வ.சுப. மா. விளக்கியிருக்கும் பாங்கு பயில்வார் நெஞ்சை அள்ளுவதாகும்.

அழகு பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டிய ஓர் அடிப்படையான உண்மை 'இயற்கை யழகே அழகு' என்பதாகும். தன்னியல்புக் காட்சி ஓர் அணி. இதனைத் தன்மையணி என்பர் அணி நூலார். இக் கருத்திற்கு அரணாக இன்று செய்தித்தாளில் விளம்பரஞ் செய்வார் சிலர் வெள்ளைப் பகுதியாக விளம்பரம் கொடுப்பதைச் சுட்டிக்காட்டுகிறார் வ.சுப.மா. (திருக்குறட் சுடர், ப.36).

மக்கள் தொகையில் ஐந்து கோடித் தமிழர் இருந்தும், ஒரு நூலின் ஆயிரம் படிகள் விற்பதற்கு மாமாங்கம் ஆகின்றது. நூல்கள் வாங்கும் பழக்கம் தமிழ் மக்களிடம் குறைவாக இருப்பதே இதற்குக் காரணம் ஆகும். இன்றைய நிலையில்

வீட்டு நூலகம் வைத்திருக்கும் தமிழரின் எண்ணிக்கை எத்தனை? இவ்வினாவிற்கு வரும் விடை உறுதியாக மன நிறைவைத் தருவதாக இராது. இவ்விழிநிலை நீங்க வேண்டு மானால் என்ன செய்ய வேண்டும்? இதோ, இன்றைய குடும்ப நலத்திட்ட விளம்பர முழக்கங்களை எடுத்துக்காட்டி, வ.சுப.மா. கூறும் வழிவகையினைப் பார்ப்போம்:

''நூல்கள் வாங்கும் அறிவுப் பழக்கத்தை மக்களிடம் பரப்ப வேண்டும். குடும்ப நலத்திட்டத்துக்கு எவ்வளவு பறைப்பு நடக்கின்றது? 'இரண்டே பெறுக இனிதே வாழ்க; அதிகம் பெறாதே அவதிப்படாதே; நாமிருவர் நமக்கொருவர்; ஒன்று பெற்றால் ஒளிமயம்; அளவோடு பெற்று வளமோடு வாழ்க; ஒன்றுக்குப்பின் இப்போது வேண்டாம், இரண்டுக்குப் பின் எப்போதும் வேண்டாம்' என்று எவ்வளவு புதுமுழக்கங்கள்; அத்தகைய பறைப்பும் முழக்கமும் நூலுக்கும் வேண்டும். 'வீட்டுக்கு ஒரு நூலகம்; புத்தகம் வாங்கிப் புத்தகம் பெறுக; ஏடுகள் வாங்கின் கேடுகள் நீங்கும்.' இத்தகைய பறையரவம் இருந்தால், வீட்டு நூலகங்கள் பெருகும்'' (இலக்கியச் சாறு, ப.4).

இங்ஙனம் இன்றைய நடைமுறை வழக்கில் நிலவும் பல்வேறு குடும்பநலத்திட்ட முழக்கங்களை எடுத்துக்காட்டி, அவற்றுக்கு இணையாக வீட்டு நூலகங்களில் கையாளுவதற்கு ஏற்ற புதிய முழக்கங்களையும் வ.சுப.மா. சுட்டியிருப்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

இலக்கியத் தரம் வாய்ந்த திரைப்பாடல்களின் மீது வ.சுப.மா.வுக்கு ஆழ்ந்த ஈடுபாடு உண்டு. அவற்றை அவர் தம் எழுத்துக்களின் இடையிடையே மேற்கோள் காட்டிச் செல்வதும் உண்டு. சான்றாக, 'சங்க அகவிலக்கியம் பின்னைத் தமிழி லக்கியங்களையெல்லாம் ஒரு திறம்பட உருவாக்கியுள்ளது... தமிழ் மொழிக்கண் யார் பாடிய, எக்காலத்தைய, எவ்வகைப் பாட்டாயினும், தெய்வப் பாசுரமாயினும், நாடகப் பாணி யாயினும், நாடோடிப் பாடலாயினும், திரைப்பாட்டாயினும், காதல் பாடுங்காலை அகத்திணைச் சுவடு பதிந்திருக்கும்' (தமிழ்க் காதல், ப.318) என்னும் கருத்தினை விளக்க வரும்

வ.சுப.மா., " 'பாலிருக்கும் பழமிருக்கும் பசியிருக்காது, பஞ்சணையில் காற்றுவரும் தூக்கம் வராது' என வரும் கண்ணதாசன் திரைப்பாடலில் 'பசியட நிற்றல்', 'கண்துயில் மறுத்தல்' என்னும் மெய்ப்பாடுகள் அமைந்துள" (தமிழ்க் காதல், ப.320) எனக் கண்ணதாசனின் திரைப்பாடலிலிருந்து மேற்கோள் காட்டுவதைச் சுட்டலாம். "இவ்வாண்டில் எடுத்த 'இராசராச சோழன்' திரைப்படத்தில் 'மணிமுடியில் தொல் காப்பியம் வீற்றிருக்கும்' என்று இராசராச சோழனே பாடுவதைக் கேட்கும்போது நமக்கு உயிர் குளிர்கிறது; உடல் சிலிர்க்கிறது. இன்று தமிழுக்கு ஒரு நற்காலம்" (தொல்காப்பியக் கடல், ப.193) எனப் பிறிதோரிடத்தில் இன்றைய திரைப் பாடலிலிருந்து ஓர் அழகான வரியை மேற்கோள் காட்டியுள்ளார் வ.சுப.மா.

'படைப்பிலக்கியப் பாங்கு' என்பது அண்ணாமலை நகரில் 23.3.1987-இல் நிகழ்ந்த தமிழ் எழுத்தாளர் மாநாட்டில் வ.சுப.மா. ஆற்றிய பொதுமுதன்மையுரையாகும். இதில் அவர் 'பூவிழி வாசலிலே' என அண்மையில் வெளிவந்த திரைப் படத்தி லிருந்து ஊமைக் குழந்தை தன்னைக் காத்துவரும் நல்லவன் மேல் குற்றம் சாட்டும் காவலனை நோக்கிக் குத்து வாளை எறியும் ஒரு சுவையான காட்சியைச் சுட்டிக்காட்டி, இதற்கு இணையாகச் சிலப்பதிகாரத்தில் வரும்,

> *'தருகெனத் தந்து தன்முன் வைப்பக்*
> *கண்ணகி அணிமணிக் காற்சிலம் புடைப்ப*
> *மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே'*

என்னும் வரிகளை எடுத்துக்காட்டி, 'இந்தத் திரையுத்தி பழைய இலக்கியவுத்தியின் மீட்சியாகும்' என்ற கருத்தினை நிறுவு கின்றார் (இலக்கியச் சாறு, ப.17).

வரலாற்றில்-வாழ்க்கையில்-நடந்த சில சுவையான, நெஞ்சைத் தொடவல்ல சிறுசிறு நிகழ்ச்சிகளைச் சுட்டிக்காட்டி எழுதிச் செல்லும் போக்கினையும் வ.சுப.மா. விடம் காண்கிறோம். ஓர் எடுத்துக்காட்டு:

"அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் முப்பது ஆண்டு கட்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சி. மறைமலையடிகளார் பல்கலைக்கழகப் பேரவையில் ஆயிரக்கணக்கான மாணவர்

முன்னும் ஆசிரியர் முன்னும் தமிழர் நாகரிகம் குறித்துத் தமக்கே உரிய இனிய குரலில் சொற்பொழிவு ஆற்றினர். ஆற்றி வரும்போது அயல்நாகரிகக் கலப்பினை எடுத்துக்காட்டினர். காட்டிவரும் போது உள்ளம் கொதித்துச் சினம் தோன்றி, தமிழர்க்கு 'ரோஷம்' வேண்டாமா-என்று கேட்டனர். ரோஷம் என்ற வடசொல்லை அச்சமயத்துப் பயன்படுத்தியவர் யார்? தனித்தமிழ் இலக்கியத் தந்தை மறைமலையடிகள்'' (இலக்கியச் சாறு, பக. 133-134).

உணர்ச்சி வயப்பட்ட சில நேரங்களில் நம்மையும் மீறி நாம் விரும்பாத சில சொற்கள் நம் வாயிலிருந்து வெளிவந்துவிடுவது உண்டு. இவ் அனுபவ உண்மைக்குத் தக்க சான்றே வ.சுப.மா. மேலே காட்டியுள்ள நிகழ்ச்சியாகும். தமிழுக்கு வந்த கேட்டினை நினைத்த போது உள்ளத்தில் சினம் பொங்கித் தம் குறிக்கோளுக்குப் புறம்பான வடசொல் ஒன்று தனித்தமிழ் இலக்கியத் தந்தை மறைமலையடிகளின் வாயிலிருந்து வெளி வந்துவிட்டது பார்த்தீர்களா?

இங்ஙனம் ஈராயிரம் ஆண்டுக்கு முந்திய சங்கக் கவிதை முதல் இன்றைய பாரதி கவிதை வரை நடைமுறைக் கண் கொண்டு பார்த்து-நாள் நிகழ்ச்சிகளோடு உராய்ந்து நோக்கி-காலப்போக்கோடு ஒத்திட்டுக் கண்டு-வ.சுப.மா. எழுதி யிருக்கும் பகுதிகள் சுவை மலிந்தனவாக விளங்குகின்றன.

## சொல்லாக்கம்

'வளம் படைத்த தமிழ் மொழிக்குச் சொல்லாக்கிகள் மிகத் தேவை. அவ்வப்போது சொல்லை வடித்துக் கொடுக்காதவன், வடித்துக் கொள்ளாதவன் மொழிக்கடன் ஆற்றாதவன் ஆகின்றான்; வேற்றுச் சொல் வரவுக்கு இடங்கொடுப்பவன் ஆகின்றான்' (காப்பியப் பார்வை, பக். 194-195) என்பது வ.சுப.மா.வின் கருத்து. இக்கருத்திற்கு ஏற்ப, அவர் அவ்வப் போது படைத்துத் தந்துள்ள சொல்லாக்கங்கள் மிகப் பலவாகும். அவரது புதிய சொல்லாக்கங்கள்-புதிய சொல் வடிவுகள்-புதிய தொடராட்சிகள் தமிழுக்குப் புதுவரவும் ஆக்கமும் ஆகும். இருபதாம் நூற்றாண்டு எழுத்தாளருள் வ.சுப. மாணிக்கத்தைப்

போல் புதிய சொல்லாக்கங்களை, புதிய சொல் வடிவங்களை, புதிய தொடராட்சிகளைப் படைத்துத் தந்தவர் எவரும் இவர். 'இதை நாற்பதாயிரம் கோயிலில் சொல்லலாம்'. 'வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம்' (சென்னை: மணிவாசகர் நூலகம், 1988) என்ற தலைப்பிலேயே தனியொரு நூல் வெளிவந் திருப்பதும் இதனை மெய்ப்பிக்கும் சான்றாகும்.

'நண்பி, 'இளைஞி' போன்ற சொற்கள் இன்று பரவலாகக் கையாளப்படுகின்றன; ஏதோ இன்றுதான் அவை புதிதாகக் கையாளப்படுவது போல் கருதப்படுகின்றன. ஆயின் 'இளைஞியர்' என்ற சொல்லாட்சியை 1962-ஆம் ஆண்டிலேயே 'தமிழ்க் காதல்' (ப.118) என்னும் தம் ஆய்வு நூலில் கையாண்டுள்ளார் வ.சுப.மா.

சுருங்கிய வடிவிலான-செட்டும் செறிவுமான- சொல்லாக் கங்களைப் படைத்துத் தருவதில் வ.சுப.மா.வுக்குத் தனி ஈடு பாடு உண்டு. திறவாய்வாளர் என்றும், திறனாளி என்றும் விரிவான சொல் வடிவங்களைக் கையாளாமல் 'திறனி' (இலக்கியச் சாறு, ப.8) என்று சுருக்கமாகச் சுட்டுவார் அவர்; புதின ஆசிரியர் என்பதற்குப் பதிலாகப் 'புதினர்' (இலக்கியச் சாறு,ப.14) என்ற சொல் வடிவத்தினைக் கையாளுவார் அவர். கற்புடைய பெண்ணை அவர் 'கற்பி' எனக் குறிப்பார். உறுப்பினர், உறுப்பாளி என்னும் சொற்களுக்குப் பதிலாக அவர் 'உறுப்பி' என்ற சுருங்கிய சொல் வடிவத்தைப் பயன் படுத்துவார். வளர்வு, ஆயுரை, இன்பி, வினைச்சி, வேந்தி முதலான அவரது சொல்லாக்கங்களும் இவ்வகையில் எண்ணத் தக்கவை.

ஒப்புமையாக்கம் என்ற நெறியைப் பின்பற்றி வ.சுப.மா. படைத்துத் தந்துள்ள சொல்லாக்கங்கள் பலவாகும். அல் லெண்ணம் (நல்லெண்ணம்), இலக்கியல் (அறிவியல், உலகியல்), இல்லாட்சி (அரசாட்சி), குழமை (முதுமை), விதிகாட்டி (வழிகாட்டி), வீழ்வுகள் (வாழ்வுகள்), நிறைபாடு (குறைபாடு), சொல்லாளர் (எழுத்தாளர்), கேள்வியாளர் (கல்வி யாளர்) முதலான சொல்லாக்கங்கள் இவ் வகையினவாகும்.

'படைப்பிலக்கியப் பாங்கு' என்ற கட்டுரையில் வ.சுப.மா., எழுத்தாளரைக் குறிக்க, எழுத்தாளி, எழுத்தாள்வார், எழுத்துழவர், எழுத்தாளுநர், எழுத்துச்சான்றோர், எழுத்தாண்மையர், எழுதுகுலத்தோர் என்ற ஏழு புதிய சொல்லாக்கங்களைக் கையாண்டுள்ளார் (இலக்கியச் சாறு, பக். 1-23).

'பரத்தமை ஒழுக்கம்' என்று எழுதுவது பொதுவழக்கு. ஆயின் வ.சுப.மா.வோ 'பரத்தையிழுக்கம்' (தொல்காப்பியக் கடல், ப.46) என்று எழுதுவார். ஒழுக்கம் தவறிய செயலைச் சுட்டுவதற்கு 'இழுக்கம்' என்ற சொல்லாட்சியே மிகவும் பொருந்தி வருவதாகும். 'ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின், எய்துவர் எய்தாப் பழி' என்னும் வள்ளுவர் வாக்கு (137) இங்கே ஒப்புநோக்கத்தக்கதாகும். இதேபோல், 'நாளை மறுநாள்' என்பதற்கு இணையாக 'நாளை நீக்கி' (வள்ளுவம், ப.67) என்ற புதிய சொல்லாக்கத்தை அவர் படைத்துள்ளார்.

குளிரகம் (Fridge), ஒலிப்பான் (Mike), அடக்கி (Break), நுரைப்பான் (Soap), முகமா (Powder), வெண் சுருள் (Cigarette), கட்டுத் தொகை (Deposit), செல்லுரிமை (License), பல்லுரசி (Tooth Brush), (துாசி, சாறு) வடிகட்டி (Filter), மேலாள் (Manager), வினைக்களம் (Office), செய்துணிக் கடை (Ready-made shop), முரண்பால் நோய் (Aids) - ஆங்கிலச் சொற்களுக்கு இணையாக வ.சுப.மா. கையாண்டுள்ள அழகிய சொல்லாக்கங்கள் இவை.

சொற்பொழிந்தேன், வானொலிக்கின்றேன், பழமொழிகின்றோம், அட்டவணைப்பர், நன்றியன், விருப்பன், ஈடுபாடன், இலக்கியர், காப்பியர், இலக்கணர், தமிழ் வளர்ப்பிகள், இலக்கியப் படிப்பிகள், கல்வித் திட்டர்கள், பாடம் அமைப்பிகள், மாறுவேடி, நம்பிக்கைக் கேடி, அறிவு நாடிகள், நாட்டுநாடி, நாட்டுக் கேடிகள், தமிழ்மை, தமிழ் மன்னாயம், மக்கட் குழுவாயம், அணிய நாடுகள், சால்பியம், புரட்சியம், பொதுவியம், மக்களியம், ஒப்பியம், படைப்பியம், தமிழியம், உயிரியம், பண்டிதமணியம், கண்ணதாசம், இளங்கோவம்- சொல்லாக்கத் துறைக்கு வ.சுப.மா.வின் பங்களிப்புக்கள் இவை.

கோவை நூல்களின் சொல்லாக்கம் குறித்துக் கருத்துரைக்கும்போது 'மொழிக்கு உடைமையாவது பண்புடைய சொற்களே; பொருளல்ல. இதனைத் தமிழ் வளர்ப்பிகள் நினைவில் வைக்க வேண்டும். தமிழ்ச் சொற்களையும் சொல் வடிவங்களையும் புதுக்கி ஆக்கிப் படைக்காத புலவன் தமிழ் மொழிக்கு உடைமைச் செல்வம் பெருக்காதவனே என்பது என் துணிபு' (இலக்கியச் சாறு, ப. 125) என அறுதியிட்டு உரைப்பார் வ.சுப.மா. மேலும், அவரது நோக்கில் 'புலவன் இலக்கியப் படைப்பால் மொழிச் செல்வத்தைப் பெருக்குவது போல் சொற்படைப்பாலும் அதனைப் பெருக்க வேண்டும். பெரும் புலவன் இருவகைப் படைப்புக்கும் உரியவன்' (காப்பியப் பார்வை, ப.211). இந்த அளவுகோல்களின் படி பார்த்தால், எண்ணற்ற தமிழ்ச் சொற்களையும் சொல் வடிவங்களையும் புதுக்கி, ஆக்கிப் படைத்து, அதன் வாயிலாகத் தமிழ்மொழிக்கு உடைமைச் செல்வம் பல்கிப் பெருகுமாறு செய்த புலமைச் சான்றோராக வ.சுப.மா. என்றென்றும் விளங்குவார் என்பதிலே எள்ளளவும் ஐயமில்லை.

## ஒப்புமையாக்கம்

ஒப்புமையாக்கம் என்ற நெறியைப் பின்பற்றிப் பழைய பா வடிவத்தையோ சிறப்புப் பெயரையோ புதிய வடிவில் மனங்கொள்ளும் வகையில் தருவது என்பது வ.சுப.மா.விடம் காணப்படும் ஒரு தனிப்பண்பாகும். ஓர் அறிஞராக மட்டுமன்றி, கவிஞராகவும் இருந்ததனால், இங்ஙனம் புதிய சொற் கோலங்களைப் படைத்துத் தருவதற்கு அவரால் முடிந்தது எனலாம். இவ்வகையில் சிறப்பாகக் குறிக்கத்தக்க சில சான்று களைக் காணலாம்.

***'எல்லா அணியும் இதிலுள; இந்நூலில்***
***இல்லாத எவ்வணியும் இல்'***

(திருக்குறட் சுடர், ப.41)

என்பது மதுரைத் தமிழ்நாகனாரை அடியொற்றி, வ.சுப.மா. படைக்கும் புதிய வள்ளுவ மாலை.

'முருகு பொருநாறு பாணிரண்டு' என்ற வெண்பா பத்துப்

பாட்டினையும், 'நற்றிணை நல்ல குறுந்தொகை' என்ற வெண்பா எட்டுத் தொகையினையும், 'நாலடி நான்மணி நாற்பது' என்ற வெண்பா பதினெண்கீழ்க் கணக்கினையும், 'உந்தி களிறு உயர்போதம் சித்தியார்' என்ற வெண்பா பதினான்கு மெய்ப்பனுவல்களையும் இலக்கியப் பட்டியல் செய்துள்ளன. 'ஓரின நூல்களை வெண்பாவால் தொகைப்படுத்தல்' என்னும் இம்மரபினைப் பின்பற்றி வ.சுப.மா. ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, உலக நீதி, நறுந்தொகை, நன்னெறி என்ற ஏழு அற நூல்களையும் ஓரினமாக ஒரு வெண்பாப் பட்டியலில் தொகுத்துக் கூறியுள்ளார்.

> ***'ஆத்திசேர் கொன்றை அழகுதமிழ் மூதுரை***
> ***பாத்திசேர் நல்வழி பண்புலகம்-பூத்த***
> ***நறுந்தொகை நன்னெறி ஏழும் குழந்தைக்***
> ***குறுந்தமிழ் என்றறிந்து கொள்'***
>
> (திருக்குறட் சுடர், ப.104)

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்றாற் போல இவ்வேழு அற நூல்களையும் **ஏழிளந் தமிழ்** என வழங்கலாம் என்பது வ.சுப.மா.வின் கருத்து (திருக்குறட் சுடர், ப.105).

'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்று ஓர் ஆரம் படைத்த தமிழ்நாடு' என்றார் பாரதியார். அவரது வாக்கினைப் பின்பற்றி, 1968-இல் கலைஞர் கருணாநிதி படைத்துத் தந்த புதிய உரைநடைச் சிலப்பதிகாரத்தை 'நெஞ்சை வெல்லும் சிலப்பதி காரம் என்று ஓர் நேர்மை படைத்த தமிழ்நாடு' என்று பாராட்டி மொழிகின்றார் வ.சுப.மா (காப்பியப் பார்வை, ப.214).

'கல்வியிற் பெரியவர் கம்பர் என்பார்கள். சீதை இராவணன் தன் மனச் சிறையிலிருந்து முற்றும் விடுதலை பெறுவதற்காக ஏழாயிரம் பாடல்களில் பேராயத்தம் செய்திருப்பதை எண்ணும் போது **காப்பியத்திற் பெரியவர் கம்பர்** என்று சொல்லுவோமாக!' (கம்பர், ப. 106). இங்கே கம்பரைக் குறித்து வழங்கும் பழைய சிறப்புப் பெயர் ஒன்றின் அடிப்படையில் அவருக்கு ஒரு புதிய சிறப்புப் பெயரைத் தமக்கே உரிய பாணியில் சூட்டி மகிழ் கின்றார் வ.சுப.மா.

கம்பராமாயணம் 'மொழிபெயர்ப்புக் காப்பியம்' என்னும் வகையில் அடங்கும் என்பது நாம் அறிந்த செய்தி. ஆயின் வ.சுப.மா.வோ., கதையால் தழுவலாயினும், மொழியாலும், நடையாலும், பண்பாலும், உணர்ச்சியாலும், அன்பாலும், தமிழ் மண்ணிற் பிறந்த நிலக் காப்பியமான கம்பரின் காப்பியத்தை **மொழிபிறப்புக் காப்பியம்** என்னும் புதிய பெயரால் சுட்டு கின்றார். 'மொழிபெயர்ப்புக் காப்பியத்தை மொழி பிறப்புக் காப்பியமாகவே உருவாக்கி அருளிய திறம் கம்பரிடத்துப் போல் பிறரிடம் காண முடியுமா?' (கம்பர்,.ப.58) என்பது அவரது வினா.

## மேற்கோள் ஆட்சி

வ.சுப.மா. பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து அருளப் பெற்றவர்; முன்னைப் பழமை நூல்களையும் பின்னைப் புதுமை நூல்களையும் எழுத்தெண்ணித் கற்றவர். எனவே, அவரது மொழிநடையில் இலக்கிய, இலக்கண மேற்கோள்கள் மலிந்து காணப்படுவது இயல்பே; முன்னோர் மொழி பொருள் மட்டுமன்றி, அவர் சொல்லும் தொடரும் வ.சுப.மா.வால் பொன்னே போல் போற்றிக் கையாளப்படுவது என்பது இயல் பினும் இயல்பே. வ.சுப.மா. காட்டும் நுண்ணிய நயங்கள் அவரது உயரிய உண்மையறிவை உணர்த்துகின்றன என்றால், வ.சுப.மா. வெளியிடும் வளமான வாழ்க்கைச் சிந்தனைகள் அவரது ஆழ்ந்த பட்டறிவைப் புலப்படுத்துகின்றன என்றால், வ.சுப.மா. கையாளும் நூற்றுக்கணக்கான மேற்கோள்கள் அவரது பரந்த நூலறிவை எடுத்துக்காட்டுகின்றன எனலாம்.

வ.சுப.மா. மேற்கோள் காட்டும்போது, நூலின் பெயரை யோ புலவரின் பெயரையோ சுட்டி மேற்கோளைக் கையாளு வதும் உண்டு; நூலின் பெயரையோ புலவரின் பெயரையோ சுட்டாமல், பொதுவாக - சில நேரங்களில் மேற்கோள் குறிகளையும் இடாமல்-மேற்கோளைக் கையாளுவதும் உண்டு (வள்ளுவம், ப.61 இலக்கியச் சாறு, ப.49).

இலக்கண, இலக்கிய நூல்களிலிருந்து மட்டுமன்றி, பிற நாட்டு நல்லறிஞர்களின் சாத்திரங்களிலிருந்தும், நம் நாட்டுச் சான்றோர்களின் ஆய்வு நூல்களிலிருந்தும் பொருந்திய மேற்

கோள்களை வ.சுப.மா. தமக்குத் தேவைப்படும் இடங்களில் எல்லாம் எடுத்தாளுகின்றார். 'தமிழ்க் காதல்' என்னும் அவரது அறிஞர் பட்ட ஆய்வு நூலில் இத்தகைய மேற்கோள்களை நிரம்பக் காணலாம். அட்சனார், அரித்தாட்டில், ஆர்போர்டு, ஆகவால் சார்ச்சு, ஆவலக் கெல்லிசு, ஆன்லிச்சு, கென்னத்து வாக்கர், சர் பிலிப்புச் சித்தினி, சான் லிவிங்டன் லாவே, செகப்பிரியர், செல்லி, பிளேட்டோ, பெத்தரண் ரசல், பென்னாட் சா ஆகியோர் வ.சுப.மா. 'தமிழ்க் காத'லில் மேற் கோள் காட்டியுள்ள பிறநாட்டு நல்லறிஞர்கள் ஆவர். இராமச் சந்திர தீட்சிதர், உ.வே.சா., கா.சு.பிள்ளை, அ. சிதம்பரநாதன், சீனிவாச அய்யங்கார், ரா.பி.சேதுப்பிள்ளை, தனிநாயகம், தெ.பொ.மீ., ச.சோ. பாரதியார், பூரணலிங்கம் பிள்ளை, மு.வ., வ.வே.சு. ஐயர், வேங்கடராசுலு ரெட்டியார் ஆகியோர் வ.சுப.மா. 'தமிழ்க் காத'லில் மேற்கோள் காட்டியுள்ள நம் நாட்டு நல்லறிஞர்கள் ஆவர்.

இங்ஙனம் மேற்கோள்களை எடுத்தாளுவதோடு நின்று விடாமல், தம் தனிநடையில் (Individual Style) இலக்கியச் சொற்களையும் தொடர்களையும் கலந்து எழுதுவதிலும் மிகவும் விருப்பமானவராக விளங்குகின்றார் வ.சுப.மா. அவருடைய உவமை ஒன்றின் வாயிலாகவே சொல்ல வேண்டும் என்றால், 'தந்தையின் பொருளை உரிமையோடு மகன் எடுத்துக்கொள்வது போல' (தொல்காப்பியக் கடல், ப.60) வ.சுப.மா., இலக்கியச் சொற் செல்வத்தைப் பொருட் செல்வத்தோடு அள்ளிக் கொள்ளு கின்றார். 'சில நல்ல தொடர்களை அப்படியே மேற்கொள்வ தால், காலச் செல்வமும் மிஞ்சுகின்றது அல்லவா? பொருத் தமான பழைய நகையை வாங்கிக் கொள்வதால் சேதாரம் மிச்சப் படுவது போல' (தொல்காப்பியக் கடல், ப.34) என நடை முறை உவமை ஒன்றின் வாயிலாகவும் தம் கருத்தினை உரைப்பார் அவர். ஒரு சில சான்றுகளால் இக்கருத்தை நிறுவலாம்.

1. 'கல்வி கேடில் விழுச்செல்வமாக வேண்டுமெனின், ஒட்டுத் துணிபோலும் பொறுக்குப் பாடம் சாலாது; முழுத்துணி போலும் பாட முழுமை வேண்டும்' (கம்பர், ப.118) - வான்புகழ் வள்ளுவரின் வாய்மொழி விரவியிருக்கும் பகுதி இது.

2. 'பலர் செய்த தவறுகளை இலக்கிய வாயிலாக நாம் அறியும்போது, நம் வாழ்வின் போக்குக்கள் புலனாகின்றன. நான் ஆர், என் உள்ளம் ஆர், என் சிந்தனை ஆர், என் செயல் ஆர், என் சிறுமை ஆர் என்ற தன் எண்ணங்கள் கிளைக்கின்றன' (சங்க நெறி, ப.24) -மணிவாசகரின் மணி வார்த்தைகள் இடை மிடைந்து வரும் பகுதி இது.

3. 'பெருமகன் இராய. சொ., பிறந்து மொழி பயின்ற நாள் தொட்டே சிறந்த தமிழின் சேவடி தொழுபவர்' (இலக்கியச் சாறு, ப.178) - காரைக்காலம்மையாரின் சிந்தனைத் தாக்கம் இடம்பெற்றிருக்கும் பகுதி இது.

இங்ஙனம் நல்ல பல இலக்கியச் சொற்களும் தொடர்களும் கலந்து எழுதப்படும்போது வ.சுப.மா.வின் மொழி நடையில் தனியழகும் மெருகும் சேருகின்றன என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

## உவமைத் திறன்

இருபதாம் நூற்றாண்டு உரைநடை ஆசிரியருள் மிகுதியான உவமைகளைக் கையாண்டு எழுதுபவர் என்ற பெருமையும் வ. சுப.மா.வுக்கு உண்டு. 'புலன் அல்லாதன புலனாதலும், அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்' என உவமையின் பயன்கள் இரண்டு என்பார் தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர். இக்கருத்திற்கு இணங்க, வ.சுப.மா. கையாளும் சில உவமைகள் புலன் அல்லாதன வற்றைப் புலனாக்குகின்றன; சில உவமைகள் அலங்காரமாக நின்று பயில்வார்க்கு இன்பம் பயக்கின்றன. சில உவமைகள் அவரது இலக்கிய நெஞ்சத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன; சில உவமைகள் அவரது அனுபவ ஒளியைப் பறைசாற்றி நிற்கின்றன. அவரது சில உவமைகளில் எளிமையும் இனிமையும் குடிகொண்டிருக்கின்றன; சில உவமைகளில் அருமையும் அழகும் கொலு வீற்றிருக்கின்றன.

படைப்பாற்றல் பளிச்சிடும் வ.சுப.மா.வின் சில அழகிய உவமைகள் இதோ:

1. 'திருமணமானவுடன் நம் நாட்டில் பலர்தம் கல்விக்குப்

பொட்டுப் போல் தடித்த முற்றுப்புள்ளி விழுந்துவிடுகின்றது' (தொல்காப்பியக் கடல், ப.277).

2. 'இவர் (கண்ணதாசன்) எழுத்துக்களில் தலைவர்கள் வரலாறும், நாட்டு வரலாறும், கட்சி வரலாறும், தன்வரலாறும் நரம்பு போல் பின்னிக் கிடக்கின்றன' (இலக்கியச் சாறு, ப. 133).

3. 'சீனித் துகளும் இனிக்குமாப் போல் அவன் (கம்பன்) பாடலின் ஒரு சீரும் கவிச்சுவை தருவது' (கம்பர், ப.37).

4. 'தன்மையணிதான் அணிகளில் தாலி போல உண்மை யணி, முதலணி' (திருக்குறட் சுடர், ப.36).

'உன் நண்பன் யார் என்று கூறு, உன்னை அடையாளம் காட்டுகிறேன்' என்பது ஆன்றோர் வாக்கு. அதுபோல், 'உன் உவமை எது என்று சொல், உன் புலமைத் திறத்தினை அடையாளம் காட்டுகிறேன்' என்று நாம் ஒரு படைப்பாளியைப் பார்த்துக் கூறலாம். ஏனெனில், அந்த அளவிற்குப் படைப் பாளியை இனங்காட்டுவதில் உவமைகள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. இக்கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் வ.சுப.மா.வின் சில உவமைகளைக் காணலாம்.

'கலிப்பாவின் உறுப்புக்கள் பின்னர்த் தனியே பிரிந்து மனையறம் படுத்த மகன் குடும்பம் போலத் தனிப்பா நிலை எய்தின என்று கொள்ளலாம்' (தொல்காப்பியக் கடல், ப.228) என்னும் உவமை வ.சுப.மா.வின் நீண்ட, நெடிய இல்லற வாழ்வின் அனுபவ அடிப்படையில் பிறந்த ஒன்றாகும். 'தொல் காப்பியத்தும் அகநானூற்றிலும் பிற சங்கத் தொகைகளிலும் ஊடற் பொருளான மருதத்தில், சுந்தரர்க்குச் சிவன் போல், மகன் ஊடாடு பொருளாக இருக்கின்றனான்' (திருக்குறட் சுடர், ப.102) என்னும் உவமை அவரது இலக்கிய ஆளுமையைப் புலப் படுத்துவதாகும். 'உடலைப் பரத நடிகை பொருளுக்குத் தக வளைப்பது போலத் தமிழ் மகளை இப்புலவர்கள் (இடைக் காலத் தமிழ்ப் புலவர்கள்) தாம் விரும்பிய யாப்புக்குத் தக வளைத்தனர்' (இலக்கியச் சாறு, ப.51) என்னும் உவமை அவரது கலையுள்ளத்தைத் திறந்து காட்டவல்லதாகும். 'திருக்குறள் ஒரு மருந்துக் கடை. அவரவர் நோய்க்கேற்ப உரிய மருந்துகள்

கடையில் உளவாதல் போல, திருக்குறளகத்தும் நம் வாழ்நிலைக்கேற்ப உரிய அறங்கள் உண்டு' (வள்ளுவம், ப.50) என்னும் உவமை அவரது நடைமுறைக் கண்ணோட்டத்தை நயமுற வெளிப்படுத்துவதாகும். 'மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம் என்பது போல, மூலக் குறளைத் தீண்டல் வாழ்வின்பம் ஆகும்' (திருக்குறட் சுடர், ப.16) என்னும் உவமை 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்றாற் போல் அமைந்த ஒன்றாகும்.

தனிநிலையில் மட்டுமன்றி, உவமைகளை அடுக்கிக்கூறும் போக்கினையும் வ.சுப.மா.வின் நடையில் சிறப்பாகக் காண முடிகின்றது. இவ்வுவமை அடுக்குகளை அவர் அழகாகவும் அளவாகவும் கையாண்டுள்ளார்; வலியறிந்து - காலமறிந்து - இடமறிந்து - பயன்படுத்தியுள்ளார். எனவே, அவை அவரது நடைக்கு வனப்பும் வளமும் தந்து நிற்கின்றன. இவ்வகையில் குறிப்பிடத்தக்க சில உவமை அடுக்குகள் வருமாறு:

1. 'பண்பற்ற பேச்சு படியற்ற இல்லத்தையும் அடியற்ற உடலையும் ஒக்கும்' (திருக்குறட் சுடர், ப.32).

2. 'நடையழகு இல்லா இலக்கியம் நிற வண்ணம் இல்லாச் சோலையையும், மெய்ப்பாடில்லா நடிகனையும், வெள்ளாடை உடுத்திய பெண்ணையும் ஒக்கும்' (வள்ளுவம், ப.284).

3. 'புதுச்சாலை மிதிக்க மிதிக்கப் பழந்தடம் ஆவது போல இன்று புரட்சி நாளை மரபாய்க் கலந்துவிடும். முகத்தினுள் கண் துடி போலவும், நீரோட்டத்திற்சுழி போலவும், கண் விழியில் காதற் கூறு போலவும் புரட்சியும் மரபினுள் ஒரு பகுதி என்பதனை இலக்கியத் திறனிகள் உணர வேண்டும்' (இலக்கியச் சாறு, ப.134).

இத்தகைய நூற்றுக்கணக்கான நல்ல நல்ல உவமைகளையும், நயத்தகு உவமை அடுக்குகளையும் வ.சுப.மா.வின் நடையில் எங்கும் நீக்கமறக் காணலாம். 'புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு' என்பார் 'பைந்தமிழ்த் தேர்ப்பாகர்' பாரதியார்; உவமை மண்டிக் கிடக்கும் தமிழ் நடை என நாம் வ.சுப.மா.வின் நடையைப் போற்றிப் புகழலாம்.

## உருவக நலம்

உவமையின் செறிந்த வடிவமே (Compressed Simile) உருவகம் என்பர். இவ்வுவமை, உருவகம் முதலான அணிகள் உரைநடையில் பொருள் விளக்கத்திற்காகவும் நடைச் சுருக்கத் திற்காகவும் முருகியல் இன்பத்திற்காகவும் கையாளப்படுவது உண்டு. உருவக நலம் மிளிர வ.சுப.மா. எழுதியிருக்கும் இடங்கள் சில உண்டு. சான்றாக மூன்று பகுதிகள் வருமாறு:

1. 'மொழி என்னும் கட்டிடத்துக்கு இலக்கணம் அடித்தளம் என்றால், காப்பியங்கள் தூண்கள் என்றால், நாடக நூல்கள் மேன்மாடங்கள் என்றால், நாடோடிப் பாடல்கள் காற்று வரும் காலதர்கள் என்றால், தனிப்பாடல்கள் படிக்கட்டுகள் என்று சொல்லலாம்' *(இலக்கியச் சாறு, ப.50).*

2. 'புலவன் என்ற படைப்பாளி வரலாற்றுப் பொருளை உணர்ச்சி நீரிற் போட்டு யாப்புக் கல்லில் ஒலிக் குழவியால் ஆட்டிக் கவி மாவாகப் பிசைந்து இலக்கியப் பணியாரமாகச் செய்கின்றான். ஒரு பொருள் இலக்கியம் ஆகும்போது சூடும் சுவையும் பிறக்கின்றன; உணர்ச்சியும் நயமும் தோன்றுகின்றன' *(சங்க நெறி, பக். 142-143).*

3. 'மறைவொழுக்கத்தைச் சமுதாயப் பெருங்கண்கள் பார்த்துக் கொண்டிரா; சுற்றுப்புறக் குளவிகள் கொட்டாது விடா; எண்ணவூசிகள் துளையாது போகா; ஆதலின் காதற் களவுக்கு உலகில் புகலிடம் இல்லை. களவைக் கற்பாக்கினாலல்லது உலகுக்கு உறக்கம் இல்லை' *(தமிழ்க் காதல், ப.61).*

இப்பகுதிகளைப் பயிலும்போது கிடைக்கும் இலக்கிய இன்பம் சுவையானதாகும்.

## சொல் விளையாட்டு

வ.சுப.மா.வின் மொழி நடையில் ஆங்காங்கே சாதுரிய மான சொல் விளையாட்டுக்கள் சதிராடி நிற்கின்றன. அவை அவரது படைப்பு மனத்தினையும் புலமைத் திறத்தினையும் ஒருங்கே புலப்படுத்துகின்றன. சுருங்கக் கூறினால், அவை 'நதியில் விளையாடி, கொடியில் தலைசீவி, நடந்த இளந் தென்ற'லைப் போல், 'உணர்வில் விளையாடி, அறிவில்

தலைசீவி, அழகில் நடை' பயில்கின்றன. படித்ததும் நெஞ்சைப் பற்றிக் கொள்ளும் சில சான்றுகள் இதோ:

1. 'எவ்வுயிர்க்கும் இரங்கி உதவும் அருளுணர்வு இல்வாழ்வார் இருவர்க்கும் வேண்டும். பிறர் நலம் பேணாத இல்வாழ்வு உண்மையில் ஒன்றுமில்லாத இல்வாழ்வாகவே கருதப்படும்' (தொல்காப்பியக் கடல், ப.67).

2. 'தமிழ் எழுத்தாளர்கள் பொருளாதாரத்திலும் நல்ல தலையெழுத்துடையோராக, வறுமைக் கோட்டிற்குக் கீழே தாழாமல் வாழ்வுக் கோட்டிற்கு மேலே இருப்பவர்களாக வாழ வேண்டும் என்பது என் முதற்சிந்தனை' (இலக்கியச் சாறு ப.3).

3. 'தலைமேல் புல்லுக்கட்டை இறக்கி உதவுவதும், ஆட்டின் கால் முள்ளை அணைத்து எடுப்பதும், முதியோர்க்கு இடங்கொடுத்து இளையோர் எழுந்து நிற்பதும், இவ்வூர்க்குச் செல்வது இவ்வண்டியா என வினாவினார்க்குச் சலிப்பின்றி அறிவுறுத்தலும் எல்லாமே சிறு வினையாயினும் அற வினை யல்லவா?' (திருக்குறட் சுடர், ப.53).

இத்தகைய சொல் விளையாட்டுக்கள் நீண்ட வாக்கியங் களில் அல்லாமல் சிறுசிறு வாக்கியங்களில் அமையும்போது, அவை தனித்தகுதியும் கூர்மையும் அழகும் ஆற்றலும் பெற்று விடுகின்றன; நல்ல பொன்மொழிகளைப் போல் படிப்பவர் நெஞ்சில் பதிந்துவிடும் சிறப்பினை அடைந்துவிடுகின்றன. 'காந்திப் போர்க்களம் உறுதியுடையதேயன்றிக் குருதி யுடைய தன்று' (இலக்கியச் சாறு, ப.166), 'தமிழ் மரபில் வள்ளுவர் செய்தவை செயற்கரியவையும் செயற்குரியவையும் ஆம்' (திருக்குறட் சுடர், ப.103), 'முத்தப்பர் பாடுவார் மட்டும் அல்லர்; கதைகளின் நுட்பங்களை நாடுவார் என்றும் கண்டு போற்றுகின்றோம்' (இலக்கியச்சாறு, ப.182) என்றாற் போல் வரும் வ.சுப.மா.வின் வாக்கியங்கள் இவ்வகையில் மனங் கொளத் தக்கவையாகும்.

## பிற திறன்கள்

இவை தவிர், உரைநடையை வளப்படுத்தும் பிற திறன்கள்

எத்தனையோ உண்டு. இனி, அவற்றுள் ஒரு சிலவற்றைக் குறித்துக் காண்போம்.

உரைநடையில் இனிய ஓசையின்பத்தை விளை விப்பதற்காக வருவன **எதுகையும் மோனையும்** ஆகும். இவற்றுள் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது மோனை யாகும். இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பது எதுகையாகும். இவ் எதுகையும் மோனையும் படித்தவர் - படிக்காதவர், இளையவர் - முதியவர், ஆடவர் - மகளிர் என அனைவரையும் கவரும் பான்மையினவாகும். இத்திறம் அமையச் சின்னச் சின்ன வாக்கியங்களை எழுதிச் செல்லும் போக்கு வ.சுப.மா.விடம் பரவலாகக் காணப்படுகின்றது. படிப்பவர் இதய சிம்மாசனத்தில் ஏறி அமர்ந்துகொள்ளும் சில அருமையான சான்றுகள் இதோ:

1. 'தொல்காப்பியம் அன்றும் இன்றும் என்றும் நின்றுவாழ் வாழ்க்கை நூல். பீடுநடையும், பாடுநடையும் சான்ற இலக்கிய வனப்பு அமைந்த இலக்கணப் பனுவல்' (தொல்காப்பியக் கடல், ப.277).

2. 'வள்ளலிடம் சென்றான் வறியனாய்த் திரும்பான்; வள்ளுவரைக் கற்றான் வாழாதிரான்' (திருக்குறட் சுடர், ப.53).

3. 'அவனும் (இந்திர சித்தனும்) தலையிழந்தான் என்பது கேட்ட இராவணன் நிலையிழந்தான்' (கம்பர், ப.112).

4. 'முயலா மடியர்களும் கல்லா மடவர்களும் மண்டிக் கிடப்பது நம் நாடு' (வள்ளுவம், ப.213).

சொல்லாலும் பொருளாலும் மாறுபட்ட சொற்களைத் தொடுத்து எழுதுவது **முரண்** எனப்படும். இம்முரண் சுவை அமைய வ.சுப.மா. எழுதியிருக்கும் சில இடங்கள் உண்டு. 'தொல்காப்பியம் விளங்க வேண்டும் எனின் நம் விளங்காமை ஒழிய வேண்டும்' (தொல்காப்பியக் கடல், ப.59) என்றும், 'இப் புலமகன் (சிவப்பிரகாசர்) தம் முதிர்ந்த புலமையில் இளைஞர் நன்னெறியை யாத்தார்' (திருக்குறட் சுடர், ப.108) என்றும் வரும் பகுதிகள் இவ்வகையில் நினைவுகூரத்தக்கவை. முரண்

உத்தியை வ.சுப.மா. மிகத் திறம்படக் கையாண்டிருக்கும் பிறிதோர் இடம் உண்டு. கல்வியின் விழுப்பத்தை வலி யுறுத்தும் விழா கலைமகள் விழா; முயற்சியின் ஆண்மையை உணர்த்தும் விழா ஆயுத விழா. முன்னோர் நிறுவிய இத் திருநாட்களை இன்று நாம் எப்படிக் கொண்டாடுகின்றோம்? 'முன்னெல்லாம் முயற்சியுடையாருங் கூட, ஆயுதவிழாவன்று கருவிகளை யெல்லாம் குளிப்பாட்டி வாளா மடிந்திருப்பர். கற்றாருங் கூட, கலைமகள் விழாவன்று நூல் ஏடுகளை யெல்லாம் மூட்டை கட்டிக் கல்லாதிருப்பர். ஆள்வினைக்கு உரிய விழாவை மடிவிழாவாக, கற்றற்கு உரிய விழாவைப் பேதை விழாவாக மாறிச் செய்யும் திரியுணர்ச்சி நம் நாட்டின் பண்பாய் ஊறிவிட்டது' (வள்ளுவம், பக்.213-214) என முரண் சுவையும் அங்கதச் சுவையும் அழகுறக் கைகுலுக்கிக் கொள்ளும் வகையில் எழுதிச் செல்கின்றார் வ.சுப.மா.

வந்த சொல்லே மீண்டும் வர எழுதும் பாங்கு **'பயின்று வரல்'** என்னும் உத்தியின்பாற்படும்; ஒரு வகையில் பார்த்தால், இவ்வுத்தியில் அந்தாதியின் சாயல் படிந்திருப்பதை உணரலாம். 'கற்பனையினால் கவர்ச்சி உண்டாம்; கவர்ச்சியினால் உணர்ச்சி உண்டாம்; உணர்ச்சியினால் உள்ளம் தொடும்' (தொல்காப்பியக் கடல், ப.9) என்றும், 'துன்பம் இல்லாதாருக்கு மனவேகம் இராது; மனவேகம் இல்லாதாருக்கு அறிவோட்டம் இராது; அறிவோட்டம் இல்லாதார்க்கு உயிரோட்டம் இராது' (சங்க நெறி, ப.55) என்றும், 'எது உள்ளத்தை ஈர்க்கும், எது உணர்ச்சிப் படுத்தும், எது கவர்ச்சியூட்டும், அது அணியாகும்' (திருக்குறட் சுடர், பக்.37-38) என்றும் வ.சுப.மா. எழுதியிருக்கும் பகுதிகள் இவ்வுத்திக்குத் தக்க சான்றுகளாகும்.

நடையில் ஓர் இயல்புப் பண்பைத் தோற்றுவிப்பதற்கு **மரபுத் தொடர்களும் வழக்குத் தொடர்களும்** இன்றியமை யாதனவாகும். வ.சுப.மா. ஒல்லும் வகையெல்லாம் அவற்றைத் தம் மொழிநடையில் கையாளுகின்றார். சில சான்றுகள் இதோ: 'நெட்டையோ குட்டையோ ஒரு மூலப் பதிப்பே நாட்டிடைப் பரவுதல் வேண்டும் (கம்பர், ப.17); 'சங்க நூற் கருத்துக்கள் கோவைகளில் நிரம்பிக் கிடப்பினும் கோவைகள் சங்க

நூல்களுக்குக் கிட்ட நிற்கும் தகுதியுடையனவல்ல' (இலக்கியச் சாறு, ப.114); 'நம்மைக் கண்டு பக்கத்து நாடுகள் துணுக்குறவில்லை. சீனப் படையெடுப்புக்குப் பின், சுற்றுச் சிறுநாடுகளுக்கெல்லாம் குளிர்விட்டுவிட்டது' (திருக்குறட் சுடர், ப.7); 'இன்னும் ஒரு படி கூடச் சொன்னால் குடும்ப வுலகில் இல்லறச் சாவியைத் தலைவியிடம் வழங்கியவர் தொல்காப்பியர்' (தொல்காப்பியக் கடல், ப.69).

சொல்லும் செய்தி மக்களிடத்தில் எளிதிலே சென்று சேருவதற்கு ஓர் உரைநடை ஆசிரியருக்குப் **பழமொழிகள்** பெரிதும் பயன்படுவனவாகும். இதனை நன்கு உணர்ந்த வ.சுப.மா. நாட்டுமக்கள் நாவிலும், இலக்கிய உலகிலும் வழங்கும் பழமொழிகளைத் தம் மொழி நடையில் தக்க இடங்களில் கையாண்டு வெற்றி கண்டுள்ளார். ஒரு சில உள்ளங்கவர் சான்றுகள் இதோ: 'பெரும்புலவன் செய்யும் படைப்புக்கு அவன் கொள்வதே விதி. வல்லான் வகுத்ததே வாய்க்கால்' (கம்பர், ப.8); 'சிறுதுளி பெருவெள்ளம், ஒரு பிடி பல படி என்பது போல ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற பொதுத் தொண்டு செய்தால் மன்னிலம் கூட்டுவளம் பெறும்' (திருக்குறட் சுடர் ப.26); 'தனி மரம் எவ்வளவு வானுற ஓங்கி வளர்ந்திருந்தாலும் தோப்பாகாது. எவ்வளவு நயப்பாடலாக இருந்தாலும் தனிப்பார்வை காப்பியப் பார்வையாகாது' (காப்பியப் பார்வை, ப.13).

படிப்பவரின் சிந்தனையைத் தூண்டுவதற்கு எப்போதும் பயன்படுவன **வினாக்கள்** ஆகும். ஓர் உரைநடையாளர் இவ் வினாக்களைப் பல்வேறு வழிகளில் கையாண்டு பணி கொள்ளலாம். ஒரு வினா-தொடர்ந்து அவ்வினாவிற்கு விடை என்ற அமைப்பிலோ, வினாவும் விடையுமாக மாறி மாறியோ, வினாக்களை அடுக்கித் தொடுத்தோ அவர் தம் தேவைக்கும் திறத்திற்கும் ஏற்ப எப்படி வேண்டுமானாலும் எழுதிச் செல்லலாம். வ.சுப.மாவின் மொழிநடையில் இம்மூன்று வகையான போக்குகளையும் காண முடிகின்றது.

'வாழ்வாங்கு வாழ்தல் என்பது என்ன? நினைப்பாங்கு நினைத்தல் ஆகும்' (இலக்கியச் சாறு, ப.78) என்னும் பகுதி ஒரு

வினா - தொடர்ந்து அதற்கு விடை என்ற போக்கிற்குச் சான்றாகும்.

'எது மனிதத் தொழில்? ஈதல். எது மனித வாழ்வு? கொடுத்து வாழ்தல். எது மனிதனுக்கு முடிவான பயன்? கொடைப் புகழ் என்று முடிப்பர் வள்ளுவர்' (திருக்குறட் சுடர், ப.22) என்னும் பகுதி வினாவும் விடையும் மாறி மாறி வரும் போக்கிற்குச் சான்றாகும்.

'ஐந்திணைக் காதல் தமிழ்ச் சமுதாயத்தில் காணகில்லா அரிய பொருளா? மலடி பெற்ற நொண்டி முயற்கொம்பை ஏணியாகக் கொண்டு படி வைத்து ஏறிச்சென்று வானத்துக் கருந்தாமரையை வாயாற் பறித்துப் பேரனுக்குப் பிறந்த நாட் பரிசாக அளித்தான் என்பது போலும் கட்டுக்கதையா? முழுதும் புலவர்தம் கற்பனைப் படைப்பா? சங்க இலக்கியம் புராணத்தினும் பெரும் புராணமா?' (தமிழ்க் காதல், ப.270) என்னும் பகுதி வினாக்கள் அடுக்கி வரும் போக்கிற்குச் சான்றாகும்.

சுவைகளுள் முதலாவது நகை. இந்நகைச்சுவை வ.சுப.மா. வின் மொழிநடையில் ஆங்காங்கே மென்மையாகத் தலை காட்டுவதைக் காண்கிறோம். ஓர் எடுத்துக்காட்டு; 'முழுப் பார்வை - காப்பியத்தின் இலக்கணமான தொடர்புப் பார்வை- வரவரக் குறைந்து போயிற்று... பலர் பார்வை படலப் பார்வையாக- உதிரிப் பார்வையாக - அங்கொன்று இங் கொன்றுப் பார்வையாகப் போய்க் கொண்டிருக்கின்றது. கம்பர் பரவுகின்றார் என்றால் க பரவுகின்றது, ம் பரவுகின்றது, ப பரவுகின்றது, ர் பரவுகின்றது என்று வேடிக்கையாகத் சொல்லத் தோன்றுகின்றது' (கம்பர், ப.12). இப்பகுதியைப் படிப்பவர் முகத்தில் புன்முறுவல் பூப்பது உறுதி. அவலச் செய்தினையும் நகைச் சுவை இழையோடப் படைத்துத் தருவது என்பது ஓர் அரிய திறன். இத்திறனும் வ.சுப.மா.விடம் களிநடம் புரிகின்றது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு இதோ: 'மன வளர்ச்சி பெரும்பாலோர்க்கு இல்லை. மெய்ம்மை காணின், பெரும் பாலோர் தம் மன வளம் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஒரு சிலர்க்கு மனமெனும் ஓர் உள்பொருள் இருப்பதான எண்ணச்

சுவடே இல்லை. நெஞ்சுவலி வரும்போது நினைப்பார்களோ என்னவோ?' (இலக்கியச் சாறு, ப.79).

## கருத்துக்கு உரிய நடை

'சீர்மையும் செம்மையும் நீர்மையும் நேர்மையும் பொலிந்து வானுயர் தோற்றமாக' விளங்கும் வ.சுப.மா.வின் உரைநடை குறித்து இதுவரை விரிவாகக் கண்டோம். அவர் 'வள்ளுவம்' என்ற நூலுக்கு எழுதிய முகவுரைக் குறிப்போடு இவ்வியல் நிறைவு பெறுவது பொருத்தமாக இருக்கும். ''வள்ளுவ நூலின் நடை கற்பவரை நிறுத்திக் கற்கச் செய்யும்; வேகப் படிப்பைக் குறைத்து விளங்கிப் படிக்கத் தூண்டும்; சொல்தோறும் ஒன்றி நின்று மனம் வைத்து அறிவு செலுத்தி உண்மை காணச் சொல்லும். ஓரளவேனும் தமிழ் இலக்கியம் பயின்றார்க்கு - மொழியறிவு பெற விழைவார்க்கு - வள்ளுவம் அரிய நடையதன்று; கருத்துக்கு உரிய நடையது எனத் தமிழறிஞர் உடன்படுவர்' (ப.3). வ.சுப.மா. 'வள்ளுவ' நூலின் நடை குறித்துக் கூறியுள்ள இக்கருத்து, பொதுவாக அவரது நூல்கள் அனைத்திற்கும் பொருந்தி வருவதே ஆகும்.

# 3. ஆய்வாளர்

*"ஆய்வு வ.சுப. மாணிக்கனார்க்கு இயல்பாக அமைந்ததொன்றாகும். திருக்குறளை 'வள்ளுவ'மாகச் செயல் நூலாக்கினார். கம்பனைக் கற்கும் நெறியில் புதிய தடம் அமைத்தார். அகத்திணையியல் ஆய்வில் 'தமிழ்க் காதல்' நெறி விளக்கினார். இவை என்றும் தமிழுக்குப் பொன்றாப் புகழ் தருவன".*

*-ச. மெய்யப்பன் **

'திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின் ஆழமும் விரிவும் அழகும் கருதியும்...' என்பது 'பாட்டுக்கொரு புலவர்' பாரதியாரின் வாக்கு (பாரதியார் கவிதைகள், மெர்க்குரி புத்தகக் கம்பெனி பதிப்பு, ப.171). இதில் 'திருக்குறள்' என்ற சொல்லிற்குப் பதிலாக நாம் 'ஆய்வு' என்ற சொல்லைப் போடலாம். ஏனெனில், பாரதியார் திருக்குறளுக்குக் கூறும் பண்புகள் யாவும் தரமான ஆய்வுக்கும் திறமான ஆய்வாளர்க்கும் இன்றியமையாது வேண்டிய பண்புகளே ஆகும். ஒரு சிறந்த ஆய்வு 'உறுதியும் தெளிவும் ஆழமும் விரிவும் அழகும்' பொருந்தியதாக இருத்தல் வேண்டும். அதேபோல், ஒரு தேர்ந்த ஆய்வாளர், தாம் கொண்ட கொள்கையில் உறுதி படைத்தவராக விளங்க வேண்டும்; தம் ஆய்வின் முடிவுகளைத் தெளிந்த நடையில் வெளியிடும் திறம் கொண்டவராகத் திகழ வேண்டும். ஆழமான நோக்குடன் அவர் தம் ஆய்வுப் பயணத்தினை மேற்கொள்ள வேண்டும். எதிர்கால ஆய்வுலகம் தொடராய்வினை மேற்கொள்ளத்தக்க வகையில் அவரது ஆய்வு விரிவுடையதாக இலங்க வேண்டும். இலக்கியத்தின் அழகையெல்லாம் - நயத்தையெல்லாம் - அவரது ஆய்வு எடுத்துக்காட்ட வேண்டும். இத்துணைச் சிறப்புப் பண்புகளும் ஒருங்கே குடிகொண்ட மூதறிஞராக - ஆழ்ந்த புலமை சான்ற ஆய்வாளராக - வ.சுப. மாணிக்கம் விளங்குகின்றார்.

---

*ச. மெய்யப்பன் (பதிப்பாசிரியர்), வ.சுப.மாணிக்கனாரின் வாழ்வும் பணியும், ப.78

## ஆய்வு எல்லை

வ.சுப.மா.வின் ஆய்வுப் பொருள் - ஆய்வு எல்லை - ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம் தொடங்கி, இருபதாம் நூற்றாண்டு விடுதலைக் கவிஞர் பாரதியார் பாடல்கள் வரையில் பரந்து விரிந்து பட்டதாக அமைந்துள்ளது. பொருள் அடிப்படையில் அவரது ஆராய்ச்சி நூல்களைப் பின்வருமாறு பகுத்துப் பார்க்கலாம்:

1. தொல்காப்பிய ஆராய்ச்சி - 'தொல்காப்பியக் கடல்'; தொல்காப்பியம் பற்றிய 31 கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல்.

2. சங்க இலக்கிய ஆராய்ச்சி - 'தமிழ்க்காதல்', 'சங்க நெறி' என்ற இரு நூல்களும் இவ்வகையில் அடங்கும். இவற்றுள் 'தமிழ்க் காதல்' சென்னைப் பல்கலைக் கழகத்தில் அறிஞர் (டாக்டர்) பட்டத்திற்கு வ.சுப.மா. எழுதிய ஆங்கில நூலின் தமிழாக்கம். 'சங்க நெறி' என்பது சங்க இலக்கியம் பற்றிய 24 கட்டுரை களின் தொகுப்பு.

3. திருக்குறள் ஆராய்ச்சி - 'வள்ளுவம்', 'திருக்குறட் சுடர்' என்ற இரு நூல்களும் இப்பிரிவில் சேரும். இவற்றுள் 'வள்ளுவம்' 12 கற்பனைப் பொழிவுகளின் தொகுப்பு; 'திருக்குறட் சுடர்' திருக்குறள் பற்றிய 18 கட்டுரைகளின் தொகுப்பு.

4. காப்பிய ஆராய்ச்சி - 'கம்பர்', 'காப்பியப் பார்வை' என்ற இரு நூல்களும் இப்பகுப்பில் இடம்பெறும். இவற்றுள் 'கம்பர்' அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக் கட்டளைப் பொழிவுகளின் தொகுப்பு. 'காப்பியப் பார்வை' காப்பியம் பற்றிய 20 கட்டுரைகளின் தொகுப்பு.

5. பிற இலக்கிய ஆராய்ச்சி - 'இலக்கியச் சாறு'; பக்தி இலக்கியம் (திருவாசகம், திருக்கோவை, திருப்பாவை, திருவெம்பாவை, தாயுமானவர் கவிதை),

சிற்றிலக்கியம் (கோவை, தைப்பாவை), இன்றைய இலக்கியம் (பாரதி கவிதை, காந்திக் கவிதை, பாடுவார் முத்தப்பர் படைப்புக்கள்) முதலான பல்வேறு இலக்கியங்களைப் பற்றிய 18 கட்டுரைகளின் தொகுப்பு.

'தொல்காப்பியம் என்பது தமிழின் மூலப் பண்ணை, தமிழினத்தின் பொதுவுடைமை, உலகச் சிந்தனைகளின் ஊற்று' (தொல்காப்பியக் கடல், ப. 363) என மூவாயிரம் ஆண்டுப் பழமை வாய்ந்த தொல்காப்பியத்தை நெஞ்சாரப் போற்றும் வ.சுப.மா., அதே உணர்வோடும் உள்ளார்ந்த விருப்போடும், 'விடுதலை பாரதியின் மதம். பாரதியார் விடுதலைப் புலவர், விடுதலை நாயனார், விடுதலை யாழ்வார். சிட்டுக்குருவியைப் போலே எப்போதும் விடுதலை வேண்டுபவர்' (இலக்கியச் சாறு, ப.207) என இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர் பாரதியாரையும் மனமுருகிப் போற்றி மகிழ்கின்றார். வ.சுப.மா. வின் ஆய்வுப் பரிமாணத்தை - ஆய்வின் ஆழ, அகல, நீளங்களை - அளந்தறிவதற்கு இச்சான்று ஒன்றே போதுமானதாகும்.

## திண்ணிய நெஞ்சம்

வ.சுப.மா. நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் ஒருங்கே குடிகொண்ட ஆய்வாளர் ஆவார். 'காமம் செப்பாது கண்டது மொழியும்' மதுகை - அறிவு - வீறு - அவர் நெஞ்சில் என்றும் குடிகொண்டிருந்தது. இப்பண்பிற்குச் சான்றாகத் 'தமிழ்க் காதல்' என்னும் அவரது ஆய்வு நூலிலிருந்து ஓர் இடத்தினைக் காணலாம். 'கரணத்தின் அமைந்து முடிந்த காலை நெஞ்சு தளை அவிழ்ந்த புணர்ச்சி' என்பது தொல்காப்பியக் கற்பியலில் இடம்பெற்றுள்ள ஒரு நூற்பா (5). 'பலரறிய திருமணச் சடங்கு நிகழ்ந்து முடிந்த பின்னர், களவுக் காதலர்கள் தம் நெஞ்சில் இதுவரை இருந்த கட்டு அவிழப் பெற்றுப் புணர்ந்து கலவியின்பம் துய்ப்பர்' என்பது இந்நூற்பாவின் இயல்பான உரை. ஆயின், இக் கற்பியல் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரை விளக்கம் தொல்காப்பியர் கருத்திற்கும் தமிழ் ஒழுக்கத்திற்கும் முற்றிலும் மாறான ஒன்றாகும். 'உச்சி மேற் புலவர்கொள் நச்சினார்க்கினிய'ரே என்றாலும், மாறான-

தவறான- ஒரு கருத்தை வெளியிட்டிருந்தால், அதனை அப்படியே கண்மூடித்தனமாக ஏற்றுக்கொள்ளாது, 'ஒழுக்க மில்லுரை' என அதனை ஒதுக்கித் தள்ளுகின்றார் வ.சுப.மா. 'கரணப்படி முதல்நாள் திங்களுக்கும் இரண்டாம் நாள் கந்தருவருக்கும் மூன்றாம் நாள் அங்கிக்கும் தலைவியை அளிப்பார்களாம்; இத் தெய்வங்களொடு அவள் பள்ளி செய்து ஒழுகுவாளாம்; இந் நாளெல்லை முடிந்த காலத்து அங்கியங்கடவுள் நான்காம் நாள் தலைவனுக்குத் தலைவியை அளிப்ப, அவன் அவளை நுகர்வானாம்; வரைந்த பின் மூன்று நாளும் கூட்டமின்மையால் நிகழ்ந்த மனக்குறை - நெஞ்சுதளை-நாலாம் நாள் இரவின் புணர்ச்சியால் தீருமாம். இது வேத வழக்கு எனத் தலைவன் தலைவிக்கு விளங்கக் கூறுவானாம்' என இவ்வாறு நச்சினார்க்கினியர் கருத்துரை வரைந்துள்ளார். 'தமிழர் கண்ட கற்பியியல் இதுவா? தமிழினத்தின் நாகரிக ஏடான தொல்காப்பியத்துக்கு உரையா இது?' என அடுக்கடுக்காகக் கேள்விக் கணைகளைத் தொடுத்து, 'இக்கருத்தெல்லாம் அல்தமிழ் நெறியென்று அகற்றுக' (தமிழ்க் காதல், பக். 92-93) என்று அழுத்தம் திருத்தமாக - ஆணித்தரமாக - தம் கருத்தினை நிறுவுகின்றார் வ.சுப.மா.

இங்ஙனம் விரிவாகவும் விளக்கமாகவும் அல்லாமல், ஆய்வாக ஒரு வரி எழுதினாலும், அதிலும் அவரது ஆய்வுக்கதிர்-புலமை வீச்சு- பளிச்சிடக் காணலாம். 'நாணிக் கண் புதைத்தல் என்னும் ஒரு துறைக் கோவை நூல் படிப்பார் நாணிக்கண் புதைத்தற்குரியதாக நிற்கின்றது'( . இலக்கியச் சாறு, ப.115)என்னும் பகுதி இதற்குத் தக்க சான்றாகும். நாணில் மொழியும் அளவில் கற்பனையும் கொண்ட 'நாணிக் கண் புதைத்தல்' என்னும் இடைக்காலக் கோவை நூலின் குறைபாட்டினை அதன் பெயரினைக் கொண்டே அழகுறச் சாடியிருக்கும் வ. சுப. மா. வின் ஆய்வுத்திறம் போற்றத் தக்கதாகும்.

*'பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த*
*மக்கட்பேறு அல்ல பிற'* *(61)*

என்பது புகழ் பெற்ற வள்ளுவர் வாக்கு. இதில் வரும் 'அறிவு

அறிந்த மக்கட் பேறு' என்னும் தொடருக்கு, அறிவு அறிந்த மக்கள், அறிவு அறியா மக்கள் என இரு நிலையினர் உள்ளனர் என்றும், அவருள் அறிவு அறிந்த மக்கட் பேற்றையே ' யாம் அறிந்த பெரும் பேறு' என வள்ளுவர் விதந்து சுட்டுகின்றார் என்றும் ஒரு சாரார் பொருள் கூறுவர். பரிமேலழகரோ அதனினும் ஒரு படி மேலே சென்று, 'அறிவறிந்த என்றதான், மக்கள் என்னும் பெயர் பெண் ஒழித்து நின்றது. இதனாற் புதல் வரைப் பெறுதலின் சிறப்புக் கூறப்பட்டது' என உரை விளக்கம் தருவர். இவ் விளக்கத்தினைக் கடுமையாக மறுத்து வ.சுப.மா. எழுதியிருக்கும் பகுதி அவரது 'நக்கீரப் பார்வை'க்கு நல்லதொரு சான்றாகும். அப்பகுதி வருமாறு:

''....பரிமேலழகர் வள்ளுவத்தின் அடிவேரினை விளக்கம் என்னும் வாள் கொண்டு அறுத்தெறிந்தார். பிற உரைகளிலும் கொளத்தகும் பேருரை கண்ட இத் தமிழ்ப் பெருமகனார் காலக் கோட்பட்டு முரணி எழுதிய இடங்கள் இன்னும் சிலவுள. இவ்விடங்கள்'ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் வெளிறின்மை அரிது' என்னும் இயல்புக்கு இலக்கியம் ஆயின'' (வள்ளுவம், பக்.160-161).

'உரை ஞாயிறு' எனப் போற்றப்படும் பரிமேலழகரே இங்ஙனம் உண்மைக்கு முரணாக உரை விளக்கம் எழுதும் போது, அதனோடு ஒத்துச் செல்லாமல், அவருடன் உறழ்ந்து நின்று, வள்ளுவர் வாக்கிற்கு மெய்ப்பொருள் காணும் நெறியில் முனைப்பாக ஈடுபடுகிறார் வ.சுப.மா.

## தெளிந்த நல்லறிவு

பரம்பொருளிடம் விண்ணப்பிக்கும் போதும், வேண்டும் போதும் ' நெஞ்சம் வேண்டும், தெளிந்த நல்லறிவு வேண்டும்' (ப.95) என்றும், 'அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி...இவை அருளாய்' (ப.239) என்றும் கேட்பார் கவியரசர் பாரதியார். இவ்விண்ணப்பம் - வேண்டுகோள் - ஓர் உயரிய ஆய் வாளர்க்கும் பொருந்தி வருவதேயாகும். எந்நிலையிலும் - எக்காலத்திலும் - ஆய்வாளர்க்கு 'மயக்கமோ கலக்கமோ மனத்திலே குழப்பமோ வாழ்க்கையில் நடுக்கமோ' இருக்கக்

கூடாது. அவர் நெஞ்சிலும் அறிவிலும் நடையிலும் தெளிவு (Clarity) இருத்தல் வேண்டும். 'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின், வாக்கி னிலே ஒளி உண்டாகும்' (ப.169) என்னும் கவியரசரின் கருத்து ஆய்வுக்கும் பொருந்துவதாகும். இக்கருத்தினை மெய்ப்பிக்கும் வகையில் வ.சுப.மா. ஆய்வைப் பொறுத்த வரையில் திண்ணிய நெஞ்சம் கொண்டவராகவும் தெளிந்த நல்லறிவு படைத்தவராகவும் விளங்குகின்றார்; நெஞ்சிலே உறுதி கொண்டவராகவும் அறிவிலே தெளிவு பெற்றவராகவும் திகழ்கின்றார். அவரது தெளிந்த சிந்தனைக்கும் மொழி நடைக்கும் ஓர் எடுத்துக் காட்டு வருமாறு:

> **''மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்**
> **சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்'**

அகத்திணையின் அரிய நூற்பாக்களுள் இஃது (54) ஒன்று. முதலடியில் அகத்திணைக்கு உரிய நிலைக்களத்தையும், பின்னடியில் அகத்திண பாடும் இலக்கிய முறையையும் அறியலாம். ஐந்திணைக் காதலொழுக்கங்கள் எல்லா மக்களையும் கருதியன ஆதலின் இவற்றைத் தனியொருவர் பெயர் காட்டிப் புலவர்கள் பாடார் என்பது இந்நூற்பாவின் பொருள். தலைவன், பாங்கன், பாகன், பாணன், தகப்பன், அண்ணன்மார் எனவும், தலைவி, தோழி, செவிலி, தாய், பரத்தை, ஊரார் எனவும் ஐந்திணைக்கண் ஆண்-பெண் மாந்தர்கள் வருவர். இவ் வாட்களைத் தலைவன், தலைவி, தோழி என உறவுப் பெயராற் கூறலாம்; நாடன், துறைவன், ஊரன் என நிலப்பெயராற் கூறலாம்; உழவன், உழத்தி, ஆயன், ஆய்ச்சி எனத் தொழிற் பெயராற் கூறலாம்; ஆடவன், நம்பி, சிறுமி, நங்கை எனப் பாற்பெயராற் கூறலாம்; அவன், அவள், அவர் எனச் சுட்டுப் பெயராற் கூறலாம். இவ்வாறு யார்க்கும் ஏற்கும் பொதுமை யாகக் கூறுதலன்றி, இட்டு வழங்கும் பெயர்களாற் கூறுதல் ஆகாது. காவிரிப்பூம்பட்டினத்து மாசாத்துவான் மகன் கோவலன் என்பான் மாநாய்கன் மகள் கண்ணகியைக் காதலித்தான், மணந்தான், பின்னர் மாதவியை நாடினான் என்றவாறு இயற்பெயரோடு மொழியலாகாது என்பது அகமுறை. இம் முறையை விடுத்துக் கூப்பிடு பெயர் சுட்டிக் காதல் புனையப் படுமாயின், அக்காதல் எத்துணைச்

சிறந்ததாயினும், அகத் திணைப்பாற் படாது என்பது இலக்கணத் துணிபு' (தமிழ்க் காதல், பக்.304-305).

அகத்திணையின் பெயர் குறியாப் பண்பினை உணர்த்தும் அரிய இந்நூற்பாவுக்கு வ.சுப.மா. எழுதியுள்ள ஆய்வு விளக்கமும் அரிய ஒன்றாகவே அமைந்துள்ளது. இங்ஙனம் 'உள்ளங்கை நெல்லிக் கனி' போல் - வ. சுப. மா. வின் மொழியிலேயே சொல்ல வேண்டுமானால் 'சிறுகொடிப் பூசணி போல்' (தொல்காப்பியக் கடல், ப.266)- 'நெற்றித் திலகம்' போல் - தெள்ளத் தெளிந்த நடையில் ஆய்வு உண்மைகளை எழுதிச் செல்வது என்பது அவருக்குக் கைவந்த கலையாகும்.

## திறமான புலமை

ஓர் ஆய்வாளர் ஆய்வின் அனைத்துப் பரிமாணங்களையும் - பரிணாமங்களையும் - நன்கு அறிந்தவராக இருத்தல் வேண்டும்; இத்தகைய ஆழமான அறிவின் அடிப்படையிலேயே அவரது திறமான புலமை மதிப்பிடப் பெறும். இங்ஙனம் எதனையும் நுண்ணிதின் நோக்காது, மேலோட்டமாகவே பார்க்கும் இயல்பு படைத்தோரை - நுனிப்புல் மேயும் மனப்பான்மை கொண்டோரை - 'இலக்கிய மேலோடிகள்' (திருக்குறட் சுடர், ப.34) என்னும் தொடரால் சாடுவார் வ.சுப. மாணிக்கம். அவரது கருத்தில், 'திறனாய்வு என்பது ஒப்பாய்வன்று, உள்ளாய்வு. புறனாய்வன்று, அகனாய்வு' (கம்பர், ப.9). இவ்வரைவிலக்கணத்திற்கு ஏற்ப, இலக்கியத்தை அதன் உள்ளும் புறமும் நோக்கி ஆராயும் நுண்மாண் நுழைபுலம் படைத்தவராக விளங்குகிறார் வ.சுப.மா. இவ்வகையில் தாம் மேற்கொள்ளும் ஆய்வுப் பொருளின் ஆழத்தை எடுத்துக் காட்டுவதில் அவருக்கு நிகர் அவரே எனலாம்.

வ.சுப.மா.வின் ஆய்வு வன்மைக்கு - ஆழமான புலமைத் திறத்திற்கு - அவரது 'கம்பர்' என்னும் நூலிலிருந்து ஓர் எடுத்துக் காட்டினைக் காணலாம். வான்புகழ் வள்ளுவம் போல் 'காப்பியப் பார்வை', 'காப்பியக் களங்கள்', 'காப்பிய நேர்மை' என்னும் மூன்று இயல்களால் ஆன சீரிய ஆய்வு நூல் அது. அதில் 'களங்களை உணர்ச்சி மோதும் பெருங்களம் ஆக்குதல்,

களங்களை அமைக்காதே ஒழித்தல், களங்களைக் காலம் பார்த்து அமைத்தல் என்பவையெல்லாம் காப்பிய நெறிகள் ஆகும். இந்நெறிகளின் கரையைக் கண்டவர் கம்பர்' (கம்பர், ப.90) என்னும் கருத்தினை விளக்கும் இடத்தில், 'புலவன் படைத்த களங்கள் யாவை? படையாதே விடுத்த களங்கள் யாவை? என்ற இரு பெரு நோக்கில் காப்பிய வளர்ச்சியை ஆராய வேண்டும். மேனாட்டுத் திறனாய்வாளர்தம் ஆராய்ச்சி யெல்லாம், படைத்த களங்களைப் பற்றியவையே. வெளிப் பட்ட அமைப்புக்களை வைத்துக் கொண்டு தான் அத்திறனிகள் விளக்கஞ்செய்துள்ளனர். காப்பியத் தெளிவுக்கு உண்மைக் களவாராய்ச்சி மட்டும் போதாது. இன்மைக் களவாராய்ச்சியும் உடனிலையாக வேண்டும். இது செய்யாத வரையில் புலவன் நுழைபுலம் வெளிப்படாது' (கம்பர், ப.91) என்னும் தம் ஆழமான ஆய்வுச் சிந்தனையை வெளியிடுகிறார் வ.சுப.மா. வனம் புகுமுன் தயரதன் - இராமன் சந்திப்பைக் கம்பர் முற்றும் தவிர்த்து விடுகிறார்; அதே போல அண்ணனுடன் வனம் செல்ல நினைத்த இலக்குவன் தன் மனைவி ஊர்மிளையிடம் சொல்லிக் கொண்டதாக அவர் பாடவில்லை; காப்பிய நடப்புக்கு வழி யடைக்கும் கல்லாகும் என்று கருதி இராவணனின் அரசவையில் அவர் மண்டோதரிக்கு இடம் கொடுக்கவில்லை. இங்ஙனம் 'காப்பியத்திற் பெரியவர் கம்பர்' படையாது விடுத்த சில களங்களைச் சுட்டிக்காட்டி வ.சுப.மா. எழுதியிருக்கும் ஆய்வுக்குறிப்புக்கள், அவரது நுண்மாண் நுழைபுலத்திற்குக் கட்டியம் கூறுவனவாகும்.

## மாறுபட்ட பார்வை

அரைத்த மாவையே அரைப்பது போல் முன்னோர் சொல்லிச் சென்றதையே மீண்டும் வேறு வடிவில் சொல்லுவது என்பது சிறந்த ஆய்வு ஆகாது. ஒரு தேர்ந்த ஆய்வாளர் இதுவரை யாரும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளாத ஒரு பொருளை எடுத்துக் கொண்டு ஆராய முற்படுவார்; தம் ஆய்வினை மாறுபட்ட கோணத்தில் அணுகிப் புதிய விளக்கத்தினைத் தர முயல்வார். இவ்வகையில் தமிழ் ஆய்வுலகில் வ.சுப.மா.வுக்கு

என்றும் முதல் வரிசையில் முதல் இடம் உண்டு. இதுகாறும் ஆய்வாளர் கண்ணில் படாத எத்தனையோ பொருள்களை அவர் தம் ஆய்வுச் சிந்தனைக்கு உரியவையாக்கியுள்ளார். ஒரு நல்ல எடுத்துக்காட்டு: 'துறையாசிரியர்களின் உரைநடை' என்னும் தலைப்பில் அவர் எழுதியுள்ள 23 பக்க ஆய்வுக் கட்டுரை. இக்கட்டுரை தமிழ் உரைநடை வரலாற்றில் 'துறையாசிரியர்களின் உரைநடை' என்ற ஒரு தொல்பகுதி இதுகாறும் இடம் பெற்றிலது என்பதனைத் தமிழ் கூறு நல்லுலகிற்கு முந்துற எடுத்துக்காட்டி, அப்பெருமக்களின் புலமை, நடை முதலான சில கூறுகளை நன்கு புலப்படுத்துகின்றது. 'நூலாசிரியர், உரையாசிரியர், நூலுரையாசிரியர், பாடலாசிரியர், தொகுப்பாசிரியர் என்ற கூட்டத்தோடு இதுவரை தமிழுலகம் மறந்திருந்த **துறையாசிரியர்** என ஒரு கூட்டத்தையும் தமிழ் வளர்ச்சியில் நாம் கூட்டிக் கொள்ள வேண்டும்' (ஒப்பியல் நோக்கு, ப. 132) என்பது இக்கட்டுரை வலியுறுத்தும் மையக் கருத்தாகும்.

'சிலப்பதிகாரம்' என்னும் பெயர் சிலம்பு காரணமாக வந்தது என்பது நாம் எல்லோரும் நன்கு அறிந்தது. எனினும் அச்சிலம்பு எது? யாருடையது? என்று கேட்டால் நம்மில் பெரும்பாலோர் கண்ணகியின் காற்சிலம்பே காப்பியத்தின் பெயருக்குக் காரணம் என்று கூறுவோம். வேறு வகையாக நினைத்துப் பார்க்க அறியோம். வ.சுப.மா.வோ 'எந்தச் சிலம்பு?' என்னும் தலைப்பில் ஓர் அரிய ஆய்வுக் கட்டுரையினை எழுதியுள்ளார் (காப்பியப் பார்வை, பக்.87-104). அதில் அவர் கோப்பெருந்தேவியின் தொலை சிலம்பே-தொலைந்து போன சிலம்பே- சிலப்பதிகாரப் பெயருக்குக் காரணம் என்பதைத் தக்க சான்றுகளுடன் நிறுவியுள்ளார். 'சிலப்பதிகாரப் பெயர் பற்றிய என் ஆராய்ச்சி முன்னையோர் ஒருமுகமாகக் கூறிவரும் கருத்துக்கு முற்றுமுரணாக இருந்தாலும், உண்மை காண முயலுதலும் கண்ட உண்மையை வலியுறுத்துதலும் தமிழ் மாணவர் கடனாகும். இக்கடமையுணர்ச்சியே என் கருத்தை வெளியிடத் தூண்டிற்று' (ப.104) எனக் கட்டுரையின் முடிவில் முத்தாய்ப்பாக அவர் கூறியுள்ள கருத்து, ஆய்வாளர் அனைவரும் மனங்கொள வேண்டிய ஒன்றாகும்.

வ.சுப.மா.வின் புதிய ஆய்வுப் பார்வைக்குச் சான்றாகப் பிறிதோர் இடத்தினையும் சுட்டலாம்.

***'விற்பெருந் தடந்தோள் வீர விங்குநீர் இலங்கை வெற்பில்***
***நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன்***
***இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும்***
***கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்.'***

கம்பரின் இப் பாட்டு பலரும் அறிந்ததொன்று. இலங்கையில் சீதையின் இருப்பிடத்தைக் கண்டு வந்த அனுமன் அதனை இராமனுக்குக் கூறும் பாட்டு இது. இதில் வரும் 'நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன்' என்ற அடிக்கு இதுவரை கூறப்பட்டு வந்த பொருள் 'பெருந்தவம் உடைய நங்கையைக் காணவில்லை' என்பதாகும். ஆயின் நுணுகி ஆராயும் நுட்பத் திறமும் எதனையும் மறித்து -எதிர்த்துப் பார்க்கும் நோக்கும் கொண்ட வ.சுப.மா. இவ்வடிக்குக் கூறும் நயமான பொருள் விளக்கம் இதோ:

''நங்கையைக் கண்டேனல்லேன்' என்று மாத்திரம் பிரித்துக் கொண்டு நயங்காணுவது பொருத்தமாகாது. 'நற்பெருந் தவத்தளாய நங்கை' என்று முன்வரும் அடைமொழியையும் சேர்த்துப் பார்க்க வேண்டும். அங்ஙனம் இணைத்துப் பார்த்தால் 'நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேன், நல்லேன்' எனவே பிரிக்க வேண்டும். அல்லேன் என்ற பிரிவு பொருட் பிழை. நல்லேன் என்பதற்குத் தவஞ்செய்யும் சீதையைக் காணும் நல்ல பேறு பெற்றேன் என்று பொருளாகும். 'தவஞ் செய்த தவமாம்' என்பதை ஒப்புநோக்குக'' (சங்க நெறி, ப.42).

எதையும் முன்னையோர் சிந்தனையினின்று மாறுபட்டுப் புதிய கோணத்தில் அணுகுவது என்பது வ.சுப.மா.வுக்கு மிகவும் விருப்பமான ஒன்று. இது அவர் தம் ஆசிரியர் பண்டிதமணி கதிரேசனாரிடமிருந்து கற்றுக்கொண்ட பாடமாகும். 'உயர் நிலைப் பாவலர் மயர்வற ஆக்கிய விழுப்பொருள் நிறைந்த செய்யுள்களின் சொற்பொருளொழுக்கில் நம் நுண்ணறிவு எதிரேறிச் செல்லல் வேண்டும். அங்ஙனஞ் சென்று அச் சொற் பொருள்களின் வன்மை வனப்புகளை ஆராய்ந்தளக்க முயலின், அச்செய்யுளாசிரியன் ஆழ்ந்து நினைவிற் கண்டு வைத்த

அரும்பொருள் மணிகளின் இயலொளியை உண்மை யாகக் கண்டு இன்புறலாம். ஆராய்ந்து தெளிவதற்கு முன் அச் சொற் பொருள்களோடு எதிர்த்து நிற்றலே நன்றாகும்' என்பது பண்டித மணியின் கருத்து (உரைநடைக் கோவை: இரண்டாம் பகுதி, ப.467). இக்கருத்திற்கு இணங்க, வ.சுப.மா. பண்டைச் சான்றோர் பாடல்களின் சொற்பொருள்களோடு எதிர்த்து நின்ற இடங்கள் பலவாகும்; அங்ஙனம் நின்று அச்சொற்பொருள் களின் வன்மை வனப்புகளை மாறுபட்ட கோணத்தில் ஆராய்ந்து வெளியிட்டுள்ள இடங்கள் மிகப் பலவாகும். தக்க எடுத்துக்காட்டு ஒன்றினால் இக்கருத்தினை விளக்கலாம். 'யாண்டு பலவாக நரையில ஆகுதல்' எனத் தொடங்கும் பிசிராந்தையாரின் புறப்பாட்டை வரிசைப் பாட்டு எனச் சிறப்பித்துக் கூறுவார் வ.சுப.மா. அதில் வரும் ஓர் அடி 'யான் கண்டனையர் என் இளையரும்' என்பது. 'இளையர்' என்பதற்கு 'ஏவலாளர்' என்றே இதுகாறும் பொருள் சொல்லப்பட்டு வந்துள்ளது; வ.சுப.மா.வோ இதற்கு 'உடன் பிறப்பினர்' எனப் புதிய பொருளை உரைக்கின்றார். மேலும், ''மனைவி, மக்கள், வேந்தன், ஊர்ச் சான்றோர் என்போர் இயல்பான தொடர்பினர், விலக்க முடியாத உறவு நிலையினர். இந்நிலையினரோடு எண்ணத்தக்கவர் அல்லர் ஏவலாளர்; விலகற்கும் விலக்கற்கும் உரியர். ஆதலின் 'என் இளையர்' என்பார் உடன்பிறப்பினரே ஆவர். 'மாண்ட என் மனைவி' என்ற நடையை ஒப்புநோக்குக'' (சங்க நெறி, பக். 83-84) எனத் தம் கருத்திற்குத் தகுந்த - ஏற்றுக்கொள்ளத்தக்க - விளக்கத்தினையும் எழுதிச் செல்கின்றார் அவர்.

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையிடம் காணப் படுவது போல் வ. சுப. மா. விடமும் தம் ஆய்வின் இடை யிடையே எதிர்கால ஆய்வுக்கான வித்துக்களைத் தூவிச் செல்லும் போக்கினைச் சிறப்பாகக் காண முடிகின்றது. 'உரையாசிரியர்களின் எடுத்துக்காட்டுக்கள் என்று தலைப்பிட்டு ஒரு நூல் வடிவில் பெரிய ஆராய்ச்சி செய்யத் தகும் என்பதனை என் சொற்பொழிவு மறைமுகமாகப் புலப்படுத்தும்' (தொல்காப்பியக் கடல், ப.295) என்றும், 'சங்கப் பனுவலில்

வந்து கிடக்கும் காமப் பள்ளிக் குறிப்புக்கள் பலப்பல. இந்நுணுக்கங்கள் ஒரு தனி நூலுக்கு உரியவை' (தமிழ்க் காதல், ப.403) என்றும், 'திருக்குறளும் பாரதவமைப்பியலும் என்பது தனிநூலுக்கு ஏற்ற பொருள்' (திருக்குறட் சுடர், ப.138) என்றும், 'சாத்தனார் தமிழ் என்பது ஒரு தனித் திறனாய்வுக்கு உரியது' (காப்பியப் பார்வை, ப.133) என்றும் வ.சுப.மா. எழுதியுள்ள ஆய்வுக் குறிப்புக்கள் இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. இங்ஙனம் தனிநூலுக்கு உரிய பொருள்களை மட்டு மன்றி, தனிக்கட்டுரைக்கான பொருள்களையும் வ.சுப.மா. எதிர்கால ஆய்வாளர்களுக்கு ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றார். 'சங்க நூல்களும் கோவைகளும் என்பது ஒரு தனிக்கட்டுரைக்கு உரிய பொருளாகும் என்று கொள்க' (இலக்கியச் சாறு, ப.113) என்றும், 'உடன் என்ற சொல்லாட்சி பொருளாட்சிகள் தனிக் கட்டுரைக்கு உரியன என்பது என் கருத்து' (காப்பியப் பார்வை, ப.192) என்றும் வரும் குறிப்புக்கள் இவ்வகையில் நினைவு கூரத்தக்கவையாகும்.

தாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பொருளின் அழகையும் ஆற்றலையும் திறம்பட வெளிப்படுத்துவது என்பது ஓர் ஆய் வாளரின் தலையாய கடனாகும். இவ்வகையிலும் வ.சுப. மா. தம் ஆசிரியர் பண்டிதமணி கதிரேசனாரைப் பெரிதும் அடி யொற்றிச் செல்கின்றார்; தம் ஆய்வில் இலக்கிய நாடித் துடிப்புடைய இடங்களைத் தேர்ந்து, அவற்றின் அழகுகளையும் ஆற்றல்களையும் நோக்கு முறையில் சுவைபட எடுத்துக் காட்டுகின்றார். 'இலக்கிய நயம் பல வகைப்படும். அறிவு தித் திக்குமாறு சொல்வது பொருள் நயம் எனப்படும். இதனால் கருத்தின் அருமையையும் புலவனின் சிந்தனையையும் புரிந்து கொள்கின்றோம்' (இலக்கியச் சாறு, ப.169) என்னும் வ.சுப.மா. வின் கருத்து இங்கே மனங்கொளத்தக்கதாகும்.

*'இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீயா கியரெங் கணவனை*
*யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே'*

என்பது அம்மூவனாரின் புகழ்பெற்ற குறுந்தொகைப் பாடல் (49). இப்பாடலின் விளக்கத்தில் வ.சுப.மா. காட்டியுள்ள அரிய

பொருள் அழகும் ஆற்றலும் நயமும் நாகரிகக் குறிப்பும் எண்ணி எண்ணி இன்புறத்தக்கவையாகும்.

''தலைவன் பெரும்பரத்தன், இன்பத் துறையில் மிக எளியவன் என்பதற்காகத் தமிழ்ப் பெண் நெஞ்சு மாறாள், இல்லறம் துறவாள். இல்வாழ்க்கையை ஆடாது அசையாது நிலைகாக்கும் தூண் போல்பவள் பெண் என்பது தமிழியம். 'எப்பிறப்பிலும் என் கணவன் நீயாவாய்; நின் ஒழுக்கம் எவ்வாறாயினும், நின் மனத்துக்குப் பிடித்த மனையாக நான் இருப்பேன் என்பதன்றோ உறுதியெனப்படும்? என் ஒழுக்கம் நின் ஒழுக்கத்தைப் பொறுத்தது. நீ திரியின் எனக்கும் திரிபேற் படாதா?' என்று சொல்லுதல் ஊதிய முறை யாகுமேயன்றி ஒழுக்கப் பெற்றியாகாது. திரிந்தவனைத் தான் திரியாது திருத்துதல் சால்பாகும்; திரிந்தவனால் தானும் திரிபுபடுதல் கயமையாம். பண்டைத் தமிழ்ப் பெண்டிர் தாம் என்றும் நிலை திரியாத் திண்ணியர். அத்திண்ணிய அன்பினால் கணவனைத் திருத்த முயலும் நெறியினர். இஃது தமிழர் கண்ட இல்லற நாகரிகம். 'இம்மை மாறி மறுமை யாயினும்' என்ற உறுதித் தொடரைக் கேட்கும் ஆடவனது மனம் சிறிது சிந்திக்கும். 'நீயாகியர் எங்கணவனை' என்ற அன்புத் தொடரைக் கேட்கும் போது திருந்தும் எண்ணம் பிறக்கும். 'யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே' என்ற பண்புத் தொடரைக் கேட்கும்போது, இப்பிறப்பிலேயே அவளின் நெஞ்சு நேர்பவனாக ஆக வேண்டும் என்ற கருத்துத் தோன்றி, ஆகினேன் என்று சொல்ல மாட்டானா மானம் மிக்க ஆண்தகை?'' (தமிழ்க் காதல், பக். 341-342).

இங்ஙனம் பண்டைத் தமிழர் கண்ட இல்லற நாகரிகத்தினையும், பண்டைத் தமிழ்ப் பெண்டிரின் திண்ணிய அன்புச் சால்பினையும் அம்மூவனாரின் குறுந்தொகைப் பாடலைக் கொண்டு வ.சுப.மா. வெளிப்படுத்தியிருக்கும் பாங்கு பயில்வார் நெஞ்சை அள்ளுவதாகும்.

'தாமரைத் தண்தாது ஊதி, மீமிசைச் சாந்தின் தொடுத்த தீந்தேன் போல', (நற்றிணை 1) அன்னைத் தமிழ் மொழி

அருமையானது; இனிமையானது. அத்தமிழ் மொழிக்கு மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் தம் ஆய்வுத் திறத்தால் ஆற்றியுள்ள தொண்டு நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழம் மிக்கது. சுருங்கக் கூறின், வ.சுப.மா.வால் தமிழ் தகுதி பெற்றது; தமிழால் வ.சுப.மா. தகுதி பெற்றார். இத் தகுதி காரணமாக ஆய்வுலகில் 'தமிழ் இமய'மாக அவர் என்றும் நின்று நிலவுவார்.

# 4. கவிஞர்

*'விசுவரூபம் சாத்தியமில்லை*
*சுயரூபத்தையாவது*
*நிரூபிக்க வேண்டிய நேரமிது.'*

*-பத்மாவதி தாயுமானவர்**

'மூதறிஞர்', 'செம்மல்', 'தமிழ் இமயம்' என்றெல்லாம் போற்றப்படும் வ. சுப. மாணிக்கனார், ஒரு சிறந்த ஆய்வாளர் மட்டுமல்லர்; ஒரு நல்ல படைப்பாளியும் கூட. ஆய்வு மனமும், படைப்பு மனமும் ஒருவரிடமே அமைவது என்பது அரிது. ஆயின், வ.சுப. மா. 'இரண்டு மனம் வேண்டும்' என்று இறைவனிடம் கேட்டுப் பெற்றிருப்பாரோ என்னவோ? எல்லாம் வல்ல இறைவனும் அவரது இனிய தமிழ்க் குரலுக்கு- அன்பு வேண்டுகோளுக்கு -இசைந்திருப்பாரோ என்னவோ? வ.சுப. மா.விடம் ஆய்வு மனமும், படைப்பு மனமும் இறுதி வரை கைகுலுக்கிய வண்ணம் ஒற்றுமையாக வாழ்ந்து வந்தன. 'தமிழ்க் காதல்', வள்ளுவம், 'கம்பர்', முதலான நூல்கள் அவரது சீரிய ஆய்வுப் பார்வையைக் காட்டுவன என்றால், 'கொடை விளக்கு', 'மாமலர்கள்', 'நெல்லிக்கனி' முதலான நூல்கள் அவரது நேரிய படைப்புள்ளத்தைப் புலப்படுத்துவனவாகும்.

## வ.சுப.மா.வின் கவிதை நூல்கள்

படைப்பிலக்கியத் துறைகளைப் பொறுத்தவரையில், வ.சுப.மா. மிகுந்த ஆர்வத்தோடு ஈடுபட்ட துறைகள் இரண்டு. ஒன்று, கவிதை; மற்றொன்று, நாடகம். இவ்விரண்டனுள்ளும், கவிதைத்துறையில் அவர் வெளியிட்டுள்ள நூல்கள் மூன்று. **அவையாவன:**

-----------

**★ மறுபடியும், ப.79.**

1. கொடை விளக்கு - இந்நூல் வள்ளல் அழகப்பரின் வாழ்க்கையைப் பாடுபொருளாகக் கொண்டது; 171 வெண்பாக்களால் அமைந்தது; 1957 - இல் வெளிவந்தது. 'அன்னைத் தமிழின் அணிவிரல் மோதிரம், என்னப் புனைந்த இளஞ்சிறு காப்பியம்' என்பது கவிஞரின் சுவையான பாயிரக் குறிப்பு ஆகும்.

2. மாமலர்கள் - இந்நூல் பல்வகைச் செய்யுளொடு பல்வகைப் பொருள் சார்ந்தது; 1978-இல் முதற்பதிப்பாக வெளிவந்தது.

3. மாணிக்கத் தமிழ் - இந்நூல் ஐந்நூற்றாறு குறட் பாக்களைத் தன்னகத்தே கொண்டது; அந்தாதிப் போக்கில் அமைந்தது; 1991 -ஆம் ஆண்டில் வெளிவந்தது. சுருங்கக் கூறினால், வ.சுப.மா.வின் கொள்கை விளக்க நூலாக இந்நூல் திகழ்கின்றது.

இனி, இம்மூன்று கவிதைப் பனுவல்களின் வாயிலாக, வ.சுப.மா. என்ற கவிஞரின் பாட்டுத் திறத்தினைக் குறித்துக் காண்போம்.

## வ.சுப.மா.வின் அளவுகோலில் பாட்டு

'பாட்டு என்றால் உணர்ச்சி துள்ள வேண்டும், கற்பனை செறிய வேண்டும், உவமை கலக்க வேண்டும், எதுகை மோனை இணைய வேண்டும், நயம் கனிய வேண்டும், நோக்கு இருக்க வேண்டும்... இங்ஙனம் பாட்டுக்கு ஓர் அளவுகோல் செய்து வருகின்றோம்' (சங்க நெறி, ப.82) என்பர் வ.சுப. மாணிக்கம். வ.சுப.மா.வின் இவ்வளவுகோலைக் கொண்டே அவரது கவிதைத் திறத்தினைக் காண முற்படுவோம்.

## உணர்ச்சி வெளிப்பாடு

'சுற்றி நில்லாதே போ! - பகையே, துள்ளி வருகுது வேல்' என்றாற் போல், பிற எல்லாக் கூறுகளையும் விலக்கி வைத்துவிட்டு, கவிதையில் துள்ளி வந்து முன்னே நிற்பது உணர்ச்சி ஆகும். 'அச்சம் தவிர்' என்று வெறுமனே கூறுவதை

விட, 'உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதினும், அச்ச மில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே!' என்று கூறு வதில் வீர உணர்வின் கூர்மையான வெளிப்பாட்டை உணரலாம். 'தம்பி! நம் அண்ணா செய்த காரியம் கொஞ்சமும் நன்றாக இல்லையல்லவா?' என்று சாதாரணமாகக் கேட்பதை விட, 'இது பொறுப்பதில்லை - தம்பி! எரிதழல் கொண்டு வா! கதிரை வைத்திழந்தான் - அண்ணன் கையை எரித்திடுவோம்' என்று வேகமாகக் கூறும்போது கோப உணர்வின் கொந்தளிப் பினை நன்றாக உணர முடிகின்றது. இங்ஙனம் கவிதைக் கலைக்கு உயிரோட்டத்தினைத் தந்து நிற்கும் அடிப்படையான உணர்ச்சிகளை எண் வகையாகப் பகுத்துக் கூறுவர் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர். நகை முதலாக உவகை முடிய உள்ள இவற்றை 'மெய்ப்பாடு', 'இரசம்', 'சுவை' என்னும் சொற்களால் சுட்டுவர் சான்றோர். இனி, வ. சுப. மா. வின் கவிதைப் படைப்புக்களில் உணர்ச்சித் திறம் பளிச்சிட்டு விளங்கும் ஒரு சில இடங்களைக் காண்போம்.

ஆங்கிலேயர்கள் நம் நாட்டை விட்டு என்றோ அகன்று விட்டனர்; என்றாலும், ஆங்கில மோகம் நம் நெஞ்சை விட்டு இன்னமும் அகன்ற பாடில்லை. வ.சுப.மா.வும் 'அன்னை கொதிக்கிறாள்' என்னும் தலைப்பில் எழுதிய ஓர் இயக்கப் பாட்டில் நம் நாட்டவரின் ஆங்கில மோகத்தை அங்கதச் சுவையோடும் நகைச்சுவை உணர்வோடும் சாடுகின்றார். 'ஆங்கில மோகம் அதிகமாக யாருக்கு உண்டு?' என உலகத்தில் ஒரு போட்டி வைத்தால், அதில் ஆங்கில நாட்டாரே அதிசயிக்கும் வகையில் முதல் பரிசைத் தட்டிச் செல்பவர் யாராக இருப்பார்கள் தெரியுமா? தமிழர்கள்தானாம்! நல்ல நகைச்சுவை உணர்வு மிளிரும் வ.சுப.மா.வின் நயமான கவிதைப் பகுதி இதோ!

***'ஆங்கில மோகம் அடிமையிற் கூட***
***ஏங்கிய தமிழர்க்கு இவ்வள வில்லை;***
***ஆங்கில மோகம் யாருக் குண்டென***
***ஓங்கிய போட்டி உலகிடை வைப்பின்***

*ஆங்கில நாடரும் ஆஆ என்னத்*
*தாங்கும் பரிசு தமிழர்க்கு உண்டே!:'*

(மாமலர்கள், ப.115)

'ஆங்கில மோகத்தினின்றும் இன்னும் தமிழர் விடுதலை பெற்றிலர்' என்னும் கசப்பான உண்மையை இங்கே இனிப் பான அங்கத நடையில் வெளியிட்டுள்ளார் வ.சுப.மா.

ஆய கலைகள் அறுபத்து நான்கனுள் மிகவும் அரிய கலை சிற்பக் கலையே. எந்த அடிப்படையில் இப்படிக் கூறமுடியும் என்று கேட்கிறீர்களா? இதோ வ.சுப.மா.வே 'மாணிக்கக் குற'ளில் ஓரிடத்தில் இதற்குத் தமக்கே உரிய நகைச்சுவை உணர்வோடு விடை கூறுகிறார், பாருங்கள்:

*'பொலிவார் சிலைக்களவு போம்விலை கேட்டால்*
*மலிவார் கலையன்று மற்று'*

(மாணிக்கக் குறள், 254)

வேலைப்பாடு மிக்க நம் நாட்டுச் சிலைகள் நம்மவராலேயே களவாடப் பெற்று வெளிநாடுகளுக்குக் கொண்டு சென்று விற்கப்படும்போது - வெளிநாடுகள் அந்தச் சிலைகளுக்குத் தர முன்வரும் விலையை அறியும்போது - மலிவான கலையன்று சிற்பக் கலை என்று நமக்கு நன்கு விளங்கத்தானே செய்யும்? 'கோயில் பூசை செய்வோர் - சிலையைக் கொண்டு விற்றல் போலும்' என்று பாரதியார் அவலச் சுவை ததும்பப் பாடிய பொருளையே, வ.சுப.மா. இங்கே நகைச்சுவை உணர்வோடு சாடியுள்ளார்.

நகைச்சுவைக்கு மாறான சுவை அவலச் சுவை. வாழ்வில் அவலத்தை வெறுத்து ஒதுக்கும் நாம், இலக்கியத்தில் இடம் பெறும் அவலத்தைச் சுவைத்துப் படிக்கிறோம். 'கொடை விளக்கு' என்ற நூலில் வள்ளல் அழகப்பரின் மறைவை ஒட்டி மக்கள் அழுது புலம்புவதாக வ.சுப.மா. இயற்றியுள்ள கையறு நிலைப் பாடல் ஒன்று படிப்பவர் நெஞ்சைப் பாகாய் உருக்கும் அவலப் பாடல் வரிசையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். அப்பாடல் வருமாறு:

*'துக்கத் துணிதாங்கித் தொய்யும் மனந்தாங்கி*
*நெக்கு வடிகின்ற நீர்தாங்கி-எக்கால்*

*இனியோர் அழகப்பா எங்கட்கு எனாஅ*
*நனிசோர்வர் மக்கள் நலிந்து'*

(கொடை விளக்கு, 4)

'தாங்க முடியாத' அவலத்தில் மூழ்கிக் கிடக்கும் மக்களின் மனத் துயரைச் சித்திரிக்கும் இப்பாடலில் 'துணிதாங்கி', 'மனந்தாங்கி', 'நீர்தாங்கி' என்னும் முரண் சுவை கொண்ட தொடர்களைக் கையாண்டிருக்கும் வ.சுப.மா.வின் கவிதைத் திறம் எண்ணி எண்ணி மகிழத்தக்கதாகும்; மனம் நெகிழத் தக்கதுமாகும்.

இங்ஙனம் உணர்ச்சி வெளிப்பாட்டால் நம் நெஞ்சை அள்ளும் இடங்கள் வ.சுப.மா.வின் கவிதைகளில் நிரம்ப உண்டு.

## கற்பனை வளம்

பெண்ணுக்குக் கற்பினைப் போன்றது கவிஞருக்குக் கற்பனை. கற்பனை இல்லாமல் கவிஞர் இருக்க முடியாது; கவிதை பிறக்க முடியாது. கவிதை என்றால் அதில் கற்பனை கட்டாயம் கலந்திருக்கும்; கவிஞர் என்றால் அவரிடம் கற்பனை கட்டாயம் குடிகொண்டிருக்கும். 'புலவர்கள் குறிக்கோள் உடையவர்கள். அக்குறிக்கோளைப் பதியவைப்பதற்கு அன்னவர்கள் கையாளும் இலக்கியக் கருவியே கற்பனை யென்பது' (தமிழ்க் காதல், ப.91) எனக் கற்பனைக்கு விளக்கம் தருவர் வ.சுப.மா. அவரது கவிதைகளில் இக்கற்பனை களிநடம் புரியும் ஒரு சில இடங்களைக் காணலாம்.

'இடைப்படக் குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி, இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்ப் பட விதிர்த்தும், மயக்குறு மக்க'ளைத் தம் புறப் பாடலில் (188) அழகிய சொல்லோவியமாக்கிக் காட்டுவார் பாண்டியன் அறிவுடை நம்பி. நம்பியின் இச்சொல்லோவியத்திற்கு இணையாக வ.சுப.மா.வும் ஒரு வெண்பாவில் 'பிள்ளைக் கனியமுது' பற்றிக் கற்பனை நயம் விளங்கப் பாடியுள்ளார்.

*'கள்ளந் தொடாத கனியே! வா! காதலர்தம்*
*உள்ளந் தொடுக்கும் உவப்பே! வா! - பள்ளம்*

*விழுகச் சிரிக்கும் வியப்பே! அமிழ்தம்*
*இழுகத் திறவாய் இதழ்'*

(மாமலர்கள், ப.48)

என்பது வ.சுப.மா. தீட்டும் எழில் மிகுந்த சொற்சித்திரம். 'தவம் செய்த தவமாம் தையல்' என்னும் கம்ப சித்திரம் போல், குழந்தையின் கொள்ளை 'அழகிற்கு அழகு சேர்க்கும்' அற்புதமான சொற்சித்திரம் இது!

குழந்தை கண்ணுறங்குவதற்காகத் தாலாட்டுப் பாடிய கவிஞர்களை நாம் அறிவோம். ஆயின், வ.சுப.மா.வோ புதிதாகக் குழந்தை கண் வளர்வதற்காகத் 'தமிழாட்டு'ப் பாடுகின்றார் (மாமலர்கள், பக்.77-81).

*'முல்லை நறுமுகையோ*
*முழுதலராத் தாமரையோ*
*புல்லின் பனித்துளியோ*
*பொற்கதிரே கண்வளராய்!'*

என்பது 'தமிழாட்'டின் தொடக்கம். முல்லை அரும்பு, தாமரைப்போது, பனித்துளி, பொற்கதிர் எனச் சின்னஞ்சிறு குழந்தையின் வடிவிற்கும் வண்ணத்திற்கும் ஒப்புமையாக வ.சுப.மா. கையாண்டுள்ள உவமைகள் அவரது கற்பனை வளத் திற்குக் கட்டியம் கூறுவனவாகும். இயற்கையை ஆராதிக்கும் முருகியல் உணர்வோடு தொடங்கும் 'தமிழாட்டு' இடையே தன் பெயருக்கு ஏற்பத் தமிழுணர்வோடு குழந்தையைத் தாலாட்டி மகிழ்கின்றது.

*'மாசிலாத் திருக்குறளோ?*
*மனங்கவரும் சிலம்படியோ?*
*காசிலா வாசகமோ?*
*கம்பனார் காப்பியமோ?*
*சங்கத்தின் இலக்கியமோ?*
*தடம்புதிய பாரதியோ?*
*எங்கள்தொல் காப்பியமோ?*
*எல்லாமும் நீதானோ?*

இத்தகைய சுகமான 'தமிழாட்' டில் தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருந்த குழந்தை, இடையில் எப்படியோ தூக்கம் கலைந்துவிட எழுகின்றது; அழுகின்றது; வெதும்பி- அலறி-

அழுகின்றது. இங்கே குழந்தையின் அழுகைக்கு- துடிப்புக்கு- வ.சுப.மா. காட்டும் காரணம் புதுமையானது; வித்தியாசமானது; இதுவரை எவரும் பாடாதது.

*'அம்மாவோ என்னைநீ*
*ஆங்கிலவாய்ப் பள்ளிக்குச்*
*சும்மாவும் விடாயென்று*
*சொல்லாவோ துடிக்கின்றாய்?*
*சிறியவாய்க் குழந்தைகள்*
*செந்தமிழை உண்ணாமல்*
*தெரியவாய் ஆங்கிலத்தைத்*
*திணிப்பதற்கோ துடிக்கின்றாய்?'*

குழந்தையின் துடிப்புக்கு இங்கே வ.சு.மா.கற்பிக்கும் காரணம் கற்பவர் நெஞ்சைத் தொடுவதாகும்.

'மாமலர்கள்' தொகுப்பில் 'குழந்தைப் பாடல்கள்' என்னும் பிரிவில் ஆறு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் 'நூல் விளையாட்டு' என்னும் தலைப்பில் அமைந்த பாடல், சின்னஞ் சிறு மழலைச் செல்வங்களுக்குத் தமிழ் இலக்கியச் செல்வங் களை வேடிக்கையான போக்கில் கற்பனை நயம்பட அறிமுகம் செய்யும் அறிவு விருந்தாக விளங்குகின்றது.(ப. 41)

**உவமை நயம்**

'சின்னச் சின்ன இழை பின்னிப் பின்னி வரும் சித்திரக் கைத்தறிச் சேலை' என்றாற் போல், 'சின்னச் சின்ன உவமைகள் பின்னிப் பின்னி வர சித்திரக் கவிச்சேலை' யைப் படைத்துச் செல்லும் போக்கினை வ.சுப.மா. விடம் சிறப்பாகக் காணமுடி கின்றது. தக்க சில சான்றுகள் கொண்டு இக் கருத்தினை மெய்ப் பிக்கலாம். 'பணத்தைத் தண்ணீராய்ச் செலவழிக்கிறான்' என்று உலகியலில் சாதாரணமாகக் கூறுவார்கள்; இதனை நினைவில் கொண்டு வள்ளல் அழகப்பரின் கொடைப் பெருமையைப் பற்றிப் பாடும்போது, 'நீரைப் புழங்கினால் என்னப் பொருட் செல்வமெல்லாம் வழங்கினான்' (கொடை விளக்கு, 7)என்ற இயல்பான உவமையைக் கையாளுகின்றார் வ.சுப.மா. 'நட்டம், மலைபோல் அழுத்தினும் மாமல்லபுரத்துச் சிலைபோல் இருப்பன் சிரித்து' (கொடை விளக்கு, 120) என்பது வள்ளல்

அழகப்பரின் மனத் திட்பத்தைச் சுட்டுவதற்கு வ.சுப.மா. கையாளும் உவமையாகும்.

தமிழின் இனிமைக்கு வ.சுப.மா.கையாண்டிருக்கும் ஓர் உவமை புதுமையானது; இதுவரை யாரும் சொல்லாதது. 'இடியப்பம் போலும் இனிமைத் தமிழ்' என்னும் அவ்வுவமை 'மாணிக்கக் குற'ளில் (477) இடம் பெற்றுள்ளது.

தமிழின் வளர்ச்சிக்குப் புதிய சொல்லாக்கங்களை உருவாக்குவது மிகவும் இன்றியமையாதது என்பது வ.சுப.மா. வின் அழுத்தம் திருத்தமான கருத்து. இத்தகைய சொல்லாக் கங்களைப் படைத்து உலவவிடுவதில் அவருக்கு உள்ள ஈடுபாடே தனி. சான்றாக,

> ***'மக்கள் கூட்டம் வளருந் தமிழின்***
> ***சொற்கள் கூட்டம் போலத் தொக்கது;***
> ***சேர்ந்த மக்கள் செழுந்தமிழ் எழுத்தில்***
> ***நேர்ந்த ஒழுங்கின் நிரைநிரை நின்றனர்'***
>
> (மாமலர்கள்,ப.98)

என வரும் பகுதி வளரும் தமிழின் சொற்களின் மீது- செழுந் தமிழ் எழுத்துக்களின் மேல் - அவருக்கு உள்ள ஆழ்ந்த பற்றைத் திறந்துகாட்ட வல்லதாகும்.

'புரட்சி மண்டோதரி' என்பது வ.சுப.மா.வின் கவி வண்ணம் காட்டும் சிறுபடைப்பு. பெண்மைக்கும் புரட்சிப் பண்புக்கும் மதிப்பளிக்கும் புதுப்படைப்பு, அதில் வரும் மண்டோதரி தன் கணவன் இராவணன் பிறன் மனையாளாகிய சீதையைக் காமுற்று அசோக வனத்தில் கொண்டு வந்து சிறை வைத்திருக்கிறான் என்ற தீய செய்தியினைக் கேட்டு வெதும்பு கிறாள்; எப்படியேனும் அவனைத் திருத்தும் துணிவு கொள்கிறாள். இராவணன் ஒரு நாள் நள்ளிரவில் அசோக வனம் சென்று இரந்து பேசி சீதையின் காலடியில் விழ முற்படும் போது, அங்கு முன்னரே சென்றிருந்த மண்டோதரி எதிரே தோன்றுகிறாள். எதிர்பாராமல் தன் மனையாளைக் கண்ட இராவணன் நடுநடுங்குகிறான். அவனது அப்போதைய நிலையையும் உணர்வையும் மூன்று அழகிய உவமைகளால் எடுத்துக் காட்டுக்கின்றார் வ.சுப.மா. அவ்வுமைகள் வருமாறு:

*'கள்ளமாய் எழுதித் தேர்வில்*
*கைப்படு பேதை போல*
*எள்ளலாய்ப் பெண்ணைப் பேசி*
*இடிபடுங் கயவன் போலத்*
*துள்ளலாய் வேலி தாண்டித்*
*தொடுத்துணும் மாடு போல*
*உள்ளமாய் நடுக்கங் கொண்டான்*
*உம்பரை நடுக்கஞ்செய்தான்.'*

*(மா மலர்கள், ப.92)*

முன்பு உம்பரை எல்லாம் நடுங்கச் செய்த இராவணன், இப்போது உள்ளம் முழுவதும் நடுக்கம் கொண்டான். எப்படி? தவறு செய்து கையும் களவுமாய்ப் பிடிபட்ட ஒரு பேதையைப் போல - ஒரு கயவனைப் போல, வேலி தாண்டிச் சென்று அடுத்தவர் இடத்தில் உண்ண நினைக்கும் ஒரு மாட்டினைப் போல, அவன் ஒழுக்க வேலியைத் தாண்டி, பிறன்மனையாளின் மேல் காமம் கொண்டான். இங்ஙனம் இராவணனின் பேதைமைக்கும் கயமைக்கும் கீழ்மைக்கும் வ.சுப.மா. கையாண்டிருக்கும் உவமைகள் அவரது படைப்பாற்றலை மட்டுமின்றி, ஒழுக்கத்தை உயிரினும் மேலாகப் போற்றும் அவரது உயரிய உள்ளத்தினையும் உணர்த்தி நிற்கின்றன.

உயர்ந்த குறிக்கோள் உடைய வாழ்வே வாழ்வு; குறிக்கோள் இல்லையென்றால் அதற்குப்பெயர் 'வீழ்வு!' 'குறிக்கோள் இலாது கெட்டேன்!' என்ற அப்பர் வாக்கும் இதனை வலியுறுத்தும். நல்லதொரு குறிக்கோளை நெஞ்சகத்தே வரித்துக் கொண்டு, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வருவோரே 'மக்கள்' என்னும் உயர்திணைச் சுட்டிற்குப் பொருத்தமானவர் ஆவர்; நாளுக்கு நாள் ஐயத்தில் கிடக்காமல், அச்சத்தில் சாகாமல், கையத்துப் பொருளைக் கண்டால் கடிநாய் போல் ஓடிச் செல்லாமல், 'ஏற்றதொரு குறிக்கோளை எனதுள்ளம் என்றால் இறுதிவரை கொண்டிருப்பேன்; எது வரினும் கைவிடேன்' என்னும் உறுதியுடன் இமயம் போல் நிலை குலையாமல் வாழும் வாழ்வே இனிய குறிக்கோள் வாழ்வாகும். இத்தகைய சீரிய குறிக்கோள் எதுவும் இல்லாத வாழ்வு எப்படிப்பட்டதாக இருக்கும்? இதோ, வ.சுப.மா.வே நான்கு

அழகிய உவமைகளை அடுக்கிக் கையாண்டு பாடுகின்றார், பார்ப்போம்:

*'குறிக்கோள் இலாத வாழ்வு*
*கோடுகள் இலாத ஆட்டம்:*
*நெறிக்கோள் இலாத நெஞ்சு*
*நிறைநீர் இலாத யாறு;*
*மறிக்கோள் இலாத கல்வி*
*வரப்புகள் இலாத நன்செய்;*
*செறிக்கோள் இலாத மேனி*
*திறவுகோல் இலாத பூட்டாம்'*

*(மாமலர்கள் ப. 60)*

'கோடுகள் இல்லாத ஆட்டம்', 'நிறைநீர் இல்லாத ஆறு', 'வரப்புகள் இல்லாத நன்செய்', 'திறவுகோல் இல்லாத பூட்டு'- என வரும் இந்நான்கு உவமைகளின் வாயிலாகக் குறிக்கோளின் அருமையினையும் ஆற்றலினையும் படிப்பவர் நெஞ்சில் நன்கு பதிய வைக்கின்றார் வ.சுப.மா.

இங்ஙனம் படைப்பாற்றல் பளிச்சிடும் அழகிய உவமைகள் பலவற்றை வ.சுப.மா. தம் கவிதைகளில் கையாண்டுள்ளார்.

## தொடக்கமும் முடிவும் நயமுற அமைதல்

வ.சுப.மா.வின் 'மாமலர்கள்' தொடக்கமும் முடிவும் நயமுற அமைந்த கவிதைப் படைப்பாகும். அதில் இடம் பெற்றுள்ள தொடக்கக் கவிதையின் தலைப்பு 'இந்தியப் பாயிரம்' என்பதாகும்; முடிவுக் கதையின் தலைப்பு 'உலகப் பாயிரம்' என்பதாகும். 'இந்தியப் பாயிர'த்தில் தொடங்கி, 'உலகப் பாயிரத்'தில் முடிவதுபோல் வ.சுப.மா. இந்நூலை உருவாக்கியிருக்கும் திறம் போற்றத்தகுவதாகும். மேலும், 'உலகப் பாயிரம்' என்னும் கவிதையின் தொடக்கத்தில் எதுகை, மோனை, முரண் மூன்றும் 'அருமையில் எளிய அழகு'டன் அமைந்திருக்கும் பாங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

*'இனிய உலகம் இன்னா உலகா*
*அளிய உலகம் அடிதடி உலகாப்*
*பெரிய உலகம் பின்னிய உலகா*
*நல்ல உலகம் நம்பா உலகா*
*மாறி வருவதை மாற்றல் வேண்டும்;*
*மாற்றம் இன்றேல் கூற்றம் வருமால்;*
*இற்றைப் போக்கே இன்னும் வளரின்*
*நாளைய உலகம் நன்றா காதே!'*

*(மா மலர்கள், 127)*

## நவில்தொறும் வெளிப்படும் நயம்

நயங்கள் பலவற்றைத் தன்னகத்துக் கொண்டிருப்பதே ஒரு நல்ல கவிதையின் தலையாய பண்பாகும். தெய்வத் தமிழில் 'நயத்துக்குச் சுந்தரர்' என்பது போல் இன்றைய தமிழில் 'நயத்துக்கு மாணிக்கனார்' எனக் கூறத் தக்க அளவில், நல்ல நல்ல நயங்கள் பல வ.சுப.மா.வின் கவிதைகளில் ஆங்காங்கே வட்ட மிட்டு நிற்கின்றன. அவற்றுள் ஒரு சிலவற்றை இங்கே சுருங்கக் காண்போம்.

ஔவையாரின் 'ஆத்திசூடி', பாரதியாரின் 'புதிய ஆத்தி சூடி', பாரதிதாசனின் 'பாரதிதாசன் ஆத்திசூடி', 'இளையார் ஆத்திசூடி' ஆகியவற்றை அடியொற்றி வ.சுப.மா. இயற்றி யுள்ள சிற்றிலக்கியம் - சிறுவர் இலக்கியம் - 'தமிழ்சூடி' (1978). இதில் சின்னஞ் சிறுகுழந்தைகள் மனங்கொளத்தக்க 118 சீரிய அறக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. இக்கருத்துக்களின் ஊடே ஒளிவிடும் ஒரு சில நயங்களை இவண் காண்போம்.

***'தமிழ்சூடி வழிபாடு செய்வாய் குழந்தாய்***
***தாய்மொழி தவறாது கற்பாய் குழந்தாய்***
***திருக்குறள் கண்போலத் தெளிவாய் குழந்தாய்***
***தீமைகள் மனத்தினும் தீண்டாய் குழந்தாய்***
***துடிபோலப் பள்ளிக்குத் தொடர்வாய் குழந்தாய்***
***தூய்தமிழ் எங்குமே சொல்வாய் குழந்தாய்***
***தென்றலில் நன்றாகத் திளைப்பாய் குழந்தாய்***
***தேனினிய நூலகம் செல்வாய் குழந்தாய்***
***தைத்திங்கள் பொங்கலில் தளிர்ப்பாய் குழந்தாய்***

*தொண்டுகள் பலசெய்யத் துடிப்பாய் குழந்தாய்*
*தோலாத தமிழ்நூல்கள் தொகுப்பாய் குழந்தாய்'*

என்பது 'தமிழ்சூடி'யின் பாயிரம். இப் பாயிரம் த வரிசை எழுத்துக்களால் நிரல்பட அமைந்திருப்பது ஒரு நயம்.

'கீதை நெறி நில்' (35), 'கொரான் வழிநில்' (41), 'விவிலியம் படி' (113) - வ.சுப.மா.வின் ஒருமைப்பாட்டு உணர்வை நயமுற வெளிப்படுத்தும் அறிவுரைகள் இவை.

வ.சுப.மா. பழமையைப் போற்றும் பண்பாளராக மட்டும் நில்லாமல், புதுமையை மனமார வரவேற்கும் பண்பினராகவும் விளங்குகின்றார். 'ஐ.நா.நன்று' (9), 'மே நாள் அயர்' (102), 'வானொலி கேள்' (112) என வரும் நயவுரைகள் இவ்வகையில் நினைவுகூரத்தக்கவை. 'கையூட்டு மறு' (40), 'தீண்டாமை யொழி' (64), 'போரையொழி' (94), 'மதுவை விலக்கு' (96), 'கிளர்ச்சி எதற்கு' (34) - இன்றைய சமூக அவலங்களுக்கு எதிரான வ.சுப.மா.வின் கவிக் குரல்கள் இவை. 'உன்னைத் திருத்து' (31), 'ஏனென்று கேள்' (8), 'நெஞ்சை உயர்த்து' (78), 'பிறவியை மதி' (86), 'சாவிலும் மகிழ்' (45), 'யமனைப் புறங்காண்' (45), 'மக்களை மதி' (14), 'மாற்றம் விரும்பு' (97) - 'தமிழ் சூடி' வழங்கும் தெள்ளிய தன்முன்னேற்றச் சிந்தனைகள் இவை.

'தமிழ் சூடி' தமிழுக்குத் தரும் இடம் தலைமையானது; தனித்தன்மை வாய்ந்தது. 'தொல்காப்பியம் படி' (70), 'சங்க நூல் போற்று' (44), 'அகத் தமிழ் படி' (1), 'குறுந்தொகை படி' (36), 'புறத்திணை படி' (88), 'திருக்குறள் வரப்பண்' (63), 'சிலம்பை நடி' (46), 'தேவாரம் பாடு' (68), 'ஆழ்வார் நெறிநில்' (2) எனத் தம் பெயருக்கு ஏற்ப ஒல்லும் வகையெல்லாம் ஓங்கு தமிழ் நூல்களைக் கசடறக் கற்குமாறும் கற்றபின் அவற்றிற்குத் தக நிற்குமாறும் வலியுறுத்துகிறது 'தமிழ் சூடி'.

'தமிழாட்டு', 'தமிழ் சூடி' என்றாற் போல் 'தமிழாயிரம்' என்ற தலைப்பில் குறள் யாப்பில் அந்தாதி அமைப்பில் ஓர் அறநூல் - வாழ்வியல் நூல் - இயற்றத் திட்டமிட்டிருந்தார் வ.சுப.மா. ஆயின் நம் தவக் குறைவால் 506 குறள்கள் எழுதி

முடித்த நிலையிலேயே இம் மண்ணுலகை விட்டு மறைந்தார் அவர். இம் 'மாணிக்கக் குறள்' பயில்தொறும் பண்பாளர் தொடர்பு போல், நவில் தொறும் நயம் பல உணர்த்தும் தகைமை வாய்ந்ததாகும்.

'பதச்சோ'றாக, 'மாணிக்கக் குற'ளில் வ.சுப.மா. தமிழுக்குக் கையாண்டிருக்கும் ஐம்பதுக்கு மேற்பட்ட நயமான அடை மொழிகளை நிரல்படக் காணலாம்.

'வளமார் தமிழ்'(4), 'அருந்தமிழ்'(29),'பெருந்தமிழ்' (41),(44), 'முறைத்தமிழ்' (47), 'வெண்தமிழ்'(61), 'செந்தமிழ்' (63), (97), (119), (129), (152), (159), (171), (189), (206), (219), (359), (409), 'பெரியதமிழ்' (64), 'நந்தமிழ்' (67), (86), (259), 'எந்தமிழ்' (74), (160), (419), 'தீந்தமிழ்' (81), (115), 'கோல்தமிழ்' (87), 'தன்னிற் சிறந்த தமிழ்' (102), 'நெடுந்தமிழ்' (120), 'விளிவில் தமிழ்' (121), 'முத்தமிழ்' (137), 'சொற்றமிழ்' (139), 'செய்தமிழ்' (143), 'வளர்தமிழ்' (144), (350), 'பொருவில் தமிழ்' (163), 'தீஞ்சொல் தமிழ்' (190), 'செழுந்தமிழ்' (191), 'பைந்தமிழ்' (193), 'உயர்தமிழ்' (217), (380), (458), 'விளக்கு தமிழ்' (225), 'வண் தமிழ்' (258), பொதியத் தமிழ்' (280), 'இன்தமிழ்' (297), 'பொதியில் தமிழ்' (300), 'செல்தமிழ்' (303), 'உலகு தமிழ்' (313), 'நற்றமிழ்' (324), 'குளிர்தமிழ்' (351), 'மட்டுத்தமிழ்' (352), 'வெல்தமிழ்' (358), 'ஒண்தமிழ்' (362), 'முதுதமிழ்' (376), 'பண்தமிழ்' (376), 'பழுத்த தமிழ்' (379), 'கனிதமிழ்' (383), 'இளையாத் தமிழ்' (402), 'உரிமைத் தமிழ்' (418), 'விரிதமிழ்' (423), 'தொழுதமிழ்' (433), 'பசுந்தமிழ்' (434), 'நல்லதமிழ்' (456), 'பண்பார் தமிழ்' (457), 'நிறைசெந்தமிழ்' (466), 'கிளர்தமிழ்' (469), 'நலங்கூர் தமிழ்' (474), 'இனிமைத் தமிழ்' (477), 'படிதமிழ்' (478), 'எண் தமிழ்' (485) - இவ் அடைமொழிகள் அருந்தமிழின் அழகையும் -ஆற்றலையும், வண்ணத்தையும் வனப்பையும் வகை வகையாய்ச் சுட்டியிருப்பது வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்த ஒன்றாகும். இவை தமிழின்பால் வ.சுப.மா.வுக்கு உள்ள ஆழ்ந்த பற்றையும் புலப்படுத்தி நிற்பது கண்ட டு.

'மாரியிவன் எனச் சொன்னால் உவமை போதா
மற்றொன்று சொல்லுதற்கோ புலமை போதா'

எனப் பாரி நிலையம் செல்லப்பனாரைக் குறித்து வ.சுப.மா. எழுதியிருக்கும் அன்புரிமைப் பகுதியும் அவரது நயத்தமிழுக்கு நல்லதொரு சான்றாகும்.

## நோக்குத் திறன்

*'மாத்திரை முதலா அடிநிலை காறும்*
*நோக்குதற் காரணம் நோக்குஎனப் படுமே'*

என்பது தொல்காப்பியம். 'நோக்குதற் காரணம் நோக்கு எனப்படும். கற்பார் கண்டு மகிழ்தற்குரிய காரணமாகிய இனிமைத் திறம் அமைந்திருப்பது நோக்கு எனப்படும்' என இதற்கு விளக்கம் தருவர் உரையாசிரியர். மாத்திரை, எழுத்து, அசை, சீர், தொடை, அடி அனைத்தும் காரணம் கருதி அமைக்கப்பட வேண்டும். பயனின்றி ஒரு மாத்திரை இருப்பினும் அது நோக்கு ஆகாது. 'நோக்கு என்பது மறித்து நோக்குதல். ஒரு பாடலுள் ஒரு மாத்திரை முதல் அனைத்தையும் பயன்படுமாறு அமைப்பதையே இது குறிக்கிறது. ஒரு பாடலுள் ஒரு மாத்திரையையோ, அசையையோ, சீரையோ நீக்கினாலும் மாற்றினாலும் பொருள் கெட்டுவிடும் என்கிற அளவிற்கு ஒவ்வொன்றையும் காரணம் கருதிப் பொருந்திய இடத்தில் வேண்டிய அளவு அமைத்துப் பாட்டுப் பொருளைச் சிறக்கச் செய்வதே நோக்காகும்' என்னும் பேராசிரியர் தமிழண்ணலின் கருத்தும் இங்கே நினைவுகூரத்தக்கதாகும் (சங்க இலக்கிய ஒப்பீடு: இலக்கியக் கொள்கைகள், ப.172).வ.சுப.மா.வின் பாடல்களில் நோக்கு என்னும் உறுப்பு-திறன்-சிறப்பாக அமைந்த ஒரு சில இடங்களைக் காண்போம்.

தமிழில் 'ஆசை', 'மோகம்', பற்று' என்று மூன்று வகையான சொல்லாட்சிகள் உண்டு. இவற்றுக்கு இடையே நுண்ணிய பொருள் வேறுபாடுகளும் உண்டு. 'மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை,' 'ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள்', 'நாட்டுப் பற்று, மொழிப்பற்று, இறைப் பற்று' எனறாற் போல் வரும் பழகுதமிழ் வழக்குகளும் இதனை நன்கு உணர்த்துவனவாகும். இவ்வுண்மையினை மனங்கொண்ட வ.சுப.மா. தம் 'இந்தியப் பாயிர'த்துள் நாட்டுப் பற்றின்

இன்றியமையாமையை அழகுற எடுத்துரைக்கின்றார்:

*'சாதிப் பற்றும் சமயப் பற்றும்*
*காதல் அன்ன கட்சிப் பற்றும்*
*மோதல் இல்லா மொழியின் பற்றும்*
*ஆசை நீங்காக் காசுப் பற்றும்*
*நேசங் கலந்த ஈசன் பற்றும்*
*தேசப் பற்றுமுன் சிறுபற் றாகுக;*
*பற்றுக நாட்டுப் பற்றினைப் பற்றுக*
*மற்றோர் பற்று மனம்புகல் வேண்டா'*

*(மாமலர்கள், ப.1)*

நாட்டுப் பற்றின் அருமையை நோக்க, ஏனைய பற்றுகள் எல்லாம் 'சிறு பற்றுகள்' என்பது வ.சுப.மா. வின் கருத்து.

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது வள்ளுவர் வலியுறுத்தும் ஓர் அடிப்படை உண்மை. பொருளின் அருமைப்பாட்டை நன்கு உணர்ந்தே பண்டைத் தமிழரும் 'அறம் பொருள் இன்பம்' என்னும் வழக்குத் தொடரில்-வரிசைத் தொடரில்-பொருளை நடுவணதாக இடம்பெறச் செய்தனர். ஒருவன் பொருள் இருந்தால்தான் அறச் செயலைச் செய்ய இயலும்; இன்பம் நுகர வேண்டும் என்றாலும் அவனிடம் போதிய பொருள் இருத்தல் வேண்டும். இவ்வுண்மையைக் கருத்தில் கொண்டே கவியரசர் பாரதியாரும் 'பொருளில்லார் பொருள் செய்தல் முதற்கடன்' என்று அறுதியிட்டு உரைப்பார். தொல்காப்பியர், திருவள்ளுவர், பாரதியார் ஆகியோரின் கருத்துக்களை வழிமொழியும் பாங்கில் வ.சுப.மா.வும்,

*'பின்வாழ்க்கை வேண்டின் பெரும்பொருள் ஈட்டுக*
*என்வாழ்க்கை இல்லா தவர்க்கு'*

*(மாணிக்கக் குறள்,227)*

எனப்பொருளின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகின்றார்.

நோக்குக் கோட்பாட்டின் அடிப்படையில் ஆராயும்போது, இக்குறட்பாவின் பொருட்சிறப்பு நன்கு புலனாகும். 'பின் வாழ்க்கை வேண்டின்' என்பது இக்குறட்பாவின் தொடக்கம். 'எதிர்வரும் காலத்தில் இடரில்லாத நல்வாழ்வு வேண்டு

மானால்' என்பது இத்தொடரின் பொருள். 'ஒருவன் தம் முதுமைக் காலத்தில் அமைதியான - இன்பமான - வாழ்வு வாழ வேண்டுமானால்' என்று கூட இத்தொடருக்குப் பொருள் கொள்ளலாம். ஏனெனில் ஒருவன் தன் இளமையில் - பொருள் ஈட்டுகின்ற ஆற்றல் படைத்த இளமையில் - எவ்வளவு முடியுமோ அவ்வளவு பொருளை ஈட்டிக் கொண்டுவிட வேண்டும்; அதுதான் அவன் வாழ்வின் பிற்காலத்தில் அரணாக அமையும். அடுத்து, எவ்வளவு பொருள் ஈட்ட வேண்டும் என்ற வினாவுக்குப் 'பெரும்பொருள் ஈட்டுக' என விடையிறுக் கின்றார் வ.சுப.மா. ஒருவனின் வாழ்க்கைக்குப் 'பொருள்' சேர்க்க வல்லது 'பொருள்' என்பதால் - 'பொருள் அல்லது இல்லை பொருள்' என்பதால் - அடைமொழி சேர்த்துப் 'பெரும்பொருள் ஈட்டுக' என அறிவுறுத்துகின்றார் வ.சுப.மா. சரி, பொருள் இல்லை என்றால், ஒருவனின் வாழ்க்கை என்ன ஆகும்? இதற்கும் முத்தாய்ப்பாக மறுமொழி கூறுகின்றார் வ.சுப.மா. 'இல்லாதவர்க்கு என் வாழ்க்கை?' என்பது அவர் கேட்கும் வினா. தமிழில் 'இல்லான்' - 'இல்லாதவன்' - என்ற சொற்களும் பொருள் இல்லாதவனையே - வறியவனையே - குறிததல் இங்கே மனங்கொளத்தக்கதாகும்.

வ.சுப.மா., வள்ளல் அழகப்பரின் கொடைப் பண்பினை விதந்து பாடியுள்ள பாடல்கள் சிலவும் நோக்குத் திறத்தில் சிறந்து விளங்குகின்றன. 'வள்ளல்' என்ற தமிழ்ச் சொல் செய்த தவத்தால் பிறந்தவர் அழகப்பர் என்பது வ.சுப.மா.வின் இரத்தினச் சுருக்கமான வாக்கு.

*'வள்ளற் றமிழ்ச்சொல் வணங்கித் தவஞ்செய்து*
*கொள்ளப் பிறந்த கொடையழகன்'*

*(கொடை விளக்கு, 31)*

என அழகொழுக அழகப்பரைச் சுட்டுவார் வ.சுப.மா. இத்துடன் நில்லாது, வள்ளல் அழகப்பரின் கொடைப் பெருமையினை இன்னும் விரித்துப் பாடுகின்றார் அவர். கொடைத் துறையைப் பொறுத்தவரையில் அழகப்பர் பெற்றிருக்கும் வெற்றி மூவகையானதாம்.

*'பாரியை வென்றான் மனைக்கொடையால்; பாரிநிகர்*
*மாரியை வென்றான் மதிக்கொடையால்; நீரியைந்த*

*ஏரியை வென்றான் இடக்கொடையால்; காலவாட்*
*கூரினை வெல்லான் கொடுத்து'*

*(கொடை விளக்கு, 24)*

என வள்ளல் அழகப்பரின் மூவகை வெற்றியைப் போற்று கின்றார் வ.சுப.மா.

'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறிலும் கொடுப் பாரிலை' என்று சுந்தரர் பெருமான், பாரியின் வண்மையைப் பாடினார். எத்தனை கொடுத்தாலும் பாரி தான் இருந்த பறம்பு மலையைக் கொடுக்கவில்லை. அழகப்பரோ தாம் வாழ்ந்த கோட்டையூர் மாளிகையையும் கல்லூரிக்குக் கொடுத்து விட்டார். எனவே, குடியிருந்த வீட்டையும் வழங்கிய அழகப்பரின் வண்மை பாரியின் வண்மையிலும் பெரிது. ஆதலால், இனி 'அழகப்பன் என்றே அழைப்பினும் கொடுப் பாரிலை' என்று சுந்தரர் பாட்டினைப் புதுப்பிக்க வேண்டும் என்று கருதுகின்றார் வ.சுப.மா. (கொடை விளக்கு, 25).

### வ.சுப.மா. - கவிஞராக

*'ஊனக் குழந்தை ஒன்று பிறந்தால்*
*ஏனக் குழவியென் றெறியாள் தாயவள்;*
*என்னைப் பெற்ற என்தமி ழன்னை*
*எண்ணிற் பிறந்த இதனைத்*
*தன்னிற் பேரரெனத் தழுவுவள் பெரிதே'*

என 'மாமலர்க'ளுக்கு எழுதிய 'அடக்கப் பாயிர'த்தில் பணிவோடும் பெருமித உணர்வோடும் குறிப்பிடுகிறார் வ.சுப.மா. ஆய்வாளராக, உரைநடை ஆசிரியராக வ.சுப.மா. எடுத்திருப்பது 'விசுவரூபம்' என்றால், கவிஞராக அவர் காட்டியிருப்பது 'சுயரூபம்'தான்; மறுக்க முடியாத உண்மை இது. என்றாலும், கவிதை நூல்கள் வெளிப்படுத்தும் வ.சுப.மா.வின் 'சுயரூபம்' கவனிக்கப்பட வேண்டிய ஒன்றே என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

# 5. சிந்தனையாளர்

*'கதை எழுத நிகழ்ச்சிகள் உதவுதல் போலக் கட்டுரை எழுதச் சிந்தனை உதவுகின்றது. ஒரு பொருளைப் பற்றிப் பரந்த அறிவும் ஆழ்ந்த சிந்தனையும் இருந்தாலன்றி, அது பற்றிப் பல பக்கங்கள் கொண்ட ஒரு நூலை எழுதுதல் முடியாது.'*

-வி. செல்வநாயகம் *

ஆய்வாளர், உரையாசிரியர், உரைநடை ஆசிரியர், கவிஞர், நாடக ஆசிரியர் எனப் பல்வேறு தகுதிப்பாடுகள் வ.சுப.மா. வுக்கு உண்டு. இவற்றுடன் அவர் சிந்தனையாளராகவும் விளங்கு வது ஒரு சிறப்பாகும். 'சிந்தனை முகத்தில் தேக்கி' என்ற படி, அவர் தம் எழுத்தில் ஆங்காங்கே தேக்கி வைத்திருக்கும் சிந்தனைகள் பலப்பலவாகும். நாடு, மொழி, இனம், சமு தாயம், கல்வி, இலக்கியம், வாழ்வு முதலான பல்வேறு பொருள் களைப் பற்றிய அறிவார்ந்த, ஆழ்ந்த சிந்தனைகளை அவரது நூல்களில் பரக்கக் காணலாம். இத்தகைய சிந்தனைகளின் ஒளியில் இவ்வியல் வ.சுப.மா.வை ஒரு சீரிய சிந்தனையாளராக நிறுவ முற்படுகின்றது.

## 1. நாட்டுச் சிந்தனைகள்

### வல்லரசாகுக

வ.சுப.மா.வின் நெஞ்சில் நாடு பற்றிய சிந்தனை இமைப் பொழுதும் நீங்காமல் எப்போதும் குடிகொண்டிருக்கும். கட்டுரை, கவிதை, கடித இலக்கியம் என எவ்வடிவத்தில் எழுதினாலும் அதில் நாட்டின் மேம்பாடு பற்றிய நல்ல சிந்தனைகளை நீள நினைந்து வெளியிடுவது என்பது அவரது தனிப்பண்பாகும். சிறுகுழந்தைகளுக்காக எழுதிய 'தமிழ் சூடி'யிலும் அவர் 'இந்தியனாயிரு' (3) என்றும், 'நாட்டை

-----------

★ தமிழ் உரைநடை வரலாறு, ப. 134.

நினை' (73) என்றும் இரு அறிவுரைகளை வழங்கியிருப்பது இங்கே நினைவுகூரத்தக்கதாகும். 1965-ஆம் ஆண்டில் வ.சுப.மா. வெளியிட்ட கடித இலக்கியம் 'தலைவர்களுக்கு'. 'இந்நூல் என் நாட்டுத் தொண்டு' என்னும் இரத்தினச் சுருக்கமான வரியே இந்நூலின் முகவுரையாக இடம் பெற்றுள்ளது. இவை தவிர, 'திருக்குறட் சுடர்' நூலில் இடம் பெற்றுள்ள 'இந்திய வழிகாட்டி', 'நம்பிக்கை நூல்', 'தேசிய மறை திருக்குறள்', 'நிகழ்காலப் பார்வை' என்னும் கட்டுரைகளிலும் வ.சுப.மா. 'பசியே இல்லாப் பல்வளம் சுரந்து, பிணியே இல்லாப் பெருநலம் பெற்றுப் பகையே இல்லாப் பல்மறம் வீங்கி'ப் (மாமலர்கள், ப.3) பாரதம் வளர்வதற்கான வழிவகை கள் குறித்து விரிவாகச் சிந்தித்துள்ளார்; 'மக்கட் கணக்கில் உலகில் இரண்டாவது பெருநாடான பாரதம் எதிரிகட்கு வல்லரசாகவும் ஒன்னார்களை வெல்லரசாகவும் குடிகட்கு நல்லரசாகவும் வளர்ந்தோங்கி ஞால மதிப்புப் பெறல் வேண்டும் என்ற நாட்டுப்பற்றே நம் தலையாய நோக்கமாகும்' (திருக்குறட் சுடர், ப.141) எனத் தம் நோக்கத்தினையும் எடுத்துரைத்துள்ளார்.

'உலக அமைதி பேசிப் பேசி நம் உள்நாட்டு அமைதியைப் பலரும் கெடுக்க இடங்கொடுக்கின்றோமே. என் செய்வது?' (திருக்குறட் சுடர், ப.159) என்றும், 'நம் தாய்நாடு ஞாலத்தில் ஒரு பெருநாடு; மாநில மீது அது போல் பிறிதில்லை என்ற புகழ்ச்சிக்கு உரிய நாடு. எனினும் பயன் என்ன? நம்மைக் கண்டு பக்கத்து நாடுகள் துணுக்குறவில்லை. சீனப் படையெடுப்புக்குப்பின், சுற்றுச் சிறுநாடுகளுக்கெல்லாம் குளிர் விட்டுவிட்டது. அணிய நாடுகளின் பகை கூடாது, ஐ.நா.வில் சார்புத் துணை வேண்டும் என்று அஞ்சியஞ்சி விட்டுக்கொடுத்த போக்கால், கண்டது என்ன?' (திருக்குறட் சுடர், ப.7) என்றும் நம் நாட்டு நிலையை ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்த வ.சுப.மா., தம் சிந்தனையின் விளைவாகத் தோன்றிய ஓர் அழுந்திய உண்மையை ஆணித்தரமாக எடுத்துக்காட்டுகின்றார். 'இந்தியா தலைமையான வல்லரசாக வேண்டும்; வல்லரசாக முடியும்; வல்லரசாகும் தகுதியுண்டு' (திருக்குறட் சுடர், ப.158) என அவர் ஆழமாக நம்புகின்றார்; தம் நம்பிக்கையை வாய்ப்பு நேரும் இடங்களில் எல்லாம் வலியுறுத்திக் கூறுகின்றார்.

'சீனத் தாக்குதலுக்கு முன் இந்தியா போய்க் கொண்டிருந்த போக்கிலேயே பின்னும் போதல் ஒரு போக்கு எனப் புகழப்படுமாயினும், அப்போக்கு பிற் போக்கேயாம். மாறிய சூழ்நிலைகளைக் கணித்து, வேண்டுமேல், மாறத் தயங்குதல் கூடாது. அதுவே நாடு காக்கும் பெருநெறி... அணுக்குண்டு செய்யும் ஆற்றலுடைய ஆசிய நாடுகள் மிகச் சிலவே. அதற்குரிய மூலகங்கள் எம்மிடமிருந்தும், அணுக்குண்டு வடிக்க மாட்டோம் என்கின்ற கொள்கைத் தடிப்பு இனி வேண்டாம். வழிவழி நட்பல்லது வேறறியாச் சீனம் வஞ்சித்த பின், அணுக்குண்டு ஆக்கிக் காட்டும் கொள்கைத் துடிப்பே வேண்டற்பாலது. இந்தியக் குண்டின் வெடிப்பை எதிரிகள் கேட்கும் நாளே இனிய நாள். இவ் வல்லமையை நாம் வேண்டுவது பிற நாட்டைப் பிடித்து வஞ்சி சூடுதற்கன்று; நொச்சி என்னும் தற்காப்புக்கே...' (திருக்குறட் சுடர், ப.9)

'பாரதம் அணுவாயுத வல்லரசாக ஓங்கி நிமிர வேண்டும் என்று யான் வலியுறுத்துவதன் நோக்கம் அண்டை நாட்டைக் கைப்பற்றுவதற்கன்று; ஆட்சியாதிக்கம் செய்வதற்கன்று; எதிரிகளே அடங்கியிருங்கள், வாலை இந்தியத் திசை நோக்கி நீட்டாது சுருக்கிச் சுருட்டிக் கொள்ளுங்கள் என்று எச்சரிப்பதே யாகும்.

*மல்லினாற் செய்த புயத்தவன் மாற்றங்கள் நும்பால்*
*வில்வினாற் சொல்லி னல்லது வெந்திறல் வெள்கச்*
*சொல்லினாற் சொலக் கற்றிலம் யாம்*

என்று இலக்குவன் வல்லாண்மை பேசிய படி, பாரதம் போர்த்துடிப்பு மிக்கது என்பதனை முன்கூட்டியே உரைச் செய்வதற்கேயாம்.'

(திருக்குறட் சுடர், பக். 148-149)

இங்ஙனம் 'போர்த்துடிப்பு மிக்க பாரதம் உருவாக வேண்டும்' என்பதே வ.சுப.மா.வின் கனவாக உள்ளது.

## தேசிய நூல் திருக்குறள்

'பாரதம் அணுவாயுத வல்லரசாக ஓங்கி நிமிர வேண்டும்' என்னும் தம் கருத்திற்கு அரணாக வ.சுப.மா.,

*'படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்*
*உடையான் அரசருள் ஏறு'*

என்ற திருக்குறளை (381) மேற்கோள் காட்டுகின்றார்; 'இது பொருட்பாலின் முதற்குறள். அரசியல் நெறி பேசும் முதற் குறளிலேயே படை என்ற சொல்லை முதலாவதாக வைத்துப் பாடுகின்றார் வள்ளுவர். படையற்றது அரசாகாது என்ற பேருண்மையை இதனைக் காட்டிலும் வேறு வகையான் அறிவுறுத்த முடியுமா? தமிழறிஞர் எவ்வளவோ நூற்றாண்டுக்கு முன்னர் வலியுறுத்தியிருந்துங் கூட, சீனப் படையெடுப்புக்குப் பின்னரே தான் படையின் இன்றியமையாமையை நாம் உணர்ந்து கொண்டோம்' (திருக்குறட் சுடர், பக். 54-55) என இக்குறளின் கருத்தினை விரித்துரைக்கின்றார். இங்ஙனம் அரும்பெருங் கருத்துக்களை ஆற்றல் வாய்ந்த நடையில் புலப்படுத்தும் திருவள்ளுவர், இந்தியாவுக்கே வழிகாட்டியாக விளங்க வேண்டும் என்றும், அவர் படைத்தளித்த திருக்குறள் தேசிய நூலாகத் திகழ வேண்டும் என்றும் விழைகின்றார் வ.சுப.மா. 'தேசிய மறை திருக்குறள்', 'நிகழ்காலப் பார்வை' என்னும் கட்டுரைகளில் அவர் இக்கருத்தினைக் குறித்து விரிவாக அலசி ஆராய்கின்றார்.

'நம் பாரத அன்னை தேசியப் பாடல் உடையவள், தேசியக் கொடி உடையவள், மயில் என்ற தேசியப் பறவை உடையவள்... பாடல், கொடி, பறவை இவற்றோடு தேசிய நூல் என அறிவுப் பனுவலும் சேர்ந்தால், பாரத மக்களின் எண்ணங்கட்கு ஆக்கமான பற்றுக்கோடு கிடைக்கும். பாடல், கொடி ,பறவை போலச் சின்னமாக இராமல், மக்கட்கு உள்ளொளியும் ஒருமைச் சுடரும் பரப்பும் திருவிளக்காகத் தேசிய நூல் விளங்கும். பாரத மன்பதைக்கும் ஆட்சியாளி கட்கும் உண்மை நெறி காட்டி இடித்துரைத்து நேர்மைத் தடத்து இயக்கும் சான்றோன் போலத் தேசிய நூல் வழிகாட்டும்' (திருக்குறட் சுடர்,ப.129). இங்ஙனம் பாரத மக்களுக்கு உள்ளொளியும் ஒருமைச் சுடரும் பரப்பும் திருவிளக்காகத் திகழும் தகுதிப்பாடு-பாரத சமுதாயத்திற்கும் ஆட்சியாளர் களுக்கும் உண்மை நெறி காட்டி, இடித்துரைத்து, நேர்மைத்

தடத்தில் இயக்கும் ஒரு சான்றோர் போல இருந்து வழிகாட்டும் ஆற்றல்- வான்புகழ் வள்ளுவர் படைத்த திருக்குறளுக்கே உண்டு என்று உறுதியாக நம்புகின்றார் வ.சுப.மா. 'இந்தியா படை வலிமிகுந்த வல்லரசு ஆகுக; இந்திய மக்கள் மறம் பெறுக; திருக்குறள் வழிகாட்டுக'(திருக்குறட் சுடர், ப.159) என்றுஅவர் திண்ணமாக எடுத்துரைக்கின்றார்.

## 2. மொழிச் சிந்தனைகள்

### தமிழ் உணர்ச்சி

தமிழ்நாடு, தமிழ் மொழி, தமிழ் இனம் பற்றிய சிந்தனை கள் வ.சுப.மா வின் நூல்களில் அங்கிங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கக் காணலாம். 'நாமமது தமிழரெனக் கொண்டிங்கு, வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்வீர்!' (பாரதியார் கவிதைகள்,ப.168) என்னும் பாரதியின் கவிதை வரிகள் அவரது நூல்களில் அடிக்கடி மேற்கோளாகக் காட்டப் பெறும். வெறும் உணர்ச்சி நிலையில் மட்டுமன்றி, தமிழ் வளர்ச்சி-தமிழ் ஆக்கம் என்ற நிலைகளில் அறிவார்ந்த கருத்துக்களையும் கொள்கை களையும் உறுதியான நடையில் வெளியிடுவது அவரது சிறப்பியல்பாகும். 'மாமலர்கள்' தொகுப்பில் இடம்பெற்றுள்ள 'தமிழாட்டு', 'தமிழ்சூடி' என்னும் படைப்புக்களையும், 'மாணிக்கக் குற'ளையும் மனம் கலந்து பயில்வார் எவரும் மங்காத-மறையாத-மாறாத விழிப்பும் எழுச்சியும் உணர்ச்சியும் ஒளியும் பெறுவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. 'தமிழ் உணர்ச்சி சிறிதும் இல்லாதவரும் இந்நூலை (மாணிக்கக் குறளை) ஒருமுறை படிப்பாராயின், தமிழ் உணர்ச்சி பெற்றுச் சிறப்பர் என்பது திண்ணம்; ஒவ்வொரு குறளும் உணர்ச்சி ததும்ப வெளிவந்து கற்போர் உள்ளத்தில் விழுமிய உணர்ச்சியைப் பாய்ச்சுகின்றது!' என்னும் பேராசிரியர் சொ. சிங்காரவேலனின் மதிப்பீடு உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை (மாணிக்கக் குறள் ஓர் அறிமுகம், பக். 29-30).

## தமிழின் மாண்பு

வள்ளுவரின் வாய்மொழியிலே சொல்ல வேண்டும் என்றால், வ.சுப.மா.வின் தமிழ்ப் பற்று 'ஞாலத்தின் மாணப் பெரிது'; 'கடலிற் பெரிது'; 'மலையினும் மாணப் பெரிது'. 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத் தொழுது படித்திடடி பாப்பா' என்று பாப்பாவுக்குப் பாடிய பாரதிக்கு நிகராக, 'தமிழ் காக்கும் நன்மகனாக வாழ்க! அதனைக் கெடுக்கும் எமனாக வாழாதே!' என்று இளந்தமிழனுக்குக் கட்டளை இட்டவர் வ.சுப.மா.

> *'மகனாக வாழ்க வளர்தமிழ்க் கன்னிக்கு*
> *எமனாக வாழல் இழிவு'*
>
> *(மாணிக்கக் குறள், 144)*

என்பது அவரது வாக்கு.

வ.சுப.மா.வின் பார்வையில் தமிழானது 'தொழுதமிழ்', (மாணிக்கக் குறள், 433); 'பழுத்த தமிழ்' (மாணிக்கக் குறள், 379); 'பெரிய தமிழ்' (மாணிக்கக் குறள், 64); 'நெஞ்சைப் பிணிக்கும் மொழி' (மாணிக்கக் குறள், 115); 'தமிழ்ப் பால் பருகுவார்க்கு இல்லை பழுது' (மாணிக்கக் குறள், 310). அமுது என்று சொல்லப்படும் இந்தத் தமிழ் என்னவெல்லாம் தரும்: இதோ, வ.சுப.மா.வே 'மாணிக்கக் குறள்' ஒன்றில் தமிழால் ஒருவருக்கு வரும் நற்பேறுகளைப் பட்டியலிடுகிறார். 'அணிகலன் வேண்டுமா? புலமை நலம் வேண்டுமா? கலைவளம் வேண்டுமா? நிலைபேறு வேண்டுமா? வெற்றி வேண்டுமா? இவையெல்லாம் தமிழால் வருதல் உறுதி' என அறுதியிட்டு உரைக்கின்றார் அவர்.

> *'கலனும் புலனும் கலையும் நிலையும்*
> *வலனும் தமிழால் வரும்'.*
>
> *(மாணிக்கக் குறள், 59)*

எனவே, 'ஒலிக்கும் கடல் சூழ்ந்த இந்த உலகத்தில், தமிழைக் காட்டிலும் சிறந்ததாகிய தாய்மொழி எமக்கு வேறொன்றும் இல்லை' எனப் பெருமிதத்தோடு முழங்குகின்றார் வ.சுப.மா.

> *'தமிழிற் சிறந்ததோர் தாய்மொழி இல்லை*
> *இமிழ்கடல் ஞாலத்து எமக்கு'.*
>
> *(மாணிக்கக் குறள்,1)*

## தாய்மொழிக் கல்வியின் தகவு

மொழிக் கல்வியைப் பொறுத்தவரையில் வ.சுப.மா.வுக்குத் தெளிந்த - திட்டமான - கொள்கை உள்ளது. ஒரு மொழித் திட்டம் - தாய்மொழித் திட்டம் - என்பதே அவர் கொள்கை. ஒருவன் எந்த மொழியை எனினும் விரும்பிக் கற்கலாம். அதில், வ.சுப.மா.வுக்குக் கருத்து வேற்றுமை இல்லை. ஆனால், ஒருவன் தன் தாய்மொழிக்குப் பின்னரே எந்த அயல் மொழியையும் விரும்பிக் கற்க முற்பட வேண்டும். 'அயல் மொழி எதனையும் கற்கும் முயற்சியை மேற்கொள்ளுவதற்கு முன்னாக, உலக முதல் மொழியும் உன் தாய்மொழியும் ஆகிய தமிழைக் கற்பாயாக' என்பது வ.சுப.மா. விடுக்கும் அறிவுரை.

*'மொழியயல் கற்க முயலுமுன் உன்தாய்*
*மொழிதமிழ் கற்பாய் முதல்'*

*(மாணிக்கக் குறள், 45)*

என்பது 'மாணிக்கக் குற'ளில் வரும் ஒரு மணிக்குறள். 'முதலாகத் தாய்மொழி கற்று அயல்மொழி கற்பது வைப்பு முதல் போல் பயன்படும் என்னும் குறிப்புடையதுமாம்' என இக்குறளுக்கு விளக்கவுரை வரைவர் இரா. இளங்குமரன் (மாணிக்கக் குறள் தெளிவுரை, ப.12).

இங்ஙனம் யாருடைய பரிந்துரையும் தூண்டுதலும் வழிகாட்டுதலும் இல்லாமல் தமிழை எல்லோரும் விரும்பிக் கற்கும் நிலை எப்போது வாய்க்கும் தெரியுமா? 'தமிழ்க் கல்வி தமக்கு நல்ல வருமானத்தைத் தரும் என்பது நடைமுறைப் படுத்தப் பட்டால் ஒருவர் மேல் ஒருவர் மோதி இடித்துக் கொண்டு எமக்கு இடம், உமக்கு இடம் என்று ஓடி வருவார்களாம்!'

*'தமக்கு வருவாய் தமிழ்தரும் என்றால்*
*எமக்குஉமக்கு என்பார் இடித்து'*

*(மாணிக்கக் குறள், 476)*

எனக் 'காமம் செப்பாது கண்டது மொழி'கிறார் வ.சுப.மா.

## தமிழை உயர்த்துக!

'தமிழ் வாழ்க!', 'இந்தி ஒழிக!' என்பன போன்ற உணர்ச்சி

மயமான முழக்கங்களில் வ.சுப.மா.வுக்கு நம்பிக்கை இல்லை. 'ஒழிக!' என்று நாம் ஓங்கி ஓங்கிக் கத்துவதால் இந்திமொழி ஒழிந்துவிடாது; அதேபோல், 'வாழ்க!' என்று நாம் உணர்ச்சி வயப்பட்டு உரத்த குரலில் முழங்குவதால் தமிழ் மொழி வளர்ந்துவிடாது. 'ஒழிக!' என்பதனால் ஒழியாமல், இந்திமொழி ஓங்குதலைக் கண்டாவது, ஒழிந்து வரும் நம் தாய்த் தமிழை உயர்த்துவதற்கு உரிய வழிவகைகளை உடனே நாம் பார்க்க வேண்டும். நமக்கு உடனடியாக வேண்டுவது தமிழ்க் காவலும் வளர்ப்புமே யன்றி, இந்தி ஒழிப்பு அன்று.

> *'ஒழிகெனக் கத்துதற்கோ இந்தி யொழியும்;*
> *ஒழியும் தமிழை உயர்த்து'*
>
> *(மாணிக்கக் குறள், 66)*

என்பது வ.சுப.மா.விடுக்கும் அன்புக் கட்டளை.

அடுத்து, தமிழை உயர்த்துவதற்கான - ஆங்கிலத்திற்கு ஈடாக வளர்ப்பதற்கான - வளர்ச்சிப் பணிகள் என்னென்ன என்பது பற்றியும் வ.சுப.மா. சிந்தித்துள்ளார். இவ்வகையில் அவர் வலியுறுத்தும் இரு வகைப் பணிகள் இதோ:

1. நம் மொழிக்கு எவை எவை வேண்டும் என்னும் குறைவைத் தெரிந்து நூல்கள் இயற்றுதல்.
2. அதே பொழுதில் ஆங்கிலத்திற்கு ஒப்பாகப் பலதுறை அறிவு நூல்களையும் திரட்டி வைத்தல்.

முன்னது குறைவு நீக்கப் பணி; பின்னது நிறைவு ஆக்கப் பணி. இரண்டும் வேண்டும் என்பது வ.சுப.மா.வின் அழுத்த மான கருத்து. இவ்வளர்ச்சிப் பணிகளை எப்படிச் செய்ய வேண்டும் தெரியுமா? 'நறுக்கெனச் செய்தல் நலம்'(மாணிக்கக் குறள்,473) என்கிறார் வ.சுப.மா. இப் பணிகளின் விளைவாக 'என்றும் தமிழால் எதுவும் பெறலாகும்'(மாணிக்கக் குறள்,470) என்னும் புதுப்பெருமை தமிழுக்கு வந்து சேரும் எனக் கருதுகின்றார் அவர்.

## மொழிக் கலப்பின் கேடு

மொழிகளைக் கலந்து பேசுவதாலும் எழுதுவதாலும் வரப்பெறும் நன்மை எதுவும் இல்லை; மாறாக, மீளாத் தீமையே

உண்டு. மொழிக் கலப்பால் 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' எனப்பட்ட வேங்கடம் நம்மை விட்டுப் போயிற்று; அயலொலி கலந்தமையால், தமிழகத்தின் சேர நாடாக இருந்த மலைநாட்டுப்பகுதி, கேரளமாகப் பிரிந்து போயிற்று. 'தவறாக ஏற்றுக் கொண்ட மொழிக் கலப்பினால் தானே தமிழ் நிலமாக இருந்தவற்றை ஆந்திரம், கருநாடகம், கேரளம் எனத் தனியே செலவிட்டோம்; அவை வஞ்சத்தால் படையெடுத்து வந்தோ பிரிந்தன? இல்லையே. இவை மொழிக் கலப்பு ஆகாது என்பதற்கு எடுத்துக்காட்டு அல்லவோ?' என்னும் வ.சுப.மா.வின் வினா பொருள் பொதிந்த ஒன்றாகும்.

*'தவற்றுக் கலப்பால் தமிழ்நிலம் விட்டோம்*
*கவற்றுப் படையெடுத்தோ காட்டு'*

*(மாணிக்கக் குறள்,369)*

என்பது 'மாணிக்கக் குறள்'.

ஆழ்ந்த மொழி உணர்வோடும் அகன்ற வரலாற்று உணர்வோடும் இச்சிக்கலை அணுகும் வ.சுப.மா. மொழித் தூய்மையைத் தலைமையாகக் கட்டிக் காத்தலே கற்ற கல்வியின் பயனாகும் என்று கருதுகின்றார்; தமிழில் இயற்கை ஒலிக்கு மாறான அயலொலி சேராமல் அகற்றுமாறும், அதுபோல் அயற்சொற்களுக்கு எல்லாம் உரிய தமிழ்ச் சொற்களைக் காணுமாறும் அறிவுறுத்துகின்றார். இவ் வகையில் சூத்திரம் போல் அமைந்த அவரது மணிமொழிகள் இதோ:

*'மொழித் தூய்மை கட்டித் தலைக்காக்கை கற்பு'*

*(மாணிக்கக் குறள்,371)*

*'களைக அயலொலி; காண்க தமிழ்ச் சொல்'*

*(மாணிக்கக் குறள்167)*

தமிழ் எழுத்தாளர் மாநாடு அண்ணாமலை நகரில் 23.3.1987-இல் நிகழ்ந்தது. அம் மாநாட்டில் 'படைப்பிலக்கியப் பாங்கு' என்னும் பொருளில் பொது முதன்மையுரை ஆற்றினார் வ.சுப.மா. அவ்வுரையின் முடிவில் தமிழ் எழுத்தாளர்களுக்கு வ.சுப.மா. விடுத்த வேண்டுகோள் இங்கே சிறப்பாக நினைவு கூரத்தக்கதாகும்.

"எழுத்துச் சான்றோர்களே, என் சுருக்கமான இன்றைய வேண்டுகோள் இதுவே. முடிந்தவரை தமிழ்ச் சொற்களைக் கூடுதலாகப் பயன்படுத்துங்கள். எழுத்தாளர் கலக்கும் ஆங்கில முதலான அயற்சொற்கள் தேவையற்றவை... 'மாவண் தமிழ்த் திறம்' என்று மணி மேகலைச் சாத்தனார் மொழிந்த படி, தமிழுக்குப் பல துறைகளைச் சொல்லும் திறமுண்டு; எழுத்தாளர்களாகிய நமக்குத் தமிழாக எழுதும் ஆற்றலும் உண்டு. தவறான மொழிக் கொள்கைப் போக்கால் நம் படைப்புக்கள் வலுவிழக்கின்றன. நம் படைப்புக்கு நிலைபேறு தருவது உயர் கருத்து மட்டுமன்று; உயர்தனிச் செம்மொழியும் ஆகும்... 'நிலைபெறுமாறு எண்ணுதியேல்' என்று நாவுக்கரசர் கேட்டபடி நம் புதுமைப் படைப்புக்கள் எதிர்கால மன்பதைக்குச் சென்று இயக்க வேண்டுமானால் தமிழ் எழுத்தாளர்கள் பெயருக்குத் தகுந்த தனித்தமிழ் எழுத் தாளர்களாக ஒளிபெறல் வேண்டும். இதுவே நிலை பேறும் வழிப்பேறும் ஆகும். இதுவே நம் வேண்டுகோள்.'

*(இலக்கியச் சாறு, பக்.22-23).*

வ.சுப.மா.வின் இவ் வேண்டுகோள் இன்றைய தமிழ் எழுத்தாளர்கள் நன்கு மனத்திருத்தி, நடைமுறைப்படுத்த வேண்டிய ஒன்றாகும்.

## எழுத்துச் சீர்திருத்தம் வேண்டா!

எழுத்துச் சீர்திருத்தம் கூடாது என்னும் கொள்கையில் இறுதி வரை உறுதியாக நின்றவர் வ.சுப.மா. அதற்கெனப் போராட்டமும் நடத்திக் காட்டியவர் அவர். 'தமிழுக்கு எழுத்துத் திருத்தமும் சுருக்கமும் வேண்டும் என்பது அதன் இயல்போடு பொருந்தாது; அது, அதன் இயல்பைக் கெடுத்து அழிக்கும் கற்பனைத் திட்டத்தின் வழிப்பட்டதாகும்' என்பது அவரது முடிந்த முடிபு.

> *'எழுத்துத் திருத்தம் இயல்போ தமிழைக்*
> *கழித்துச் சுழிக்கும் கதை'*

*(மாணிக்கக் குறள், 156)*

என்பது 'மாணிக்கக் குறள்'.

'எழுத்துச் சீர்திருத்தம் எங்கே போய் முடியும்?' என்னும் தலைப்பில் 20 பக்க அளவில் வ.சுப.மா. 'தனிவரைவு நூலினை-'ஒரே பொருள் பற்றிய தனிநூலினை (Monograph) வெளியிட்டுள்ளார். சிதம்பரம் மணிவாசகர் பதிப்பகத்தின் சார்பில் 1.4.1989-இல் இந்நூல் வெளியிடப் பெற்றுள்ளது. ''ஏனைப் பல மொழிகளைக் காட்டிலும், ஒலியால் ஒலிப்பால் எழுத்தால் செறிவால் நுட்பத்தால் பண்பால் வரலாற்றால் நிறைவுடைய தூய செந்தமிழுக்கு மட்டும், ஏனை மொழிகட்கு இல்லாத எழுத்துக் குறையுண்டு என்று அன்னையின் அடி வயிற்றிற் கை வைக்க வேண்டாம். இதுவே ஒப்பியல் அறிவுடைமையாகும். உள்ள நல்ல சீர்மையை உணர முடியாவிடினும், உள்ள சீரைக் கெடுத்து அல்லதைப் பரப்ப வேண்டாம். இந்தியவொருமை, உலகவொருமைகளையெல்லாம் திரித்துப் பேசித் தமிழொருமையையும் தமிழ் வடிவையும் சிதைப்பது மொழி மாசாகும், தமிழ்க் கொல்லியாகும். 'உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்' என்பது சங்கத்தமிழ் காட்டிய முன்னேற்றச் சீர்மை. இவ் வுண்மையைத் தன்னறிவோடும் தமிழ் மானத்தோடும் கடைப்பிடிப்போமாக'' (ப.20) என இந்நூலின் முடிப்புரையில் முத்தாய்ப்பாகக் கூறியுள்ளார் வ.சுப.மா.

## தமிழ் நூல் கற்க!

தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள், ஆண்டாள் தமிழ், ஆழ்வார் தமிழ், ஔவையார் நூல்கள், கம்ப ராமாயணம் முதலான அருந்தமிழ் நூல்களுள் ஒரு சிலவற்றையேனும் செம்மையுறக் கற்றால்-பொருள் புரிந்து தெளிவாகக் கற்றால்-அதனால் பலப்பல நற்பயன்கள் விளையும் என்பது வ.சுப.மா. வின் கருத்து. ஒருவன் தன் வாழ்நாளில் இத்தனை நூல்களைக் கற்க வேண்டுமா என மலைக்க வேண்டியதில்லை. அவன் ஒரே ஒரு நூலை மட்டும் - திருக்குறளை மட்டும் - தெளிவுடன் ஆழமாகக் கற்றால் போதும்; திருக்குறளிலும் ஒரே ஒரு குறளையேனும் கசடறக் கற்று, அதனைத் தன் வாழ்க்கையில் கடைப்பிடித்தால் போதும். அவனுடைய வாழ்வு ஒளி படைத்த

வாழ்வாக உயரும் என உறுதி மிக்க குரலில் உரைக்கின்றார் வ.சுப.மா.

*'ஒளிவாழ்வு வேண்டின் ஒருகுறளை யேனும்*
*தெளிவாழ்ந்து செய்தல் திறம்'*

*(மாணிக்கக் குறள், 285)*

'தமிழ் சூடி'யிலும் 'திருக்குறள் கண்போலத் தெளிவாய்' என்றும், 'தோலாத தமிழ் நூல்கள் தொகுப்பாய்' (மாமலர்கள், ப.82) என்றும் குழந்தைக்கு அறிவுரை கூறுகின்றார் வ.சுப.மா.

## குழந்தைக்குத் தமிழ்ப்பேர் இடுக!

'தமிழரின் தமிழ்க் குழந்தை தமிழ்ப் பெயர் பெறுதல் வேண்டும்' எனப் பாவேந்தர் பாரதிதாசன் 'தமிழியக்கத்'தில் முன்மொழிந்ததை வழிமொழிந்து வ.சுப.மா. 'மாணிக்கக் குற'ளில் பாடியுள்ளார். குழந்தைகளைப் பொறுத்த அளவில் அவர் பெற்றோர்களுக்கு இரு கட்டளைகளை இட்டுள்ளார். அவை வருமாறு:

1. பெற்றோர்கள் தாங்கள் பெறும் வருமான அளவுக்குத் தக்க அளவில் மக்களைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.
2. அம்மக்களுக்குத் தமிழ்ப் பெயர் இட்டு இனிமையுறச் செய்தல் வேண்டும்.

இவ்விரு கட்டளைகளையும் உள்ளடக்கிய 'மாணிக்கக் குறள்' இதோ:

*'பெறுக குழந்தை பெறுவருவாய்க் கேற்ப*
*உறுக தமிழ்ப்பேர் ஒலி'*

*(மாணிக்கக் குறள், 216)*

## போராடுக!

இன்றைய சூழலில் எல்லா வகைகளாலும் ஒப்பற்று விளங்கும் தமிழின் வாழ்வுக்காகப் போராட்டம் மேற்கொள்வதிலும் தவறில்லை என்று கருதுகின்றார் வ.சுப.மா.

*'போராட்டம் இன்றிப் பொருளில் தமிழுக்கு*

*தேரோட்டம் இல்லை தெளிவு'*

*(மாணிக்கக் குறள், 163)*

என்னும் அவரது வாக்கு 'போராட்டம் இல்லாமல் தமிழின் சிறப்புகள் ஒருபோதும் நிலைபெறப் போவதில்லை' என்னும் உண்மையைத் தெள்ளத் தெளிவாக உணர்த்துகின்றது.

## 3. தனி மனித, சமுதாய முன்னேற்றச் சிந்தனைகள்

வ.சுப.மா. இன்றைய நடைமுறை உலகை - சமுதாயத்தை - சீர்திருத்துவதற்கான - 'கெட்ட போரிடும் உலகினை வேரோடு சாய்ப்பதற்கான' - வழிவகைகள் என்னென்ன என்று சிந்தித்துப் பார்க்கின்றார்; அங்ஙனம் சிந்திக்கும் போது அதற்குத் தனி மனிதனின் முன்னேற்றம் எத்துணை இன்றியமை யாதது என்றும் எண்ணிப் பார்க்கின்றார்; 'உள்ளம் திருந்தினால் உலகம் திருந்தும்' - 'தனிமனிதன் திருந்தினால் சமுதாயமும் திருந்தும்' என்ற முடிவுக்கு வருகின்றார். எனவே, அவர் தம் நூல்களில் தனிமனித, சமுதாய முன்னேற்றச் சிந்தனைகளுக்கு முதன்மை இடத்தினை வழங்கியுள்ளார்.

### மாணாக வாழ்தல் மனிதம்

மனிதன் மனிதனாக வாழ வேண்டும்; உயர்ந்த, மாண்புடைய மனிதப் பண்புகளைக் கொண்டவனாக அவன் விளங்க வேண்டும்: 'மாணாக வாழ்தல் மனிதம்' (மாணிக்கக் குறள், 279) என்பது வ. சுப. மா. வின் மணித்தமிழ்.

*'அறத்திற் பெரியது அழிபசி தீர்த்தல்;*
*மறத்திற் பெரியது மாண்பு'*

*(மாணிக்கக் குறள், 278)*

என்பது அவர் வலியுறுத்தும் ஓர் அடிப்படையான தனிமனித அறம்.

இங்ஙனம் ஒரு மனிதன் 'மாண்புமிகு மனிதன்' ஆவதற்கு வேண்டிய உயர்பண்புகளைப் பற்றியே வ.சுப.மா. 'மாணிக்கக் குற'ளில் சிறப்பாகவும், பிற படைப்புக்களில் பொதுவாகவும் சிந்தித்துள்ளார். தனிமனித முன்னேற்றம் என வரும்போது

அவர் பெரும்பாலும் இன்றைய மனிதன் கைவிட வேண்டிய - தவிர்க்க வேண்டிய - பழக்க வழக்கங்களைக் குறித்தே சிந்தித்துள்ளார்.

## வாய்நாறு தண்ணீர் பருக வேண்டா!

சாராயம், கள், மது ஆகிவற்றைக் குடிக்கும் கொடிய வழக்கத்தைக் கடுமையாகச் சாடி வ.சுப.மா. தம் 'மாணிக்கக் குற'ளில் பத்துக்கு மேற்பட்ட குறட்பாக்களை இயற்றியுள்ளார். அவர் ஒரு 'குடி மக'னிடமே தனிப்பட்ட முறையில் வீணாகக் குடித்து வாழ்க்கையை இழக்க வேண்டாம் என்று பணிவோடு கேட்டுக் கொள்கின்றார்.

*'பரிந்திரப்பன் சாராயப் பாலைப் பருகி*
*எரிந்திறக்க வேண்டாமே என்று'*

(மாணிக்கக் குறள், 238)

'பரிந்திரப்பன்' என்றும், 'எரிந்திறக்க வேண்டாமே' என்றும் இங்கே 'குடி மக'னிடம் மென்மையாகக் கேட்டுக் கொள்ளும் கவிஞர், வருவாயைப் பெருக்குவதற்காக மதுக் கடைகளைத் திறக்கத் திட்டமிடும் அரசியல் கட்சிக்கு வாக்களிக்கச் செல்லும் மனிதனிடம் வேறு வகையாக நடந்துகொள்கின்றார்; அவன் முன்னே ஒரு மறியலே நடத்தி,

*'நினைமறித்து வேண்டுவன் நின்வாக்கைக் கள்ளின்*
*நனவிலக்கும் கட்சிக்கு நல்கு'*

(மாணிக்கக் குறள், 447)

என வேண்டுகின்றார்.

'நந்தவனத்தில் ஓர் ஆண்டி - அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி, கொண்டு வந்தான் ஒரு தோண்டி - அதைக் கூத்தாடிக் கூத்தாடிப் போட்டு உடைத்தாண்டி' என்னும் சித்தர் வாக்கினை அடியொற்றி வ.சுப.மா.வும் ஒரு சிறந்த குறட்பாவை யாத்துள்ளார். மனித உடம்பு எவ்வளவு அருமையானது! 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்று பாடுவாரே திருமூலர்? இவ்வளவு சிறந்த உடம்பை ஒருவன் மதுவின் குடமாக்கலாமா? அப்படி ஆக்கினால், அது எவ்வளவு பெரிய அன்புக் கொலை? இக்கருத்தினை,

*'உடலே சிறந்த உடைமை மதுவின்*
*குடமாதல் அன்புக் கொலை'*

(மாணிக்கக் குறள், 453)

என்னும் குறட்பாவில் அறுதியிட்டு உரைக்கின்றார் வ.சுப.மா.

மேலும், தன் குடிப்பழக்கத்தால் ஒரு மனிதன் அடையும் சிறுமைகளையும் இழிநிலைகளையும் பலவாறு எடுத்துரைக்கின்றார் வ.சுப.மா. ஒரு மனிதன் போரில் புரண்டால் புகழுண்டு; 'போர்க்குறிக் காயமே புகழின் காயம்' என்று தானே மனோன்மணியம் சுந்தரனாரும் பாடினார்? இங்ஙனம் புகழ் வருவதற்குரிய வீரச் செயலைச் செய்வதை விட்டுவிட்டு, ஒருவன் சாராய நீரினை உண்டு மயங்கிக் கீழே விழுந்து புரண்டால் அவனுக்கு என்ன கிடைக்கும்? பழியும் இகழும் தானே கிடைக்கும்? ஆறறிவு படைத்த மனிதன் இதனை நினைத்துப் பார்க்க வேண்டாமா? இதுதான் வ.சுப.மா.வின் கேள்வி.

*'போரில் புரண்டால் புகழுண்டு; சாராய*
*நீரிற் புரண்டால் நிலை'*

(மாணிக்கக் குறள், 446)

ஒரு மனிதன் 'இது நெறி' என்று வலியுறுத்தும் குறளைக் கற்று மட்டும் என்ன பயன் விளையும்? அவன் தான் கற்ற நெறியில் நிற்க வேண்டாமா? கற்றதைக் கடைப்பிடிக்க மறந்து, மதுவுண்டு வெறி பிடித்து அலைகிறானே அவன்? (மாணிக்கக் குறள், 439) இத்தகைய அலைவு மனம் கொண்டவரையே - உறுதியான உள்ளம் இல்லாதவரையே - கள்ளுக்கடை உள்ளே வா என்று அழைத்து மயக்கும். கள்ளால் வரும் தீமையை நன்கு உணர்ந்தவரைக் கள்ளுக்கடை அறிவிப்பும் அழைப்பும் ஒன்றும் செய்யமாட்டா.

*'உணர்ந்தவரைக் கட்கடை உள்ளே வா என்று*
*புணர்ந்து வலிக்குமோ போர்த்து'*

(மாணிக்கக் குறள், 445)

என்பது கவிஞரின் பொருள் பொதிந்த வினா.

இங்ஙனம் குடிப்பழக்கத்திற்கு அடிமையான தனி மனிதனை மட்டுமன்றி, மலிவு விலை மதுவால் வருவாயைக்

பெருக்கத் திட்டமிடும் அரசையும் கடுமையாகச் சாடுகின்றார் வ.சுப.மா. (மாணிக்கக் குறள், 440). மதுவால் எவ்வளவு பொருள் வருவாய் வந்தாலும் அது சரியான வழியில் வந்தது ஆகாது என்பது அவரது அழுத்தம் திருத்தமான கருத்து. கன்றை முன்னிறுத்திப் பால் கறப்பதைப் போல் அரசு என்றும் மதுவூட்டி ஏழையின் மடி கறத்தல் எவ்வளவு கொடுமையானது என்கிறார் அவர் (மாணிக்கக் குறள், 239). 'மருளூட்டி வாங்கும் வரி', 'வாய் நாறு தண்ணீர்', 'வாந்தி நீர்', 'பேய் மது' (மாணிக்கக் குறள், 441, 442, 241, 443) என்றெல்லாம் மதுவின் மீது கடுமையாக வசை பாடும் கவிஞர், பாரதத் தாய் அதனைச் சரியென்று சொல்லி ஏற்க மாட்டாள் என நயம்படக் கூறுகிறார்.

*'வரியென்னாள் கள்வருவாய் வாய்நாறு தண்ணீர்*
*சரியென்னாள் பாரதத் தாய்'*

*(மாணிக்கக் குறள், 442)*

காந்தியடிகள் பிறந்த நாட்டில் கறக்கும் மதுவால் கருவூலம் ஈட்டல் சிறந்த செயல் ஆகாது என்பது ஆசிரியரின் முடிந்த முடிபு (மாணிக்கக் குறள், 240).

## புற்று வளர்க்கும் புகைப்பிடிப்பு

குடிப்பழக்கத்திற்கு அடுத்து, வ.சுப.மா. வன்மையாகச் சாடும் பிறிதொரு தீய பழக்கம் புகைபிடித்தல் ஆகும். 'புகை உயிருக்குப் பகை' என்று தெரிந்திருந்தும் - புகையால் புற்று நோய் வரும் என்பதை உணர்ந்திருந்தும் - மனிதன் இப் பழக்கத்திலிருந்து விடுபட முடியாமல், மீண்டும் மீண்டும் இதற்கு அடிமையாகிறான்.

*'மறந்தொழிக வெண்சுருள் வாய்நாற்றம் நோய்தான்*
*பறந்தொழிக நெஞ்சிற் பரிந்து'*

*(மாணிக்கக் குறள், 237)*

என இப்பழக்கத்தினைக் கைவிடுமாறு மனிதனுக்கு மென்மையாக அறிவுறுத்துகின்றார் கவிஞர். அதே நேரத்தில் புகைபிடிப்போர் புற்றுநோயால் தாக்கப்பட்டு, தம் உயிருக்குத் தாமே எமனாக அமைகிறார்கள் என்ற கசப்பான - கொடிய - உண்மையையும் அவர் எடுத்துக்காட்டத் தவறவில்லை.

*'புற்று வளர்க்கும் புகைப்பிடிப்பு விட்டக்கால்*
*வற்றுமே நெஞ்சு வலி'*

*(மாணிக்கக் குறள், 449)*

***'வலியென்று அறிந்தறிந்தும் வாயூதிக் கற்கும்***
***எலியர் தமக்கே எமன்.'***

***(மாணிக்கக் குறள், 450)***

## கரித்தூள் உறிஞ்சற்க

சிலர் குடிப்பழக்கத்திற்கு அடிமையாக இருப்பார்கள்; இன்னும் சிலரிடம் புகைபிடிக்கும் பழக்கம் ஆட்சி செலுத்தும்; ஒரு சிலர் மூக்குப்பொடி போடும் பழக்கத்தை வழக்கமாகக் கொண்டிருப்பார்கள். இவ்வழக்கத்தினையும் ஒரு குறட்பாவில் சாடி உரைக்கின்றார் வ.சுப.மா.

***'கண்டபடி ஊதிக் கரித்தூள் உறிஞ்சற்க***
***உண்டபடி மாறும் உடல்'***

*(மாணிக்கக் குறள், ப.452)*

## கடன் பழக்கம் காலிப் பழக்கம்

வரவுக்கு ஏற்ற செலவு என்றால் வாழ்க்கை மகிழ்ச்சியாக, மன நிறைவாக இருக்கும்; வரவுக்கு மீறிய செலவு என்றால் வாழ்க்கை சுமையாகிவிடும்.

***'வரையறுத்த ஊதியம் வந்தால் செலவைக்***
***கரையறுத்துச் செய்தல் கடன்'***

*(மாணிக்கக் குறள், 234)*

என் அறிவுறுத்தும் வ.சுப.மா., மனிதன் தன் வரவுக்கு மேல் செய்யும் செலவைச் சரிக்கட்டுவதற்காக மற்றவரிடம் கடன் வாங்க நேரிடும் போது அதைக் கண்டிக்கின்றார்.

***'கடன்பழக்கம் வேண்டாமே காலிப் பழக்கம்***
***விடும்வழக்கம் ஆகி விடின்'***

*(மாணிக்கக் குறள், 235)*

இன்றியமையாத தேவைக்காக நெருக்கடியான நேரத்தில் வாங்கும் போது பழக்கமாகத் தொடங்கும் கடன், காலப் போக்கில் வளர்ந்து வாடிக்கையாகும் போது வழக்கமாகி

விடும்; விட முடியாதபடி மனிதனைப் பற்றிக் கொண்டு விடும். எனவே, அந்தக் காலிப் பழக்கத்தைக் கைவிட்டுவிடுவதே நல்லது என வலியுறுத்துகின்றார் வ.சுப.மா.

## பொய்ம்மைக் கவர்ச்சி கழிக்க!

காலம் செல்லச் செல்ல - நாகரிகம் வளர வளர - அருமை, எளிமை, அழகு முதலான நற்பண்புகள் மனிதனிடமிருந்து மெல்ல மெல்ல விடைபெற்றுக் கொண்டுவிட்டன; ஆடம்பரம், கவர்ச்சி, ஆரவாரம் முதலான வெளிப்பகட்டுகள் - பொய்ம்மைப் பண்புகள் - அவனைச் சுற்றிச் சூழந்துவிட்டன. இத்தகைய வேண்டாத மாற்றங்கள் - தேவையற்ற பண்புகள் - இன்றைய 'நவநாகரிகப் பெண்'ணின் வாழ்விலும் காணப் படுகின்றன. இன்றைய நாகரிகப் பெண்ணின் கவர்ச்சிப் போக்கினை,

> *'இற்றைக் கவர்ச்சி எளிமையில் இல்லையே*
> *கற்றைக் குதிசெருப்பு காட்டு'*
>
> *(மாணிக்கக் குறள், 500)*

என்னும் குறளின் மூலம் சாடுகின்றார் வ.சுப.மா. இன்றைய பெண்ணின் கவர்ச்சி மோகத்தினை எடுத்துக்காட்ட வேறொன்றும் வேண்டா, அவளது குதிசெருப்பு ஒன்றே போதும் என்கிறார் அவர்.பிறிதோர் இடத்திலும் 'கழிக்கதில் பொய்ம்மைக் கவர்ச்சி' (மாணிக்கக் குறள், 265) என இவ்வழக்கத்தினைக் கைவிடுமாறு மனிதனுக்கு அறிவுறுத்து கின்றார் வ.சுப.மா.

## செய்யற்க மெய்யல் கரும்பணம்

வாழ்க்கை வளம் பெறப் பெரும்பொருள் ஈட்டவேண்டும் என்பதிலே வ.சுப.மா.வுக்குக் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால், அதற்காக ஒருவன் நேர்மையற்ற, குறுக்கு வழியில் சென்று பொருள் ஈட்ட முற்படக்கூடாது என்பதில் அவர் உறுதியாக இருக்கின்றார். தொல்காப்பியர் 'வழிபடு தெய்வம் நிற்புறங்காப்பப் பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து பொலிமின்!' என வாழ்த்தும் போது மிகவும் கவனமாகப்

'பழிதீர் செல்வமொடு' எனத் தக்கதோர் அடை கொடுத்துப் பாடியிருப்பது ஆழ்ந்து சிந்திக்க வேண்டியதாகும். தொல் காப்பிய நெறியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட வ.சுப.மா.வும்,

> ***'மெய்யென்று செய்யற்க மெய்யல் கரும்பணம்***
> ***தய்யென்று கைப்பூண் தரும்'***
>
> *(மாணிக்கக் குறள், 230)*

எனக் கருப்புப் பணத்தால் விளையும் தீமையைச் சுட்டிக்காட்டி எச்சரிக்கை செய்கின்றார்.

இங்ஙனம் தனிமனிதனை அலைக்கழித்துச் சிறுமைப் படுத்தி ஆட்டிப் படைத்து வரும் தீய பழக்கவழக்கங்களைச் சுட்டிக்காட்டி, அவற்றிலிருந்து விடுபடும் வழி வகைகளை வலியுறுத்திக் கூறிய வ.சுப.மா., ஒட்டுமொத்தமான நிலையில் இன்றைய சமுதாயத்தை அலைக்கழித்து, ஆட்டிப் படைத்து வரும் அவலங்கள் குறித்தும் ஆழமாகச் சிந்தித்துள்ளார். இனி, அத்தகைய சில சிந்தனைகளைக் காண்போம்.

## சாதி மடமும் வறட்டு மரபுகளும்

சாதிக் கொடுமை, மத வேறுபாடு, போலிச் சடங்கு, வறட்டு மரபு ஆகியவற்றை வ.சுப.மா. தம் 'மாணிக்கக் குற'ளில் ஒல்லும் வகையெல்லாம் கடுமையாகச் சாடியுள்ளார்.

> ***'பார்க்காதே சாதிமதம் பார்வைக் குறிதப்பித்***
> ***தூர்க்காதே அன்புத் துளை'***
>
> *(மாணிக்கக் குறள், 20)*

எனச் சாதி, மதக் கொடுமைகளுக்கு எதிராகக் குரல் கொடுக்கும் வ.சுப.மா.,

> ***'ஒழிந்தது சாதி, உறுமத மாற்றம்***
> ***அழிந்தது கேட்பின் அழகு'***
>
> *(மாணிக்கக் குறள், 328)*

எனப் பாடி, 'சாதி ஒழிந்தது', 'மதமாற்றம் அழிந்தது' எனக் கேட்கும் நாள் வாராதா என ஏங்குகின்றார்; அந்த நாள் எவ்வளவு மகிழ்ச்சியான நாளாக இருக்கும் என எண்ணிப் பார்க்கின்றார். 'அகம், புறம் என்ற அரிய திணைப் பாகுபாட்டை உலகிற்கு

அளித்த தமிழன் இன்று சாதி மடத்தால் உலக அரங்கில் தன் மதிப்பை இழந்துவிட்டானே' என்பது அவரது ஆழ்ந்த கவலை. இக்கவலையின் எதிரொலியே,

*'இடத்தால் திணைகண்ட எந்தமிழர் சாதி*
*மடத்தால் இழந்தார் மதிப்பு'*

*(மாணிக்கக் குறள், 345)*

என்னும் குறட்பா ஆகும்.

எந்த மரபாயினும் அது வாழ்வுக்கு ஒத்துவர வேண்டும்; வாழ்வுக்கு உதவாத வறட்டு மரபுகளால் யாதொரு பயனும் இல்லை. அவை பாழும் கிணற்றின் படிகளுக்கு ஒப்பானவை என்பது வ.சுப.மா.வின் கருத்து.

*'வாழ்வுக்கு உகவா வறட்டு மரபுகள்*
*பாழ்வுக் கிணற்றில் படி'*

*(மாணிக்கக் குறள், 336)*

**'மாணாத தேர்தல்'**

இன்றைய தேர்தல் முறையிலும் வ.சுப.மா.வுக்கு உடன் பாடு இல்லை. பணமும் சாதியமும் கட்சி அரசியலும் வன் முறையும் பெரும்பங்கு வகிக்கும் - கொடி கட்டிப் பறக்கும் - இன்றைய தேர்தல் முறையை 'மாணாத தேர்தல்' எனச் சுட்டிக்காட்டுகின்றார் அவர்.

*'பணவாய் விரியுமேல் பாரதத் தேர்தல்*
*பிணவாய் மணக்கும் பிளந்து'*

*(மாணிக்கக் குறள், 213)*

என் ஒரு குறட்பாவில் இன்றைய தேர்தலில் நியாயமற்ற - நேர்மையற்ற - பணப்பெருக்கத்தால் விளையும் தீமையை எடுத்துக்காட்டுகின்றார் வ.சுப.மா.

மக்கள் பிளவின்றிப் பெரும்பங்கு கொள்ளும் வகையில் தேர்தல் முறை அமைய வேண்டும்; அவர்கள் தங்களுக்கு உகந்த நல்ல வேட்பாளர்களைக் களவின்றித் தேர்ந்தெடுக்கும் நிலை உருவாக வேண்டும் (மாணிக்கக் குறள், 214). இது ஒன்றும் அரியதன்று; முடியாததும் அன்று. இந்தியாவில் உள்ள கட்சிகள் அனைத்தும் ஒரு பொதுவான கொள்கையை - ஒட்டு மொத்த

மான நாட்டு நலத்தை - முன்வைத்து இயங்கினால் - 'இந்தியம்' பேணுவதே அவற்றின் குறிக்கோளாக இருக்குமானால் தேர் தலில் தில்லுமுல்லுகள் இல்லாமல் போகும் (மாணிக்கக் குறள், 215); உருப்படியான - உண்மையான - தேர்தல் ஒழுங்காக நடக்கும்.

இத்தகைய சீரிய அறிவுரைகளைச் சிந்தையில் தேக்கிச் செயற்படுத்த முன்வந்தால் தனிமனிதன் மாமனிதன் ஆவான்; சமுதாயம் ஒளி படைத்த சமுதாயமாய் உயரும் என்பது உறுதி.

## 4. கல்விச் சிந்தனைகள்

வ.சுப.மா. கல்வித் துறையில் நீண்ட நெடுங்காலம் பணியாற்றிய அனுபவம் உள்ளவர்; கல்லூரிப் பேராசிரியர், முதல்வர், பல்கலைக்கழகப் பேராசிரியர், துணைவேந்தர் எனப் பல்வேறு பொறுப்புக்களில் வீற்றிருந்து கல்வியுலகிற்குப் பெருந்தொண்டாற்றியவர். இந்த நீண்ட அனுபவமும் நேரடி யான பயிற்சியுமே கல்வி பற்றிய சிந்தனைகள் அவரது எழுத்துக் களில் மிகுந்து காணப்படுவதற்கான காரணங்கள் ஆகும். இனி, இக்கருத்தின் அடிப்படையில் வ.சுப.மா.வின் கல்விச் சிந்தனை களைக் குறித்துக் காண்போம்.

### இந்நாட் கல்வியின் தரமும் பாட நூல்களின் திறமும்

இந்நாட் கல்வியின் தரம் எப்படி உள்ளது? இன்று பாடத் திட்டத்தில் இடம்பெறும் நூல்களின் திறம் எவ்வாறு உள்ளது? 'வள்ளுவர் கல்வித் திட்டம்' என்னும் அரிய கட்டுரையில் வ.சுப.மா. இவ்விரு வினாக்களுக்கான விடைகளை விரிவாகத் தருகின்றார்:

"இன்று பாட நூல்களெனக் கற்பிப்பவை தேர்வு முடிந்த, தேர்வின் முடிவு தெரிந்த மாலையே தூக்கு ஏறுவதைக் காண் கின்றோம். 'நெற்கொண்டு போமளவும் நில்லாய்' என்ற படி, பாடப் பொருளைத் தேர்வில் எழுதும்வரை நினைவில் தாங்கி வைத்துக் கொள்ளவே மாணவன் பாடுபடுகிறான். இது பாடநூலின் குற்றமன்று; படிப்பான் குற்றமன்று; படிப்பை

வகுப்பாள் குற்றம். இந்நாட் கல்வி, கல்வியென நம்மால் பெயர் பெறினும், வள்ளுவர் கண்ட கேடில் விழுச்செல்வம் ஆகாது... கற்க வேண்டியதை மட்டும் கல்லாததாலும், குப்பை போல் தொடர்பற்ற பொருட் குவியல்களைக் கசடுறையக் கற்பதாலும் இற்றைக் கல்வி கெடுசிறு செல்வமாய் மாறித் தேய்கின்றது.

கல்வித் திட்டர்கள் 'கற்க கசடறக் கற்பவை' என்ற குறளை நெற்றிப் பட்டமாகத் தாங்கி எவ்வகுப்புக்கும் திட்டம் வகுப்பரேல், கல்வித் தரம் தரமில்லை என்ற சொல்லுக்கும், மாணாக்கர்க்குக் கல்வியில் நாட்டம் இல்லை என்ற சொல்லுக்கும் இடமிராது'' (திருக்குறட் சுடர், பக். 88-89)

இங்ஙனம் திருக்குறட் கட்டளைக் கல்லில் இன்றைய கல்வித்திட்டத்தை உரைத்துப் பார்த்தால் மிகக் குறைந்த மாற்று பல இடங்களில் தோன்றுவதாகவும், சில இடங்களில் பித்தளையும் மின்னுவதாகவும் கருதுகின்றார் வ.சுப.மா. இக்குறைபாடுகளுக்கெல்லாம் தலையாய காரணமாக விளங்குவது பாடத்திட்டத்தை வகுக்கும் நிலையில் உள்ள கல்வியாளர்களே என்பது அவரது அழுத்தம் திருத்தமான கருத்து.

## முழுமைப் பார்வை

பாட அமைப்பைப் பொறுத்தவரையில் இன்று ஒரு புலவரின் படைப்பு முழுவதையும் உளங்கொண்டு பார்க்கும் ஒருமைப் பார்வை - முழுப்பார்வை - இல்லை; ஒட்டுப் பார்வையும், நூலுக்குள் ஒரு சில செய்யுளைக் காணும் உதிரிப் பார்வையும், அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பார்க்கும் துண்டுப் பார்வையுமே உள்ளன. சான்றாக, கம்ப ராமாயணத்தி லிருந்து பாடம் வைக்கும்போது, ஒரு படலத்தையேனும் முழுமையாக வைக்க வேண்டும்; இங்ஙனம் வைக்காமல் இராமாயணத்திலிருந்து அங்கொன்றும் இங்கொன்றுமாக 50 செய்யுள் 100 செய்யுள் என வைப்பதால் எவ்வித நற்பயனும் விளையாது. அப்படி 50 செய்யுள் 100 செய்யுள் என வைக்கும் போது அந்த ஐம்பதும் நூறும் தொடர்ந்த பாடல்களாக இருக்க வேண்டும். அப்போதுதான் காப்பியவுணர்வு மாணாக்கர்

களுக்குத் தோன்றும். நல்ல பாடல்கள் என்று இடை வெளிவிட்டுத் தொகுத்தால் கம்பரின் மனவோட்டம் விட்டுக் காட்டும். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்றபடி, தனிப்பாடலைக் கண்டார் தனிப்பாடலையே கண்டார், படலங் கண்டார் படலத்தையே கண்டார் என்ற குறுநிலைக்குக் காப்பியம் குறைந்து வருகின்றது. எனவே, காப்பியக் கல்வி கேடில் விழுச்செல்வமாக வேண்டும் எனின், வ.சுப.மா. கூறும் ஒரே வழி இதுதான்: 'ஒட்டுத் துணிபோலும் பொறுக்குப் பாடம் சாலாது. முழுத் துணி போலும் பாட முழுமை வேண்டும்' (கம்பர், ப.118).

வ.சுப.மா.வின் கருத்தில் கம்ப ராமாயணத்தை எப்படிக் கற்க வேண்டும் தெரியுமா? 'இராமாயணத்தை முழுமையாக, ஒவ்வொரு பாடலையும் முழுமையின் பாகமாக, ஒவ்வொரு சொல்லையும் பாகத்துட் பாகமாக உறவு முறையோடு காண வேண்டும்' (கம்பர், ப.25). இக்கருத்தினைத் தக்கதோர் எடுத்துக் காட்டின் வாயிலாக நிறுவுகின்றார் அவர்:

*'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த*
*திருமேனி மேலும் கீழும்*
*எள்ளிருக்கும் இடனின்றி உயிரிருக்கும்*
*இடம்நாடி இழைத்த வாறோ*
*கள்ளிருக்கும் மலர்க்கூந்தற் சானகியை*
*மனச் சிறையிற் கரந்த காதல்*
*உள்ளிருக்கும் எனக்கருதி யுடல் புகுந்து*
*தடவியதோ ஒருவன் வாளி.'*

காப்பியம் என்பது தனிப்பாட்டன்று, முழுப்பார்வைக்கு உரியது என்று என் முதற்சொற்பொழிவிலிருந்து வலியுறுத்தி வரு கின்றேனே, அதற்கு நிகரற்ற எடுத்துக்காட்டு இச்செய்யுள். 'இலங்கைநாதன் இதயமாஞ் சிறையில் வைத்தான்' என்று ஆரணிய காண்டத்து மாரீசன் வதைப் படலத்துச் சீதையை இராவணன் தன் அகச்சிறையில் அடக்கியதாகக் கூறிய கம்பர் 6800 பாடல்கள் தாண்டி உயுத்த காண்ட இராவணன் வதைப் படலத்தில் 'மனச் சிறையிற் கரந்த காதல் உள்ளிருக்கும் எனக் கருதி உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி' என்று அவள் விடுதலை பெற்றதை எடுத்துக் காட்டுகின்றார் என்றால்,

இவ்வேழாயிரம் பாடல்களில் சீதையை மெல்ல மெல்ல விடுதலை செய்யும் ஒரு வேலையைப் புலவர் விடாது செய்திருக்கின்றார் என்பது பெறப்படவில்லை? எடுத்தது கண்டனர் இற்றது கேட்டனர் என்பது போல 'வைத்தான் சீதையை மறுகணம் விடுத்தான்' என்று பாடி முடித்துவிட முடியுமா?... 'கல்வியிற் பெரியவர் கம்பர்' என்பார்கள். சீதை இராவணன்தன் மனச் சிறையிலிருந்து முற்றும் விடுதலை பெறுவதற்காக ஏழாயிரம் பாடல்களில் பேராயத்தம் செய்திருப்பதை எண்ணும்போது 'காப்பியத்திற் பெரியவர் கம்பர்' என்று சொல்லுவோமாக'' (கம்பர், பக். 105-106).

இங்ஙனம் கம்பர் பெருமகனின் அளவிலாச் சிந்தனைத் திறம், நினைவுத்திறம், அயராத்திறம், நிறைதிறம் ஆகியவற்றையெல்லாம் உணர்ந்துகொள்வதற்கு வாயிலாக அமைவது முழுமைப் பார்வையே ஆகும். இப்பார்வையுடனேயே கல்வியுலகில் பாடத்திட்டங்கள் அமைக்கப்பெறல் வேண்டும் என விழைகின்றார் வ.சுப. மாணிக்கம்.

## கல்வி வள்ளுவம் நான்கு

நம் கல்வித் திட்டத்தில் படிந்துள்ள பிறிதொரு மாசு தேர்வுப் பித்து ஆகும். கல்வியுலகை இஞ்ஞான்று ஆளுவது அறிவுத் தெய்வம் அன்று; தேர்வுப் பூதம் காணீர். நடைமுறை நோக்குழி, மாணாக்கரைத் தேர்வுரியோர் என்றும், ஆசிரியரைத் தேர்வு செய்வோர் என்றும், கல்வி வகுப்பாரைத் தேர்வு வகுப்பார் என்றும், கல்விக் களங்களைத் தேர்வுக் களங்கள் என்றும், கலைமகளைத் தேர்வு மகள் என்றும் அழைப்பதுவே இன்றைக்குப் பொருந்தும். தேர்வு மூச்சுத்தான் கல்வி முழுதும் ஓடுகின்றது' (வள்ளுவம், ப.196) என இம்மாசினைக் குறித்துக் கருத்துரைக்கிறார் வ.சுப.மா. சரி, மாசு படிந்த இத்தேர்வு முறையை அடியோடு ஒழிப்பதால் மட்டும் கல்வியின் தரம் உயர்ந்து விடுமா? உயராது; இடையூறு நீங்கும்; அவ்வளவே. பிறகு, கல்வியுலகில் வ.சுப.மா. விழையும் செந்நெறிதான் யாது? இதோ, 'அறிவுக் கல்வி' என்னும் தலைப்பில் அவரே எடுத்துரைக்கின்றார்:

''கற்பவை கற்க; கசடறக் கற்க; கற்றனைத்து ஊறும் அறிவு என்ற கல்வி வள்ளுவ மூன்றும் நம்மனோர் உடனே தழுவற்கு உரியன; நம் கல்வித் துறையாளர் கைக் கொள்ளத் தகுவன. கல்விக்கு அழிவும் இழிவும் தருவன எவையாயினும் அவை ஒதுக்கற்பாலன. 'கேடில் விழுச்செல்வம் கல்வி' என்ற அடிமுதல் வள்ளுவம் கல்வித் திட்டத்துக்கெல்லாம் ஓர் உரைகல். திட்டம் வெளியிடுமுன் அக்கல்லில் உரை செய்க. 'தாய்மொழி வாயிலும் பல்துறையறிவும்' என்பது கல்வி வகுப்பார் வாய்பாடு ஆகுகதில். இத்துணிவு இருப்பின் நிலையெனச் சிறந்த கல்வி இன்றுபோல் அடிக்கடி நிலையாமைப் படாது''.

*(வள்ளுவம், பக். 202-203)*

'கற்பவை கற்க', 'கசடறக் கற்க', 'கற்றனைத்து ஊறும் அறிவு', 'கேடில் விழுச்செல்வம் கல்வி' - இவையே வ.சுப.மா. விதந்து கூறும் கல்வி வள்ளுவம் நான்கு ஆகும்.

## 'மறமும் ஆண்மையும் சான்ற கல்வி'

இன்றைய கல்வித் திட்டத்தில் உள்ள குறைபாடுகளைப் பற்றியே விரித்தும் விளக்கியும் பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை. இன்றைய இந்தியாவுக்கு - இளைய தலைமுறைக்கு - உடனடியாகத் தேவைப்படும் கல்வித் திட்டம் யாது? இதுவே இப்போது நம் முன்னே நிற்கும் ஓர் அடிப்படையான - பொருள் பொதிந்த - கேள்வி. இதற்கான பதிலை 'நிகழ்காலப் பார்வை' என்ற கட்டுரையில் விரிவாகக் கூறுகின்றார் வ.சுப.மா. இதோ அவரது பதில்:

'நம் இந்தியப் பெருநாட்டிற்கு இன்று ஒருதலையாக வேண்டிய ஒருணர்வு மறவுணர்வு. எல்லா இளைஞர்க்கும் பேராண்மைப் பயிற்சி வேண்டும். இமய முதல் குமரி வரை மறவுணர்ச்சி பரவுமாறு கல்வித் திட்டம் வழி செய்யுமாக. ஆண்மைத் திறமும் மறநாட்டமும் பரவினால், இன்று மிகுந்து காணப்படும் பயங்கரக் கூட்டம் ஒழியும். நம் இளைஞர்களின் ஆற்றல் மறநெறிப் படுத்தப்பட்டால், கரைக்குள் அலைக்குள்

அடங்கிய வெள்ளம் போல, நாட்டுக்குப் பயனும் ஆக்கமும் தரும். இளையோரின் ஆண்மைக்கு நல்ல போக்கிடம் காட்டாமையாற்றான், அன்னோர் உணர்ச்சி திரிந்து அறிவு இரிந்து பயங்கர அங்கணத்துள் விழுகின்றனர். வெறும் ஏட்டுக் கல்வி புரையோடி விட்டது. மறமும் ஆண்மையும் சான்ற கல்வியே இன்றைய இந்தியாவின் வலியைப் பெருக்கும்' (திருக்குறட் சுடர், பக். 153-154).

கல்விக் கொள்கையைப் பொறுத்த அளவில், வ.சுப.மா. வலியுறுத்துவது வெறும் ஏட்டுக் கல்வியையன்று; வ ்ளுவ நெறியில் அமைந்த அறிவுக் கல்வியையே - ஆண்மைக் கல்வியையே - அவர் பெரிதும் போற்றுகின்றார். இன்றைய கல்வித்துறையில் காணப்படும் குறைபாடுகளை எல்லாம் வள்ளுவ அடிப்படையிலேயே அவர் களைய முற்படுகின்றார். 'நோய் நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும், வாய் நாடி வாய்ப்பச் செயல்' (திருக்குறள், 948) என்ற படி, இன்றைய கல்வித் துறையில் காணப்படும் 'நோய்களு' க்கெல்லாம் - சிக்கல்களுக்கெல்லாம் - 'முத'லாக இருப்பதும் அவற்றைத் தீர்க்கும் ஆற்றலைப் பெற்றிருப்பதும் முழுக்க முழுக்கப் பாடத்திட்ட அமைப்பாளர்களே என அவர் உறுதியாகக் கருதுகின்றார்.

## 5. இலக்கியச் சிந்தனைகள்

தொல்காப்பியர் தொடங்கிப் பாரதியார் வரை காலங் காலமாக - வாழையடி வாழையென -வந்த தமிழ்த் திருக் கூட்டத்தில் இருபதாம் நூற்றாண்டில் புகழொடு தோன்றிச் சேர்ந்தவர் வ.சுப.மா. தொல்காப்பியர் செய்யுள் உறுப்புக்களுள் ஒன்றாகக் பயன் என்பதைச் சுட்டுவர்; 'என்றன் பாட்டுத் திறத்தாலே - இவ்வையத்தைப் பாலித்திட வேணும்' (பாரதியார் கவிதைகள், ப.72) எனப் பாடுவர் பாரதியார். இங்ஙனம் நீண்ட, நெடிய தமிழ் மரபில் ஏதேனும் ஒரு நல்ல குறிக்கோளை - நோக்கத்தை - தன்னகத்தே கொண்டு, நற்பயன் விளை.்பதையே இலக்கியமாகக் கருதினர் முன்னோர். இவ்வரிசையில் வரும்

வ.சுப.மா.வும் இலக்கியம் பற்றிய சில தெளிவான - திட்டமான - அடிப்படையான - சிந்தனைகளைக் கொண்டுள்ளார். அச் சிந்தனைகளைக் குறித்து இங்கே காண்போம்.

## குறிக்கோள் இலக்கியத்தின் நாடி

'ஒரு குறிக்கோள் வைத்து இலக்கியம் யாப்பவனே எழுத்தாளன். அக்குறிக்கோளுக்கு மக்களை இழுப்பதற்காகவே நடைக் கவர்ச்சியைக் கையாள்கின்றான். இலக்கிய நயம் மருந்தின் மேலினிப்புப் போன்றது. மக்கள் வாழ்க்கை இலக்கியத்தின் பொருள்; குறிக்கோள் இலக்கியத்தின் நாடி; நயம் இலக்கியத்தின் அணி; எத்துணை மக்களைத் தன் குறிக் கோளால் ஈர்க்கின்றதோ, எவ்வளவு நாள் வரை ஈர்க்கின்றதோ அதுவே ஓர் இலக்கியத்தின் வாழ்நாள்' (காப்பியப் பார்வை, ப.130) என 'மணிமேகலைத் திறன்' என்னும் கட்டுரையில் இலக்கியத்தின் குறிக்கோள் பற்றி எடுத்துரைக்கின்றார் வ.சுப. மாணிக்கம். அவரது கருத்தில் காலங்கடந்த குறிக்கோளும், இனம் நிலம் கடந்த மக்கள் நோக்கும் சான்ற இலக்கியங்களே பொன் போல் நிலைத்து வாழ்வனவாகும். 'என்றும் நின்று பயன் செய்யும் கொள்கை இலக்கியங்கள் ஒரு மொழிக்குக் கிடைப்பது அரிது. நம் மொழிக்கோ அன்ன இலக்கியங்கள் பல கிடைத்துள்ளன' (காப்பியப் பார்வை, ப.131) என்று பெரு மிதத்தோடு கூறுகின்றார் வ.சுப.மா. 'பரத்தையொழிப்போடு மதுவொழிப்பு. சிறையொழிப்பு. சாதியொழிப்பு என்றினைய மன்பதைச் சீர்திருத்தங்களின் களஞ்சியம் இக்காப்பியம்' (காப்பியப் பார்வை, ப.146) என அவர் மணிமேகலைக் காப்பியத்தின் திறனை அழகுற எடுத்துக்காட்டியிருப்பது இங்கே மனங்கொளத்தக்கதாகும்.

## 'தற்சிந்தனையைக் கிளறுதல்'

'எழுத்தாற்றல் என்பது யாது? அதன் பயன் என்ன?' என்னும் அடிப்படையான வினாவிற்குப் 'படைப்பிலக்கியப் பாங்கு' என்றும் கட்டுரையில் அருமையான விடையினை அளித்துள்ளார் வ.சுப.மா. 'வாசகர்கட்கு மனமெலிவைத்

தாராதது, மெலிந்த மனத்தை நிமிர்த்துவது, புதுத்தெம்பினை மின்னலைப் போல் பாய்ச்சுவது, தற்சிந்தனையைக் கிளறுவது, இதுவே எழுத்தின் அறுவடையாகும்' (இலக்கியச் சாறு, ப.16) என்பது அவரது ஆழ்ந்த கருத்து. தக்கதோர் எடுத்துக்காட்டால் இக்கருத்தினை விளக்கலாம்.

*'தித்திக்குந் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான*
*முத்திக் கனியேயென் முத்தமிழே-புத்திக்குள்*
*உண்ணப் படுந்தேனே உன்னோ டுவந்துரைக்கும்*
*விண்ணப்ப முண்டு விளம்பக்கேள்'*

என்பது 'தமிழ் விடு தூ'தில் இடம்பெறும் ஓர் அரிய பாடல். இப்பாடல், பயில்பவர் மனத்துள் எழுப்பும் உணர்ச்சியை - சிந்தனையை - கிளர்ச்சியை - தெம்பினை - வ.சுப.மா. 'இலக்கிய வெள்ளம்' என்ற கட்டுரையில் அழகுற எடுத்துக்காட்டியுள்ளார்:

"...(இத்) தமிழ்விடுதூது இன்றும் நாளையும் வரும் தமிழினத்தார்க்கு விடுக்குந் தூதல்லவா? என்ன சொல் வளம்! என்ன சொல் மாயம்! சங்க கால மக்கட்குத் தமிழ்மொழி இயல் பானது. ஆதலின் அதன் அருமையை அறியும் வாய்ப்பில்லை. இடைக்கால மக்கட்குத் தமிழ் அருந்தமிழ், தீந்தமிழ், ஒண்டமிழ், வண்டமிழ். ஏன்? நிழற்பெருமை வெயிலில் நின்றறிமின் என்றாங்கு ·பிறமொழித் தாக்கம் தமிழருமையை உணர்த்திற்று. 'இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்' எனவும் 'தமிழ் தழீஇய சாயலவர்' எனவும் 'என்றுமுள தென்றமிழ் இயம்பி' எனவும் யாண்டும் தமிழுணர்ச்சியை ஊட்டிக் கொண்டே இருந்தனர். அவ்வூட்டத்தாலன்றோ எவ்வளவு அரசு, நாகரிகம், மொழி, சாதிப் பூசல்களுக் கிடையேயும் தமிழ் நமக்குக் கிடைத்து, நாமெல்லாம் இன்றும் தமிழர்களாக இருக்கின்றோம்" (இலக்கியச் சாறு, ப.48).

### உணர்ச்சியை ஒழுங்குபடுத்தல்

அறிவை வளப்படுத்துவது அறிவியல் என்றால், உணர்ச்சியை ஒழுங்கு படுத்துவது இலக்கியம் எனலாம். 'உணர்ச்சியை ஒழுங்குபடுத்தும் உரிமை ஒரே ஒரு துறைக்குத் தான் உண்டு. அதுதான் இலக்கியத் துறையாம். எந்த இலக்கியத்

தைப் பாடம் நடத்தினாலும் சொற்பொழிந்தாலும் உணர்ச்சிச் செம்மை என்ற பயன்நோக்கத்தை மறப்பது நன்றன்று' என்பர் வ.சுப.மாணிக்கம் (காப்பியப் பார்வை, ப.4). 'இலக்கியம் கற்பதன் பயன் பல்வேறு உணர்ச்சிகளை நடுநிலைமைப் படுத்திக் கொள்ளுதல்' என்பது அவரது கருத்து. இக்கருத்திற்கு எடுத்துக்காட்டாக 'முச்சமயக் காப்பியங்கள்' என்ற அவரது கட்டுரையில் வரும் ஓர் இடத்தைச் சுட்டலாம்.

''திருநீலகண்ட நாயனார் பரத்தைமையில் ஈடுபட்டார். அதனால் அவருக்கும் அவர் மனைவிக்கும் பெரும் பிணக்கு ஏற்பட்டது. மனைவியாரோ உணர்த்த வாரா ஊடல் கொண்டு விட்டார். பரத்தைபாற் சென்று வந்த நாயனாரைப் பார்த்துத் 'தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்' என்று இறைவன் பெயரைச் சொல்லித் தடுத்தார். அரசியல் வாழ்க்கையைக் காட்டிலும் குடும்ப வாழ்வில் நெருங்கியவர் தம்முள் சிக்கல்கள் வளர்ந்துகொண்டே இருக்கும். குடும்பச் சிக்கல்களில் தீர்வு காண்பதற்கு நிகரற்ற பொறுமையும் மானவொதுக்கமும் வேண்டும். பிறரிடம் சொல்லித் தீர்வு காண்பதும் நாகரிகமன்று; தீர்வு காணாது தீப்போல் தன்னுள் உட்கொதித்து வைத்துக் கொள்வதும் நலமன்று. நாயனாரும் அவர் மனைவியாரும்,

***'இற்புறம் பொழியா தங்கண் இருவரும் வேறு வைகி***
***அற்புறு புணர்ச்சி யின்மை அயலறியாமை வாழ்ந்தார்'***

என்று சேக்கிழார் நனி நாகரிகமாகப் பாடுவார். தங்களுக்குள் பிணக்கு இருப்பதைப் பக்கத்தவரும் அறியாதபடி நடந்து கொண்டனர் என்று அவர்களின் உணர்ச்சி ஒழுங்கைப் புலப் படுத்துவார்'' (காப்பியப் பார்வை, ப.11).

நல்வாழ்வு தருவது உணர்ச்சியொழுங்கு எனில், இவ்வொழுங்கினை நமக்குப் பக்குவமாகத் தருவது இலக்கியம் என்பது இதனால் தெள்ளிதின் புலனாகும்.

## எண்ணத்தை விரிவுபடுத்துதல்

'பல்வேறு கருத்துக்கள் தரும் இலக்கியக் கலை, எண்ணத்தை விரிவுபடுத்தும் இன்பக் கலை' என்பது

வ.சுப.மா.வின் கருத்து. அவரது நோக்கில் 'எப்படி நம்மை எண்ணவைத்து நம்மிடம் எண்ணங்களைப் பெருக்குகின்றான் புலவன் என்பதுவே இலக்கியக் கலை'யாகும் (காப்பியப் பார்வை, ப.40). ஓர் எடுத்துக்காட்டு:

*'கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு*
*நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்*
*தன்துயர் காணாத் தகைசால் பூங்கொடி;*
*இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்*
*கற்புக்கடம் பூண்டவித் தெய்வ மல்லது*
*பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்'*

(சிலப். அடைக்.)

இளைய மெல்லிய கண்ணகி மதுரைக்கு நடந்தபோது சுடு வெப்பம் தன்னைத் தாக்குதலை அறியாள்; தன் கணவன் இவ் வெப்பத்தை எங்ஙனம் பொறுப்பனோ என்று வருந்தினாள் என்பர் இளங்கோ. யாருக்கு யார் வருந்துகிறார்கள் என்று பாருங்கள். ஏன்? கண்ணகியின் குறிக்கோள் கற்பு என்பது. பெண்ணுக்குக் கற்பு என்பது இல்லறத்து வரும் துன்பத்தை யெல்லாம் பொறுத்தலும், கணவனுக்கு வரும் துன்பத்தைப் பொறாமையும் ஆம். இக்குறிக்கோளால் முதுவேனில் வெம் மையும் கொப்புளம் பட்ட குதிகாலும் கண்ணகி நங்கையைத் தாக்கவில்லை. துன்பம், குறிக்கோளின் வழிப்படும் போது இன்பமாக மாறுகின்றது'' (காப்பியப் பார்வை, பக். 40-41).

'நரகம் புகினும் எள்ளேன் நின் திருவருளாலே இருக்கப் பெறின் இறைவா!' என்று மணிவாசகர் இறைவன் அருளொடு கூடிய நரகத்தை இன்பமாக மதிப்பதும் இங்கே நினைவு கூரத்தக்கதாகும்.

இங்ஙனம் அமைதியான, ஆற்றலான, ஒருமையான எண்ணங்களின் பேழையாக இலக்கியம் விளங்குவதையும், ஒழுங்கும் உரமும் பண்பும் வாய்ந்த எண்ண விரிவுக்கு இலக்கியக் கலை வழிவகுப்பதையும் வ.சுப.மா. நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

## படிப்பினை தருதல்

'இலக்கியக் கல்வி ஏன்?' என்ற வினாவுக்கு வ.சுப.மா.

தரும் விடை நுட்பமானது. அவரைப் பொறுத்தவரையில், 'இலக்கியம் என்பது மனித வாழ்க்கையை ஆராய்ந்து கூறும் அறிவியல் ஆகும்' (சங்க நெறி, ப.19). இலக்கியப் புலவன் என்பவன் வெற்றெழுத்தாளன் இல்லை; வாழ்வியலைப் புலப்படுத்துபவன். அவன் இயற்றிய இலக்கியத்தைக் கற்கும் போது, வாழ்க்கையில் இன்ன சமயத்து விழிப்பாக இருக்க வேண்டும், இன்ன பண்புடையவனோடு இப்படிப் பழக வேண்டும், இன்ன துன்பத்து இப்படிக் கடக்க வேண்டும் என்ற படிப்பினைகளைப் புரிந்து கொள்கின்றோம். காட்டாக,

> ***'அன்னாய் வாழிவேண்டு அன்னைநம் படப்பைத்***
> ***தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு***
> ***உவலைக் கூவற் கீழ***
> ***மானுண் டெஞ்சிய கலுழி நீரே'***

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் (103) உணர்த்தும் வாழ்க்கைப் படிப்பினை யாது? இதோ, வ.சுப.மா.வின் மொழியிலேயே அதனைக் காண்போம்.

> ''ஒருத்திக்குக் காதலன் உள்ளவிடத்துக் கலங்கிய நீரும் நல்லதாகும்; அவனில்லாத இடத்துத் தேனும் பாலும் இன்னாதவையாகும். காதலிக்குப் பொருள் வளம் முக்கியமன்று; காதலனை நீங்காத புணர்ச்சியே முக்கியம். 'ஒன்றன் கூறாடை உடுப்பவரேயாயினும் ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை' என்பது கலித்தொகை. ஓருயிரும் ஈருடலுமான காதலர்களுக்கு வறுமை பெரிதன்று; ஓராடையை உடுத்திக் கொண்டே வாழலாம் என்பது இதன் கருத்து. இதனால் கற்பின் திண்மையையும் வசதியை ஈகம் செய்துகொள்ளும் காதற் சிந்தனையையும் அறிகின்றோம்''
> *(சங்க நெறி, ப.21).*

இங்ஙனம் வாழ்வாங்கு வாழ்வதற்கு உரிய வளமான சிந்தனைகளை வழங்குவதே இலக்கியத்தின் நல்லியல்பும் தனிப்பண்பும் ஆகும் என்கிறார் வ.சுப.மா.

## 6. வாழ்க்கைச் சிந்தனைகள்

மனித வாழ்க்கை 'நேற்று வந்து இன்று இருந்து நாளை

போவது' அன்று; 'உண்டு உடுத்து உறங்கி இடர்செய்து சாவதற்கு' உரியதும் அன்று. 'தேடிச் சோறு நிதந் தின்று - பல சின்னஞ் சிறு கதைகள் பேசி - மனம் வாடித் துன்ப மிக வுழன்று - பிறர் வாடப் பல செயல்கள் செய்து - நரை கூடிக் கிழப்பருவ மெய்தி - கொடுங்கூற்றுக் கிரையெனப் பின் மாயும் வாழ்வு'க்குப் பாரதியார் தரும் பெயர் 'வேடிக்கை வாழ்வு' (பாரதியார் கவிதைகள், 70). இத்தகைய சாதாரண நிலையி லிருந்து விலகி வாழ்வில் உயர வேண்டுமானால் ஒரு மனிதன் என்ன செய்ய வேண்டும்? 'மண்ணில் நல்ல வண்ணம் வாழ' வேண்டுமானால் அவன் பின்பற்ற வேண்டிய நெறிமுறை யாது? இவ்விரு வினாக்களுக்கும் 'திருவாசக நினைப்பு' என்னும் கட்டுரையின் தொடக்கத்தில் வ.சுப.மா. தக்க விடையளிக் கின்றார்:

> 'யாருடைய நல்வாழ்வுக்கும் ஒரு பெரியவர் தொடர்போ ஒரு பெரிய நூலின் தொடர்போ இன்றியமையாதது. இரு தொடர்பும் ஒருங்கே ஒருவர்க்குக் கிடைக்குமாயின் வாழ்க்கைக் கடல் இருகரை யுடையதாகும். இத்தொடர்புக்கும் வாழ்க்கை யுயர்வுக்கும் உறவுண்டு.'
>
> *(இலக்கியச் சாறு, ப. 78).*

இக்கருத்தினை வ.சுப.மா.வின் வாழ்க்கைக்கே நாம் பொருத்திப் பார்க்கலாம். அவருடைய வாழ்க்கை உயர்வுக்கு அடிப் படையான காரணங்கள் இரண்டு:

1. ஒரு பெரியவர் தொடர்பு - இவ்வகையில் வ.சுப.மா.வுக்கு வாய்த்தது பண்டிதமணி மு. கதிரேசனாரின் தொடர்பு. இத்தொடர்பின் அருமை பெருமைகளைக் குறித்து வ.சுப.மா.வே தம் நூல்களில் பல இடங்களில் மனம் நெகிழ்ந்து எழுதியுள்ளார். அவர் தம் இல்லத்திற்கு வைத்திருந்த பெயர் 'கதிரகம்' என்பதும் இங்கே மனங்கொளத்தக்கதாகும்.

2. ஒரு பெரிய நூலின் தொடர்பு - இவ்வகையில் திருக்குறளுடன் வ.சுப.மா. கொண்டிருந்த ஆழ்ந்த, நெருங்கிய, உள்ளார்ந்த தொடர்பினைச் சுட்டலாம். 'ஒரு பிறப்பிற்கு ஒரு பெருந்தமிழ் நூலையாவது கல்லாதவன் தமிழனா? நாமமது

தமிழரெனக் கொண்டிங்கு வாழ்ந்திடுதல் நன்றோ, சொல்வீர்!' என்பது அவர் தொடுக்கும் கேள்விக் கணை (சங்க நெறி, ப.10). 'வாழ்க்கைத் துணை' என்ற தொடர் 'ஒருவன் தன் வாணாள் முழுதும் ஒரு பெருந்தமிழ்ப் பனுவலைத் துணையாகக் கற்க' என்ற கருத்தைக் குறிப்பதாகவும் அவர் எண்ணிப் பார்க்கின்றார் (சங்க நெறி, ப.11). வ.சுப.மா.வின் எழுத்திலும் பேச்சிலும் வாழ்விலும் திருக்குறள் பேரிடம் பெற்றிருந்தது. அவர் 'வள்ளுவம்' என்ற தலைப்பிலேயே ஒரு நூல் எழுதினார். அவரைப் பொறுத்தவரையில் வள்ளுவம் ஒரு 'செயல் நூல்'; வாழ்வியல் நூல். 'ஞாலம் புகழும் திருக்குறளுக்கு நம் வாழ்க்கையை இலக்கியமாக்க வேண்டும். நம் நாள் வாழ்வு ஒழுக்கக் குறள் வாழ்வதால் வேண்டும்' (வள்ளுவம், ப.16) என்பது அவரது அழுத்தமான கருத்து. 'ஓர் ஆசான்தன் உண்மை நெஞ்சம் காணவும், முழுத் தெளிவு கைவரவும் வேண்டின், அவன் எழுதிய நூல் முற்றும் ஒரு முறை இரு முறையல்ல, பன்முறையால் பல நோக்கால் ஆரவமரக் கற்றல் வேண்டும்' (வள்ளுவம், ப.310) என 'வாழ்க்கைத் துணை'யாக நாம் கொள்ளும் பெருநூலினைக் கற்கும் நெறி குறித்தும் அவர் எடுத்துரைக்கின்றார்.

## வாழ்வாங்கு

வ.சுப.மா. தம் வாழ்க்கைச் சிந்தனைகளை எல்லாம் 'வாழ்வாங்கு' என்னும் ஒரு தொடரிலேயே சுருக்கிப் பிழிந்து தந்துள்ளார்; 'வாழ்வாங்கு' என்ற தலைப்பிலேயே திருக்குறளை மையமாக வைத்து அவர் ஒரு நல்ல கட்டுரையினை எழுதி யுள்ளார். அக்கட்டுரையின் தொடக்கப் பத்தியிலிருந்து ஒரு பகுதி இதோ:

" 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்' என்று ஒரு திருக்குறள் தொடங்குகிறது. ஏனைக் குறள் எல்லாம் இக் குறளின் விளக்கம் என்று சொல்லலாம். இக்குறளில் 'வாழ் வாங்கு' என்று ஒரு புதிய சொற்சேர்க்கை செய்வர் வள்ளுவர். வாழ்வாங்கு வாழ்பவன் என்பதற்கு வாழும் முறைப்படி வாழ்பவன் என்பது பொருள். வாழ்வுக்கு ஒரு முறையுண்டு.

உயிரோடிருப்பினும், அம்முறை தழுவி ஒழுகும்போது தான் வாழ்வு எனப்படும்... எப்படியேனுங் காலங்கழிக்க எண்ணுவது வாழ்வு ஆகாது. ஒருவன் சாகாதிருப்பதனால் அவன் வாழ்கின்றான் என்று சொல்லி விடலாமா? சாதலும் சிலருக்கு வாழ்வு தரும்'' (திருக்குறட் சுடர், ப.18).

வ.சுப.மா. வின் மொழியிலேயே சொல்ல வேண்டும் என்றால், வாழும் முறைப்படி வாழ்வதற்குப் பெயர்தான் 'வாழ்வு!'; மற்றவையெல்லாம் வெறும் 'வீழ்வு!' பல்லாண்டுக் காலம் நடைப்பிணமாகவே இருந்து, 'வந்தான், வாழ்ந்தான், போனான்' என்பதன்று வாழ்வு! சில ஆண்டுகளே ஆனாலும் 'சொன்னான், செய்தான்' என்று புகழத் தக்க வகையில் வாழ்ந்து பெயரை நிலைநாட்டுவதுதான் வாழ்வு.

இங்ஙனம் 'பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வந்த பாரதி'யைப் போல், 'சிந்தனைத் திறத்தாலே இச்சமுதாயத்தைச் சீர்திருத்த வந்த செம்ம'லாக வ.சுப.மா. விளங்குகின்றார். நாடு, மொழி, இனம், சமுதாயம், கல்வி, இலக்கியம், வாழ்வு முதலான பல்வேறு பொருள்களைப் பற்றிய தம் தனிப்பட்ட, தெள்ளத் தெளிந்த சிந்தனைகளால் தமிழ் இலக்கிய வானில் அவர் ஒரு சிந்தனைச் சிற்பியாக என்றும் உலா வருவார்.

# 6 . பிற படைப்புப் பணிகள்

*'மாணிக்கச் செல்வ மணித்தமிழ் அன்னைக்குக்*
*காணிக்கை யாய்வாய்ந்த கண்ணாள-பேணிக்கை*
*வைத்த துறையெல்லாம் வாய்ந்த துறையாக்கி*
*வைத்தநீ எங்களின் வைப்பு'*

இரா. இளங்குமரன். ★

**வ.**சுப.மா.வை இதுவரை ஓர் உரைநடை ஆசிரியராக - ஆய்வாளராக - கவிஞராக - சிந்தனையாளராக - கண்டு மகிழ்ந்தோம். உரைநடை, ஆய்வு, கவிதை, சிந்தனை என்னும் இந்நான்கைத் தவிர, அவர் 'பேணிக் கைவைத்த துறைகள்' வேறு சிலவும் உள்ளன. நாடகம், கடித இலக்கியம், உரைநூல் என அவரது கைவண்ணம் காட்டும் துறைகள் இன்னும் பல்கிப் படர்ந்து விரிந்துள்ளன. இவ்வியலில் அத்துறைகளுக்கு வ.சுப.மா. ஆற்றியுள்ள தொண்டுகளைக் குறித்துச் சுருங்கக் காண்போம்.

## I. நாடக ஆசிரியர் வ.சுப.மா.

'நடிப்பதற்கு மட்டுமே உரிய நாடகம், படிப்பதற்கு மட்டுமே உரிய நாடகம், நடிப்புதற்கும் படிப்பதற்கும் ஒருங்கே உரிய நாடகம் என நாடகத்தை மூவகையாகக் கூறலாம். முன்னது, மேடையனுபவம் மட்டும் கொண்டு இலக்கியப் பயிற்சி இல்லாமல் எழுதப்படுவது; அடுத்தது, மேடை யனுபவம் இல்லாமல் இலக்கியப் பயிற்சி மட்டும் கொண்டு எழுதப்படுவது; மூன்றாவது, இரு வகையிலும் தேர்ச்சி பெற்ற கலைஞரால் எழுதப்படுவது' (மு.வரதராசன், இலக்கிய மரபு, ப.80). இம்மூவகை நாடகங்களுள், வ.சுப.மா. படைத் திருப்பவை 'படிப்பதற்கு மட்டுமே உரிய நாடகங்கள்' என்னும் பிரிவில் அடங்குவனவாகும்.

---

★ வ.சுப. மாணிக்களாரின் வாழ்வும் பணியும், ப.63.

ஆழ்ந்த இலக்கியப் பயிற்சியின் அடிப்படையில் வ.சுப.மா. உருவாக்கித் தந்துள்ள நாடக நூல்கள் நான்கு. அவையாவன:

1. 'மனைவியின் உரிமை' (1947) - இலக்கிய நாடகம்
2. 'நெல்லிக் கனி' (1962) - சமூக நாடகம்
3. 'உப்பங்கழி' (1972) - குடும்ப நாடகம்
4. 'ஒரு நொடியில்' (1972) - கருத்து விளக்க நாடகம்

இனி, இந்நாடகங்களின் நோக்கும் போக்கும் குறித்து நிரலே காண்போம்.

## 1. 'மனைவியின் உரிமை'

வ.சுப.மா.வின் முதல் நாடகப் படைப்பு 'மனைவியின் உரிமை'. இதில் 'இனிய சாவு', 'உழவப் புலவன்', 'புகழ்த் துறவு', 'மனைவியின் உரிமை', 'பிள்ளைத் தூது' என்னும் ஐந்து இலக்கிய நாடகங்கள் இடம்பெற்றுள்ளன. 'நாடகங்கள் ஐந்தனுள் முதலான மூன்றும் புறப்பொருளைச் சார்ந்தன; நான்காவது அகமும் புறமும் தழுவியது; இறுதியது அகப் பொருள் பற்றியது. சென்ற காலத் தமிழ் மொழியின் தூய்மை, வருங்காலத் தமிழ் மொழியின் செம்மை, நிகழ்காலத் தமிழ் மக்களின் மொழியறிவு என்ற மூன்றினையும் ஆசிரியன் கருத்திற் கொண்டு எழுதியதொரு இலக்கிய நடையாகும் இந் நாடகங்களின் நடை என்பதும், அப்படியே நடிக்கத் தகும் அரங்கு நடையன்று என்பதும் அறிவார்க்குப் புலனாகும்' என இந்நாடக நூலுக்கு எழுதிய முகவுரையில் குறித்துள்ளார் வ.சுப.மா.

இந்நாடக நூலுள் முதலாவதாக இடம்பெறும் நாடகம் 'இனிய சாவு'. சேரமான் கணைக்கால் இரும்பொறையின் 'குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடலை (74) அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ள இலக்கிய நாடகம் இது. இந்நாடகத்தின் இறுதியில் மானவுணர்வு மிக குருதிக் கொதிப்பு மேலிட்டு, மார்படைத்து மாயும் சேரமான் கணைக்கால் இரும்பொறையின்

கூற்றாக வரும் பகுதியை வ.சுப.மா.வின் எடுப்பான இலக்கிய நடைக்குச் சான்றாகச் சுட்டலாம்:

*'படை மடியப் போரிற்றோற்ற பின்னும் போகா என்னுயிர்,*

*நாய்போற்றளை பூண்ட பின்னும் போகா என்னுயிர்,*
*இருட்சிறையில் தலைகுனிய நுழைந்த பின்னும் போகா என்னுயிர்,*

*நாவறள நீர் இரந்த பின்னும் போகா என்னுயிர்,*

*அந்நீர் வரத் தாழ்ந்த பின்னும் போகா என்னுயிர்,*

*வந்த நீரைக் கைக்கண் ஏந்திய பின்னும் போகா என் தமிழ்ச் சிற்றுயிர்,*

*அதனைக் குடிக்கு முன்பாவது போ...*

*(மனைவியின் உரிமை, ப.22)*

இத்தொகுப்பில் நான்காவதாக இடம்பெறும் நாடகம் 'மனைவியின் உரிமை'. வள்ளல் பேகனின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு வ.சுப.மா. படைத்துள்ள இலக்கிய நாடகம் இது. நான்கு காட்சிகளில் - ஐம்பது பக்கங்களில் - அமைந்த இந்நாடகம், 'ஒருவனுக்கு ஒருத்தி; ஒருத்திக்கு ஒருவன் என்று வரைவு செய்து விலங்குத் தன்மையின்றி மக்கட் சுட்டாக வாழும் இல்லறந்தான் அறிவும் அன்பும் இயைந்த இன்ப வாழ்வு' (மனைவியின் உரிமை, ப.112) என நம் தமிழ் முன்னோர் வாழ்ந்து கண்ட வாழ்வியல் நெறியினை - உண்மையினை - நெஞ்சைத் தொடும் வகையில் உணர்த்துகின்றது. 'மனைவியாகிய ஒவ்வொரு பெண்ணுக்கும் தன் கணவன் இன்ப வகையிற் பிழை படாமைக் காத்துக் கொள்ளும் உரிமை உண்டு. பிழைபடும் போது கடிந்துரைத்துக் கொள்ளும் உரிமையும் உண்டு. தமிழ்ப் பெண்கள் தம் ஒழுக்கத்தைக் காத்தல் போலத் தங்கணவர் ஒழுக்கத்தையும் காக்கக் கடன் பூண்டவர் ' (மனைவியின் உரிமை, ப.113) என்பதே வ.சுப.மா. இந்நாடகத்தின் வாயிலாக வலியுறுத்திக் கூறும் வாழ்வியல் செய்தியாகும். மேலும், தமிழகத்தில் குலமகளிர், விலைமகளிர் என்ற இரு பிரிவு ஒழிய வேண்டும் என்றும், ஒழுக்க நெறியால் தமிழ் மகளிர் என்ற ஒரு குலமே

நிலவ வேண்டும் என்றும், கால வயத்தால் பரத்தையராய் இருந்து, அறிவு வந்து மாறிய தமிழ் மகளிர் அவர்தம் பழைய வழுவிற்காக - போக்கிற்காக - இகழப்படக்கூடாது என்றும் இந்நாடகத்தின் முடிவில் இடம்பெறும் வள்ளல் பேகனின் பிறந்த நாட் பேருரையின் வாயிலாகத் தம் கருத்தினை எடுத்துமொழிகின்றார் வ.சுப.மா.

## 2. 'நெல்லிக் கனி'

'நெல்லிக் கனி', கன்னியரங்கம், அன்னையரங்கம், மனையரங்கம் என்னும் மூன்று பகுதிகளை உடையது; 23 காட்சிகளைத் தன்னகத்தே கொண்டது. 'பிறவிக்கு உரிய உணர்ச்சிகளை, மழையை மண் ஏற்பது போல, ஏற்று நல்வழிப்படுத்திக் கொள்ள வேண்டும். அதுதான் வாழ்வு நெறி; அதுவே உடம்பையும் உள்ளத்தையும் சமுதாயத்தையும் உலகையும் வாழ்விக்கும் நெறி. இந்த உண்மையை நாட்ட எழுந்தது இந்நாடகம்' என்பது வ.சுப.மா.வின் முகவுரைக் குறிப்பு. 'உள்ளங்கை நெல்லிக்கனி என்பது உலக வழக்கு. நீயோ உள்ளத்து நெல்லிக்கனியாகிவிட்டாய். நெல்லிக்கனியைத் தின்று நீர் குடித்தது போல் என் வாழ்க்கையைச் சுவையாக்கி விட்டாய். ஓவியன் என்பது உன் தாய் வைத்த பெயர். நெல்லிக்கனி என்பது இனி தாயாகும் நான் வைத்த பெயர்' (ப.173) எனச் சிறுவன் ஓவியனிடம் வடிவழகி கூறுவதாக வரும் பகுதி, நாடகத் தலைப்பின் பொருத்தத்தைப் புலப்படுத்து வதாகும்.

### மணிமேகலையை நினைவூட்டும் வடிவழகி

இந்நாடகத்தின் தலைவியாக வரும் வடிவழகி, மணி மேகலையை நினைவூட்டும் வண்ணம் படைக்கப்பட்டிருக் கின்றாள். ஒரு நாள் நடுத்தெருவில் ஒரு நிறைமாதக் கருப்பிணிக்கு உண்டான அவல நிகழ்ச்சி, அவளது வாழ்க்கைப் போக்கையே அடியோடு மாற்றிவிடுகின்றது; தொண்டு உணர்ச்சி அவள் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிடுகின்றது; திருமணம் செய்து கொள்ளாமல் கடைசிவரை கன்னிப்

பெண்ணாகவே வாழ்வது என்ற உறுதியான முடிவினை எடுக்கின்றாள்; அவ்வாறே குடும்பம் வேண்டாக் குமரியாக அவள் வாழ்ந்தும் வருகின்றாள். இந்நிலையில் நாடகத்தின் முடிவில் 'நீ அம்மா இல்லை, சும்மா' என்னும் சிறுவன் ஓவியனின் ஒரு சொல் வடிவழகியின் கண்களைத் திறக்கின்றது; அவள் உள்ளம் இப்போது தாயுள்ளம் ஆகின்றது. 'தாயாக வேண்டுமெனின், மனைவியாக வேண்டும்; மனைவியாக வேண்டுமெனின், மணமாக வேண்டும்; மணமாக வேண்டுமெனின், காதலாக வேண்டும்; காதலாக வேண்டு மெனின், தன் போலத் தன்னைக் காதலிக்கும் அன்பன் வேண்டும்' (ப.173) என்னும் முடிவுக்கு வந்து, தன் கண்ணுள் புகுந்து - கருத்தில் கலந்து - நெஞ்சு நிறைந்த - பண்ணனைக் கணவராக அடைகின்றாள்; இங்ஙனம் வடிவழகியின் வாழ்க்கையைப் போல் நாடகமும் நல்ல வண்ணம் நிறைவு அடைகின்றது.

## திருமணச் சிந்தனைகள்

'திருமணம் என்பது இரண்டு உயிர்களின் இனிப்பு ஒப்பந்தம்' (வைரமுத்து, இன்னொரு தேசிய கீதம், ப.24). ஆயின், இத் திருமணம் இன்றைய நிலையில் ஓர் ஆடம்பரமாக - வணிகமாக - ஆகிவிட்டது. இதில் வ.சுப.மா. வுக்குச் சிறிதும் உடன்பாடு இல்லை. 'திருமணத்துக்குப் பின்னும் நல்ல உறவும் நல்ல மகிழ்ச்சியும் நல்ல உடல் நலமும் இருக்கின்ற முறையில், அடக்கமாகவும் அன்பாகவும் மணத்தை நடத்த வேண்டும்' (ப.24) என அவர் கருதுகின்றார். திருமணத்தில் அளவுக்கு மீறி இறைத்துவிட்டு, திருமணத்துக்குப் பின் வாழ்க்கையில் தொல்லைப்படுவதை அவர் கொஞ்சமும் விரும்பவில்லை. 'திருமணமே வாழ்க்கையில் பெரிய நிகழ்ச்சி' (ப.6) என ஒப்புக்கொள்ளும் வ.சுப.மா. திருமண அழைப்பிதழுக்காகவும் விருந்துக்காகவும் ஆடம்பரமாகச் செலவழிப்பதை ஒப்புக் கொள்ளவில்லை; 'மிக எளிய குடும்பத்தார் கூட, அழைப் பிதழுக்கு அதிகம் செலவழிக்கிறார்கள். தெரிந்த முகம், தெரிந்த முகத்திற்குத் தெரிந்த முகம், தெரிய வேண்டிய முகம் என்று

கண்டவர் கேட்டவர்க்கெல்லாம் அழைப்பு நீட்டுகிறார்கள். காதலர்களே திருமணத்திற்கு முன் செய்தித் தாளில் சேர்ந்து தோன்றுகிறார்கள். ஒலிபெருக்கி மூலம் வாருங்கள் வாருங்கள் என்று ஊர்ச் செவிக்கு அறைகின்றார்கள்' (ப.6) என்றும், 'செலவைச் சுருக்கி வாழ்வைப் பெருக்க வேண்டும். உறவினர் களையும் நண்பர் என்று சொல்லத்தக்க சில அன்பர் களையும் அழைத்தாற் போதும். விருந்தும் விருந்தாக இருக்க வேண்டும். மருந்து உண்ணும் அளவுக்கு விருந்து படைக்கக் கூடாது' (ப.24) என்றும் அங்கதச் சுவையோடு எழுதிச் செல்கின்றார்.

சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட வேண்டிய திருமணம், இன்று ரொக்கத்திலும் பவுனிலும் நிச்சயிக்கப்படும் போக்கினையும் வ.சுப.மா. வன்மையாகச் சாடுகின்றார். 'நம் நாட்டில் மாப்பிள்ளைப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது, ஏற் பட்டிருப்பது போலச் சமுதாயம் நடிக்கிறது, மண வணிகம் நடத்துகிறது. கலைமகளானாலும் மருமகள் ஆக வேண்டு மானால், திருமகள் வேண்டும்' (ப.41) என்றும், 'பெண் பிறப்பை ஞாலம் காக்கும் தாய்ப் பிறப்பு எனப் போற்றாமல், பொருள் கொடுத்துத் தள்ள வேண்டிய பேய்ப் பிறப்பு என விலை மதிக்கும் இந்த நாட்டிலா பெண் கிடைக்காது?... பழுத்த குருடனும் கொழுத்த பணத்தால் திருமகளின் கொழுநனாக ஆகலாமே, இந்த நாட்டில்?' (ப.42) என்றும் வரும் பகுதிகள் இவ்வகையில் சிறப்பாக நினைவுகூரத்தக்கவை.

இன்றைய திருமணச் சந்தையில் கருநிற மங்கையர் நாளும் அனுபவிக்கும் கொடுமை சொல்லில் அடங்காது. 'மக்களி னத்தில் கருப்பு, சிவப்பு, வெளுப்பு, மஞ்சள் என்ற நிற வேற்றுமை கூடாது, எல்லாரும் ஒத்த ஓரினம் என்று பேசுகின் றோம், ஆனால் நடைமுறையில் காண்பதென்ன? வெயில் மிகுதியால் இந்தியத் தோல் கறுப்பாகின்றது. இது நாட்டின் இயற்கை. எனினும் நம் நாட்டு ஆடவர்கள் கருநிற மங்கையர் களை மணஞ்செய்யப் பின்வாங்குவதேன்? இது நாட்டை அவமதிப்பதாகாதா? செந்தோற் பெண்களையே தேடித் திரிதல் பொருந்துமா?' (ப.91) என இன்றைய இளைஞர்களின் நிற மோகத்தை நயமாகச் சாடுகின்றார் வ.சுப.மா.

திருமணத்தில் பெண்களுக்குத் தமிழ்ச் சீர் வைத்து - அவர்கள் படித்த, படிக்க வேண்டிய நல்ல தமிழ் நூல்களையும் சேர்த்துவைத்து - வழிகாட்ட வேண்டும் என்பது வ.சுப.மா.வின் தனிப்பட்ட கருத்து, 'திருமணத்தில் பெண்களுக்கு எவ்வளவோ சீர் வரிசை வைக்கிறார்களே; ஏன் நூறு புத்தகங்கள் கொண்ட நூல் வரிசையும் வைக்கக் கூடாது? நல்வாழ்வுக்குப் பெரியவர்களின் எண்ணங்கள் தேவையில்லையா?' (ப.31) என்பது 'தமிழின் மேல் உள்ள ஆசை பற்றி' அவர் தொடுக்கும் வினா.

இங்ஙனம் இன்றைய திருமணம் பற்றிய முற்போக்கான, முத்தாய்ப்பான சிந்தனைகள் பலவற்றை 'நெல்லிக் கனி'யில் காண்கிறோம்.

## நெஞ்சை அள்ளும் பொன்மொழிகள்

ஒருமுறை படித்த உடனேயே படிப்பவர் நெஞ்சில் நல்லதொரு பொன்மொழியைப் போல் ஒட்டிக் கொள்ளும் அழகிய தமிழ் வாக்கியங்கள் பல 'நெல்லிக் கனி'யில் ஆங்காங்கே சுடர் வீசி நிற்கின்றன. உள்ளங்கவர் உதாரணங்கள் ஒரு சில இதோ:

1. 'இனி நமக்குக் காதல் போதும். நாட்டுக்காதல் காதலே வேண்டும்' (ப.14).

2. 'காதல் வார்த்தையிலும் பார்வையிலும் இல்லை; காதல் என்பது இரண்டு உள்ளங்களில் ஒரே காலத்தில் தோன்றும் புத்துணர்ச்சி' (ப.84).

3. 'பெண்பால் ஆண்பாலை மணந்து பலர்பாலைத் தருவதே தமிழ் இயற்கை' (பக்.115-116).

4. 'தாய்ப்பால் உடலுக்கு நல்லது. மொழிப்பால் அறிவுக்கு நல்லது' (ப.154).

### 3. 'உப்பங்கழி'

வ.சுப.மா.வின் மூன்றாவது நாடகப் படைப்பு 'உப்பங்கழி'. 'இக்குடும்ப நாடகம் குடிச் சிக்கல்கள் கொண்டன. அவற்றை யார் யார் எந்நிலையிலே தாங்கிக் கொள்கின்றனர்.

எம்முறையில் மெல்ல ஏற்று நல்ல வழி காண்கின்றனர், ஒரு சிலரால் தாங்க முடியாமை ஏன்? என்ற வாழ்வியல்களைக் காட்டுகின்றது. காதலுக்கு நிறம் இல்லை, முதலில் தோன்றும் நல்லெண்ணத்துக்கு மதிப்பளிக்க வேண்டும். இயற்கையொடு பழகுவது உணர்ச்சியை ஒழுங்குபடுத்தும் என்ற நல் லோட்டங்கள் வளியிடை வீசும் வானொலி போல இந் நாடகத்தில் கலந்து வருகின்றன. சமுதாயப் பொதுச் சீர்திருத்த மின்றிச் சில குடும்பச் சூழல்களைத் தனித்தனி ஒவ்வொருவரும் மாற்றிக் கொள்ள இயலாது என்ற புரட்சிக் குறியும் இந் நாடகத்தில் அடங்கியுள்ளது' என்னும் அவரது முகவுரைக் குறிப்பு, நாடகத்தின் நோக்கத்தைத் தெளிவுபடுத்துவதாகும். காதல், திருமணம், குடும்பம், சமுதாயச் சீர்திருத்தம் ஆகியன பற்றிய தம் கருத்துக்களை இந்நாடகத்தில் வரும் பல்வேறு மாந்தர்கள் வாயிலாகப் பாங்கறிந்து வெளிப்படுத்தியுள்ளார் வ.சுப.மா.

### சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனைகள்

இன்றைய இளைஞர்கள் காதலின் நிறம் சிவப்பு என்று கருதுகின்றனர்; தனக்கு மனைவியாக வரப்போகும் பெண் சிவப்பாக - ஆரஞ்சு நிறமாக, மாதுளம் நிறமாக, செம்பூ நிறமாக, பவள நிறமாக, இரத்த நிறமாக - இருக்க வேண்டும் என விரும்புகின்றனர். வ.சுப.மா.வைப் பொறுத்தவரையில் இன்றைய இளைஞர்களின் இம்மனப்பான்மை ஒரு பெருங் குறையாகும்; 'காதல் நிறம் சிவப்பு' என்ற இம் மூடக்கொள்கை சமுதாயத்திலிருந்து கட்டாயம் ஒழிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். 'திருமணச் சந்தையில் நிறத்தை வைத்துச் சீர்தனம் இறங்குகிறது; ஏறுகிறது. செந்நிற இளைஞன் கருவண்ண மங்கையை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. கருப்பு வடியும் இளைஞர் எல்லாம் செவ்வண்ணப் பெண்களையே விரும்பு கிறார்கள். பெண்களுக்கு இந்த விதமான விருப்பத்துக்கு இடமில்லை. திருமணமானாற் போதும் என்று, திருமகள் போன்ற பெண் திருமால் போன்ற இளைஞனுக்குத் துணைவியா கின்றாள். ஏனென்றால் திருமணச் சந்தையில் பெண்கள் பருவ கால மாம்பழம் போல் மிகுதியாகக் கொட்டிக் கிடக்கின்றார்

களாம். வரத்து மிகுதி, செலுத்து குறைவு இப்படித்தான் இருக்கும் என்று பொருளாதாரக் கொள்கை பகர்கின்றனர்' என இம் மூடக்கொள்கையைச் சாடி எழுதுகின்றார் வ.சுப.மா.

பெண்ணினத்தின் வளர்ச்சி இன்று வியக்கத்தக்க முறையில் உள்ளது; எதிர்காலத்து ஆணினத்தை நெறிப்படுத்தும் அளவிற்குப் பெண்ணினம் இன்று வளர்ந்துள்ளது. 'இன்றைய உலகத்தின் ஒரு நற்போக்கு பெண்ணுலகத்தின் கல்வி வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, ஆட்சிப் பொறுப்பு, நாணத்தோடு கூடிய துணிவு, பல துறை வெளிப்பாடு' (ப.64) என இவ்வளர்ச்சிப் போக்கினைச் சுட்டிக்காட்டுகின்றார் வ.சுப.மா. அதே நேரத்தில் இன்றைய சமுதாயம் பெண்களைப் பார்க்கும் பார்வையில் எந்தவித மாற்றமும் இதுவரை நிகழவில்லை; பெண்களை ஒரு சுமையாக - பாரமாகக் கருதும் போக்கே இன்னமும் சமுதாயத்தில் நீடித்துக் கொண்டிருக்கிறது. 'இந்நாட்டில் பெண் பெற்ற அன்றே **கவலைப் பெண்ணும்** உடன்பிறக்கின்றாள். பெண் வளர வளரக் கவலை கடலாகிறது' (ப.57) என இப் போக்கினை நயமாக எடுத்துக்காட்டுகின்றார் வ.சுப.மா.

படிப்பறிவு எவ்வளவு பெருகினாலும் - அறிவியல் எவ்வளவு உயர்ந்தாலும் - நம் சமுதாயத்தில் இன்னமும் திருமணத்தில் எளிமையில்லை; ஆடம்பரமும் ஆரவாரமும் பகட்டும் விளம்பரமுமே உள்ளன. வ.சுப.மா.வின் கருத்தில் இன்றைய சமுதாயத்தில் நிகழ வேண்டிய சீர்திருத்தங்களில் எல்லாம் தலையாயது திருமணமுறைச் சீர்திருத்தம் ஆகும். இச்சீர்திருத்தம் நடைமுறைக்கு வரவேண்டும் என்றால், **விவேகானந்தர்** கூறியது போல் ஊருக்கு நூறு இளைஞர்கள் முன்வர வேண்டும்; 'திருமணக் கழகம்' என்ற பெயரால் ஓர் இயக்கம் நடத்த வேண்டும்; காதல் முறைகளைப் பரப்பித் திருமணத்தை எளிமையாக்க வேண்டும். இச்சீர்திருத்தத்தில் பெற்றோர்க்கும் பெரும்பங்கு உண்டு என நம்புகின்றார் வ.சுப.மா. 'பெண் வைத்திருப்போர் இந்தக் காலத்துப் பழைய தகுதிகளையெல்லாம் பாராது சாதியென்று, சாதிக்குள் சாதி யென்று, சமயம் என்று, குடியென்று, குலம் என்று, அக்கம் பக்கம் என்று, தூரம் தொலையென்று, பணம்கிணம் என்று,

வீடுகீடு என்று, கடைகிடையென்று இவற்றையெல்லாம் மிகவும் அழுத்திப் பாராமல், பையன் பண்பவனா, உழைப் பவனா, பொறுப்பு உணர்பவனா, பெண்டாட்டியைத் திண்டாடாமல் கடைசி வரை வைத்துக் கொண்டாடுபவனா என்று பார்த்துக் கொடுத்தால் எவ்வளவோ திருமணங்கள் நடக்கும்' (பக். 150-151) என்பது அவரது அழுத்தமான கருத்து.

## படைப்புத் திறன்

'முகவை மாவட்டத்தார் மழையை வரவேற்பது போலவும், விண்வெளி வீரரை அவர்தம் குடும்பத்தார் வரவேற்பது போல வும், முதற்பேரனைப் பாட்டி வரவேற்பது போலவும் ஆரா மகிழ்வோடு உங்களை வரவேற்கின்றேன்' (ப.53) எனத் 'திருமணக் கழக'த் தலைவர் முத்தரையர் அதன் உறுப்பினர் களை வரவேற்றுப் பேசும் பேச்சில் முத்தான மூன்று உவமை கள் இடம்பெற்றுள்ளன. வ.சுப.மா.வின் உவமை வண்ணத்தை இப்பகுதி வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றது.

'எங்கட்குத் திருமணமாகிப் பல ஆண்டுகள் குழந்தை இல்லை. பூட்டி வைக்கும் அருஞ்செல்வங்கள் இருந்தன. ஓடி விளையாடும் ஒரு பெருஞ்செல்வம் இல்லை' (ப.187) - வ.சுப.மா.வின் நடையில் இலக்கியச் சுவை கொஞ்சி விளையாடும் ஓர் அழகிய இடம் இது.

'தலைவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்றால் தான் ஒரு கட்சியில் சேர வேணும். மக்களுக்குத் தொண்டு செய்வதற்குக் கட்சி எதுவும் தேவையில்லை' (ப.10)- வ.சுப.மா.வின் நடைமுறைப் பார்வை பளிச்சிடும் பகுதி இது!

## 4. 'ஒரு நொடியில்'

வ.சுப.மா.வின் நாடக நூல்களுள் பாடுபொருளால் தனித் தன்மை வாய்ந்தது 'ஒரு நொடியில்'. தற்கொலை எண்ணத்திற்கு எதிராக - இளைய தலைமுறையினரின் நெஞ்சில் நம்பிக்கை ஒளியைப் பாய்ச்சும் வகையில் - வ.சுப.மா. படைத்துள்ள 10 நாடகங்களின் தொகுப்பு 'ஒரு நொடியில்', 'உயிரின் சிந்தனை'

என்னும் தலைப்பில் இந்நாடக நூலுக்கு எழுதிய முகவுரையில் 'உயிர் என்பது தானே வந்த தனக்குவமையில்லாத வித்துச் செல்வம். கொள்கை, வறுமை, மானம் மற்றவற்றுக்காக உயிரைக் கிள்ளுக்கீரை போல நீக்கலாம், போக்கலாம் என்று பாடி, எழுதிப் பறைசாற்றிப் பரப்பி வரும் பழம்போக்கைத் தடைப்படுத்த வேண்டும் என்ற எதிர்ப்பு நோக்கத்தாலும், உயிரிடத்துத் தற்பற்று ஊட்டி வாழ்வில் நம்பிக்கை கொள்ளச் செய்ய வேண்டும் என்ற கண்ணோட்டத்தாலும் இப்பத்து நாடகங்களையும் படைத்துள்ளேன். இவை ஒரு பொருள்மேல் எழுந்த தனிமொழி நாடகங்கள்' எனத் தம் படைப்பு நோக்கத்தினைத் தெளிவுற மொழிந்துள்ளார், வ.சுப.மா. 'தற்கொலையெண்ணம் எழுவதும் ஒரு நொடியில்; தற்கொலை செய்து தொங்குவதும் ஒரு நொடியில்; அந்தப் பாழெண்ணம் மாறுவதும் ஒரு நொடியில்'. எனவே அவர் தம் நாடக நூலுக்கு 'ஒரு நொடியில்' என்ற பொருத்தமான தொடரினையே தலைப்பாகத் தேர்ந்துள்ளார்.

இன்றைய சூழலில் இளைஞர்கள் என்னென்ன காரணங்களுக்காகத் தற்கொலை செய்துகொள்ள முற்படுகின்றார்கள்? வேறு வகையாகக் கூறினால், இன்றைய சூழலில் இளைஞர்கள் தற்கொலை செய்துகொள்ளத் தூண்டும் மனப்பான்மைகள் யாவை? ஆழ்ந்த சிந்தனையின் அடிப்படையில் - நீண்ட அனுபவத்தின் ஒளியில் - இவ்வினாக்களுக்கான விடைகளாகப் பத்துக் காரணங்களை - மனப்பான்மைகளைச் சுட்டிக் காட்டுகின்றார் வ.சுப.மா. அவையாவன:

1. தேர்வுத் தோல்விக்காக, 2. காதல் தோல்விக்காக, 3. வறுமைக்காக, 4. ஐயத்தினால், 5. புரியாமையினால், 6. மானத்துக்காக, 7. பதவிக்காக, 8. கற்புக்காக, 9. கொலைக்காக, 10. கொள்கைக்காக.

மேற்குறித்த பத்துக் காரணங்களுக்காகத் தற்கொலை செய்து கொள்ள முற்படும் மாந்தர்களைப் பாத்திரங்களாகக் கொண்டு பத்து நாடகங்களைத் தனித்தனியே உருவாக்கியுள்ளார் வ.சுப.மா. இங்ஙனம் தற்கொலை எண்ணத்தையே பொருளாகக் கொண்டு பத்து நாடகங்களைப் படைத்திட்டாலும், இந்

நாடகங்களில் வரும் மாந்தர்கள் அனைவரும் முடிவில் தம் தற்கொலை எண்ணத்தைக் கைவிட்டு, மனித வாழ்வின் மாண் பினை -உயிரின் அருமையை - உணர்ந்து திருந்துவதுபோல் படைத்துக்காட்டியிருப்பது அவரது தனிமுத்திரை ஆகும். தற்கொலை செய்துகொள்ள எண்ணுவோர், 'ஒரு நொடிப் பொறுமை இல்லாமையால் எய்தற்கரிய அருமையை, வாழும் உரிமையை, செல்வ உயிரை இழக்கலாமா?' என்னும் வ.சுப.மா.வின் பொருள் பொதிந்த வினாவினைச் சிந்தித்துப் பார்த்தால், தம் தற்கொலை எண்ணத்தை அறவே கைவிட்டு, திருந்தி வாழ முற்படுவர்; உயிரோடு வாழ - உயர்வாக வாழ - உண்மையாக வாழ - முடிவெடுப்பர்.

## வழிகாட்டும் வாழ்வியல் சிந்தனைகள்

'ஒரு நொடியில்' நாடகத் தொகுப்பில் பயில்வோர் நெஞ்சில் பசுமரத்தாணி போல் பதியத் தக்க அனுபவ மொழிகள் - நம்பிக்கைச் சிந்தனைகள் - பற்பல உள்ளன. அவற்றுள் ஒரு சில வருமாறு:

1. 'தேர்வுத் தோல்விக்கு உயிர் விடுவதென்றால், எத்தனை இளைய உயிர்கள் நாள்தோறும் உயிர்விட வேண்டும். இத் தோல்விகள் மறுபடி வெற்றிக்கு உரியவை என்றுதானே மறுமறு தேர்வுகள் நடத்துகின்றனர்' (ப.18).

2. 'நல்லது வரும் என்ற நம்பிக்கையே மனிதப் பிறவிக்குச் சாவா மருந்து. எந்நிலையிலும் வாழ்வு வரும் என்ற நம்பிக்கையே மெய். ஏனைய வெல்லாம் பொய்' (ப.47).

3. 'இளையர்களே! காதலுக்காக வாழநினையாமல், வாழ் வுக்காகக் காதலை ஒழுங்குபடுத்துங்கள். காதல் இழந்தால் உயிரி ழப்பு என்ற மரபுப் பேதைமையை விட்டு, உயிர் வாழக்காதல் என்ற அறிவுப் புரட்சியைக் கடைப்பிடியுங்கள்!' (ப.170)

4. 'ஒருவன் தன் கொள்கையைத் தான் நிறைவேற்ற வேண்டும். தான் உயிரோடு இருந்து நிறைவேற்றப் பார்க்க வேண்டும். இருந்து உழைத்து இன்னும் பலரை இணைத்து நிறைவேற்றப் பார்க்க வேண்டும்' (ப.195).

மண்ணில் நல்ல வண்ணம் வாழ - வையத்துள் வாழ்வாங்கு வாழ - வழிகாட்டும் வளமான வாழ்வியல் சிந்தனைகள் இவை!

இங்ஙனம் தனிப்பட்ட முறையில் தம் படைப்புக்களில் மட்டுமன்றி, 'தற்கொலையாக நிகழ்ச்சிகளை முடித்துக் காட்டாதபடி கலைஞர்கள், கவிஞர்கள், திரைஞர்கள், அறிஞர்கள் எல்லோரும் தம் படைப்புக்களை நலமாக நெறிப் படுத்த வேண்டும். உயிரோடும் முன்னறிவோடும் துணி வோடும் பண்போடும் எந்நிலையிலும் திருந்தியும் திருத்தியும் வாழலாம், வாழ்க என்ற புதுமனப்பான்மையை இளைஞர் களுக்குப் பாய்ச்ச வேண்டும். இவை என் வேண்டுரை' எனப் பிற படைப்பாளிகளுக்கும் வேண்டுகோள் விடுத்துள்ளார் வ.சுப.மா. அவரது வேண்டுகோள் இன்றைய படைப்பாளிகள் அனைவரும் ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டிய ஒன்றே என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

## வ.சுப.மா.வின் நாடகப்பாணி

''ஒரு நூலின் தவப் பெருமையும் நனி சிறுமையும் காண விழைவார், அதனைப் பல்முறை கற்றல் வேண்டும். இங்ஙனம் கற்கும் முறையினையே, 'நவில்தொறும் நூல் நயம்' என்றார் ஆசிரியர் திருவள்ளுவர். பன்முறை கற்றலோடு, நுணுக்கத் தினைக் காணவல்ல அடிப்படை அறிவும், நன்று தீது துணிய வல்ல நேர்மையும் கற்பார்க்கு இன்றியமையாதன'' (முகவுரை, 'மனைவியின் உரிமை') என்னும் வ.சுப.மா.வின் கருத்து, ஒரு நூலின் உண்மையான மதிப்பீட்டிற்கு நூலுள் ஆழ்ந்திருக்கும் ஆசிரியரின் - படைப்பாளியின் - உள்ளத்தினை உணர்வதற்கு உறுதுணை புரிவதாகும். இந்நெறிமுறையைப் பின்பற்றி நேர்மையான நெஞ்சுடன் வ.சுப.மா.வின் நாடக நூல்களைப் பன்முறை நுணுகிக் கற்கும் போது புலனாகும் சில உண்மைகள் வருமாறு:

1. மேடை அனுபவம் இல்லாமல் இலக்கியப் பயிற்சியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு வ.சுப.மா. தம் நாடகங்களை உருவாக்கியுள்ளார்.

2. தூய - செவ்விய - நல்ல தமிழ் நடையிலேயே வ.சுப.மா. தம் நான்கு நாடக நூல்களையும் படைத்துள்ளார். அவரது நாடக மாந்தர் அனைவரும் பெரும்பாலும் இவ்வகை நடையிலேயே உரையாடிக் கொள்கின்றனர்.

3. நாடக மாந்தர்க்கு - வ.சுப.மா.வின் தமிழிலேயே சுட்ட வேண்டும் என்றால் 'நாடகர்'களுக்கு - பண்ணன், நாவலன், கீரனார், திருமேனி, நக்கீரர், அறக்கதிர், நெடுமுடி, உலகன், ஓவியன், கதிரன், முரசன், வடிவழகி, யாழி, இன்னிசை, சேயிழை, வெண்ணிலா, வையை, காவிரி, மின்னொளி, பூமாலை, வளர்மதி, நீலவிழி, அமுதி, மான்விழி என்றாற்போல் தூய தமிழ்ப் பெயர்களையே இட்டுள்ளார்.

4. நாடகக் காட்சிகளின் இடையிடையே நாடக மாந்தர்கள் கவிதை பாடும் புதுப்போக்கினை வ.சுப.மா. தம் 'நெல்லிக் கனி' நாடகத்தில் கையாண்டுள்ளார்.

5. உருவம் (Form), உள்ளடக்கம் (Content), உத்தி (Techique) என்னும் மூவகைக் கலைக் கூறுகளுள் வ.சுப.மா.வின் நாடகங்கள் உள்ளடக்கத்தாலேயே சிறப்புப் பெறுகின்றன.

6. இலக்கிய நாடகம், சமூக நாடகம், குடும்ப நாடகம், கருத்து விளக்க நாடகம் என நான்கு வகையான நாடக நூல்களைப் படைத்து, நாடகத் துறைக்குத் தம் பங்களிப்பினை நல்கியுள்ளார் வ.சுப.மா.

## II. கடிதக் கலைஞர் வ.சுப.மா.

கடித வடிவில் கருத்துக்களைச் சுவைபட விளக்கிச் செல்வது ஒரு கலையாகும். அறிஞர் அண்ணா, மு.வரதராசன், முடியரசன் முதலானவர்களின் நூல்கள் இவ்வகையில் மக்களிடையே நன்கு அறிமுகம் ஆனவையாகும். அறிஞர் அண்ணா 'தம்பிக்கு' என்னும் தலைப்பில் எழுதிய கடிதங்கள் உயிரோட்டமும் எழுச்சியும் வாய்ந்தவை. டாக்டர் மு.வ. 'தம்பிக்கு', 'தங்கைக்கு', 'அன்னைக்கு', 'நண்பர்க்கு' என்னும்

தலைப்புக்களில் கடித வடிவில் படைத்த நூல்கள் மிகவும் புகழ்பெற்றவை; ஆற்றல் வாய்ந்த நடையில் அமைந்தவை. கவிஞர் முடியரசனும் 'அன்புள்ள பாண்டியனுக்கு' (1967) என்னும் தலைப்பில் திருக்குறட் கருத்துக்களை அடிப் படையாகக் கொண்டு கடித வடிவில் ஒரு நூலைப் படைத்துள்ளார். அண்மையில் எழுத்தாளர் மாலன் 'தினமணி கதிர்' இதழில் 'அன்புள்ள தமிழனுக்கு' என்னும் தலைப்பில் அமெரிக்காவிலிருந்து எழுதிய கடிதங்களும் நூல் வடிவம் பெற்றுள்ளன. இங்ஙனம் கடித வடிவில் கருத்துக்களை வெளியிடும் கலை முயற்சியில் வ.சுப.மா.வுக்கும் ஆழ்ந்த ஈடுபாடு உள்ளது. அவரது 'தலைவர்களுக்கு' (1965) என்னும் நூல் இவ்வகையில் அமைந்ததாகும்.

## 'தலைவர்களுக்கு'

இந்தியத் தமிழன் தன் அன்புத் தலைவர்களுக்கு எழுதிய 25 கடிதங்கள் இந்நூல் வடிவம் பெற்றுள்ளன. 'இந்நூல் என் நாட்டுத் தொண்டு' என ஒரே வரியில் அமைந்த முகவுரைக் குறிப்பு, 'நாட்டுத் தலைவர் நல்லுரை' என்னும் தலைப்பில் டாக்டர் இராதாகிருஷ்ணன் குடியரசு, அரசியலறிவு, வன்முறை பற்றிக் கூறியுள்ள கருத்துக்கள், 'இந்தியப் பாயிரம்' என்னும் தலைப்பில் 57 வரிகளில் அமைந்த நீண்ட கவிதை ஆகியவை இந்நூலின் தொடக்கப் பகுதிகளாக விளங்கி நூலை அணிசெய்கின்றன. 'என்கடன் இந்தியப் பணிசெய்து கிடப்பதே' (ப.151) என்னும் உண்மையான இந்தியத் தமிழனின் உணர்ச்சி மிக்க, முத்தாய்ப்பான கூற்றோடு வ.சுப.மா. நூலை முடித்திருப்பது ஒரு நயமாகும்.

## கடிதங்களின் நோக்கம்

'என் எழுத்தால் இந்தியத் தாய்நாட்டிற்கு ஒரு நன்மை செய்ய முடியும் என்றால், மொழிச் சிக்கலுக்கு முடிவான - நிலையான - நேர்மையான வழிகாட்ட இயலும் என்றால், அத்தொண்டினை ஏன் முன்வந்து செய்யலாகாது? எழுத வேண்டிய காலமும் பொருத்தமாக இருக்கும்போது, கடமை

செய்வதைக் கழிக்கலாமா?' (ப.9) என்ற எண்ணமே வ.சுப.மா.வை அன்புத் தலைவர்களுக்கு இருபத்தைந்து கடிதங்களை எழுதத் தூண்டியுள்ளது. நாட்டு நலனைக் கருத்தில் கொண்டு மொழிப் பிரச்சினைக்கு ஒரு நல்ல முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்ற முழு நோக்குடனேயே அவர் இக்கடிதங்களை வரைந்துள்ளார். 'நாட்டு நலமே நம் அறிவின் நோக்கம். என் எழுத்தின் நோக்கம்' (ப.126) என்றும், 'எது நாட்டுக்கு நல்லதோ அதுதான் என் கடிதங்களில் இடம்பெறும்' (ப.130) என்றும், 'நாட்டுப்பற்றை அடிப்படையாகக் கொண்டு யான் வரைந்த மொழிக் கொள்கை உங்கட்கெல்லாம் உடன்பாடு ஆகும் என நம்புகின்றேன்' (151) என்றும் கடிதங்களின் இடையே வ.சுப.மா. எழுதியுள்ள வரிகள், அவரது உள்ளத்தைத் திறந்து காட்ட வல்லனவாகும். இங்ஙனம் மொழிச் சிக்கல் பற்றி இயல்பாகவும் ஈடுபாடாகவும் பொறுமையாகவும் சிந்திப்ப தற்கு அவரது பல்லாண்டுக் கால ஆசிரிய அனுபவமும் மொழிப் புலமையும் அடிப்படைக் காரணங்களாக அமைந்தன எனலாம்.

## மூன்று தெளிவுகள்

இந்தியத் தமிழன் தன் அன்புத் தலைவர்களுக்கு எழுதும் கடிதங்களைப் படிக்கப் புகுவார்க்கு மூன்று தெளிவுகள் வேண்டும் எனக் கருதுகின்றார் வ.சுப.மா. படிப்பவர்க்கு வேண்டும் தகுதிகளாக அவர் வலியுறுத்தும் மூன்று தெளிவுகள் வருமாறு: .

1. வன்முறைகளை எதற்கும், என்றும், எவரும் கையாளக் கூடாது.
2. பாரதத்தின் ஒருமைப்பாடு பாழ்படக் கூடாது.
3. அடிப்படையுரிமையில் ஏற்றத்தாழ்வு கூடாது

(ப.10)

இம்மூன்று தெளிவுகளிலும் உடும்புப் பிடி போன்ற உறுதி கொண்ட எவரும், அடுத்து வரும் கடிதங்களைப் படிக்கும் தகுதி படைத்தவர் ஆவர் என்பது வ.சுப.மா.வின் கருத்து.

## மொழியின் முதன்மை

ஒரு நாட்டின் எல்லா ஆதாரத்திற்கும் மொழியே அடிவித்து. பற்றுக்கும் படிப்புக்கும் அறத்துக்கும் மறத்துக்கும் நடைக்கும் படைக்கும் தொழிலுக்கும் எழிலுக்கும் எண்ணத்துக்கும் எழுத்துக்கும் வணிகத்துக்கும் எல்லா அகப்புற வாழ்வுக்கும் மொழியே மனித மூலம்' (ப.127). இத்தகைய ஏற்றம் உடைய மொழிக்கு வேண்டிய மதிப்புக் கொடுத்து நாம் சிந்தித்திருக்கிறோமா? மொழியின் அருமை பெருமையை - ஆற்றலை - அதிகாரத்தை முழுதும் அறிந்திருக் கிறோமா? நாம் சிந்தித்த சிந்தனையெல்லாம் வேலைச் சிந்தனை, அடிக்கடி வேலையுயர்வுச் சிந்தனை ஆகியவை தானே? இத்தகைய சிந்தனைகளின் விளைவாக மொழியின் முதன்மைக்கு - முழுவளர்ச்சிக்கு - நாம் என்னென்ன செய்ய வேண்டும் என்பது பற்றியும் வ.சுப.மா. உடன்பாட்டு நெறி நின்று கருத்துரைக்கின்றார்.

'பொருளாதாரத்தில் ஐந்தாண்டுத் திட்டங்கள் போல மொழிக்கும் ஆண்டுத் திட்டங்கள் கோலியிருக்க வேண்டும். உரிமை பெற்ற நாள்தொட்டு ஒவ்வோர் அமைச்சவையிலும் மொழி மந்திரி ஒருவர் இடம்பெற்றிருக்க வேண்டும். வரவு செலவுத் திட்டத்தில் மொழி வளர்ச்சிக்கென்றே சில கோடி ஒதுக்கியிருக்க வேண்டும். பலதுறை நூல்களைப் பெருக்கி யிருக்க வேண்டும்' (ப.15).

இங்ஙனம் பொதுநிலையில் மொழியின் ஆற்றலையும் ஏற்றத்தையும் எடுத்துரைக்கும் வ.சுப.மா., சிறப்பு நிலையில் ஒல்லும் வகையெல்லாம் தாய்மொழியின் மதிப்பினையும் மாண்பினையும் சுட்டிக்காட்டுகின்றார். உலகப் பொருள்களை அறிவதற்குக் கண்ணிற் சிறந்த உறுப்பில்லை. அதுபோல நாட்டுப் பற்று உயிரில் படிவதற்கு மொழியினும் சிறந்த வழியில்லை. உடம்புக்கும் உயிருக்கும் என்ன தொடர்போ அத்தொடர்புதான் மொழிக்கும் நாட்டுக்கும். இந்திய வரலாற்றை அறிந்தவர்கள் சிறந்த பேரரசனது ஆட்சிக் காலத்தில் மொழியும் உடன் வளர்ந்தது என்பதனை நன்கு அறிவார்கள். சுருங்கக் கூறினால், 'மொழி மேகம் உணர்ச்சி நீரை

நாட்டு நிலத்துப் பொழிந்து பற்று வளம், அறிவு வளம், ஆண்மை வளம் எல்லாம் தரும்.'

*'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்*
*உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே'*

என்பது திருமூலர் வாக்கு. இதனை அப்படியே மொழிக்கு ஏற்ப மாற்றிக் கையாளுகின்றார் வ.சுப.மா.

*'மொழியார் அழியின் முடியார் அழிவர்*
*விழியார் குறையின் ஒளியார் குறைவர்*
*மொழியை வளர்க்கும் முழுமை அறிந்தேன்*
*மொழியை வளர்ப்பேன் முடிவளர்ப் பேனே'*

'இம்மொழி ஞானம் கல்வித் தலைவர்கட்கும் கட்சித் தலைவர்கட்கும் எத்துறைத் தலைவர்கட்கும் வேண்டும், வேண்டும். தாய்மொழியைப் பழிப்பது வீரமன்று, விழியன்று, ஈரமன்று' (ப.107) என முடிந்த முடிபாக உரைக்கின்றார் வ.சுப.மா.

இங்ஙனம் தாய்மொழியின் தகவினை எடுத்துக் காட்டுவதோடு நின்றுவிடாமல், மொழிச் சிக்கலைத் தீர்ப்பதில் கல்வியாளர்களுக்கு - கற்றவர்களுக்கு - உள்ள தனிப்பெருங் கடமையினையும் வ.சுப.மா. சுட்டிக்காட்டுகின்றார். 'பெரும் பாலும் கற்றோர்க்கு வேலைப்பற்றும் வெளிநாட்டுப் பற்றும் உண்டேயன்றி நாட்டுப்பற்றுக் குறைவு; அதனைவிட மொழிப்பற்றுக் குறைவு' என்ற கசப்பான நடப்பியல் உண்மையை எடுத்துக்காட்டும் வ.சுப.மா., 'கல்வி அறிவூட்டினால் மாத்திரம் போதாது; நாட்டுப் பற்றோடு அறிவூட்ட வேண்டும். கற்றவர்கள் அறிஞர்களாக இருந்தால் மாத்திரம் போதாது... எந்நிலையிலும் நாட்டுப்பற்று விடாத அறிஞர்களாக இருத்தல் வேண்டும்' எனக் கற்றவர்கள் கைக்கொள்ள வேண்டிய நெறிமுறையினையும் சுட்டிக் காட்டுகின்றார்.

## மொழிக் கருத்துக்களின் சாரம்

138 பக்கங்களில் - 23 கடிதங்களில் - விரிவாகவும் விளக்கமாகவும் வரைந்த மொழிக் கருத்துக்களை 24வது கடிதத்தில் வ.சுப.மா., படிப்பவர் நினைவுக்கும் தெளிவுக்கும் பயன்படும் வகையில் - ஒவ்வொரு வரியில் - இரத்தினச் சுருக்கமாக 12 கருத்துக்களாகத் தொகுத்துத் தந்துள்ளார். அவை வருமாறு:

1. இந்தி ஒன்றே பொதுமொழியாதல் கூடாது,
2. இந்தி ஆங்கிலம் என்ற இரட்டையாட்சி கூடாது,
3. மத்திய அரசுக்கு ஒரு மொழிச் சார்பு கூடாது,
4. ஆங்கிலம் கல்வித் திட்டத்தில் பேரிடம் பெறுக,
5. பதினான்கும் பாராளுமன்ற மொழிகள் ஆகுக,
6. பதினான்கும் பாரதப் பொதுமொழிகள் ஆகுக,
7. பதினான்கும் பாரதப் பணித்தேர்வு மொழிகள் ஆகுக,
8. தாய்மொழியைத் தன்னிறைவாக்குக,
9. நம் மொழிகள் உயர்கல்வி மொழியாக ஆண்டு குறிக்க,
10. பன்மொழி யறிவை நாட்டிற் பரப்புமின்,
11. பங்கு நல்கிப் பற்று வளர்மின்,
12. வன்முறை என்னும் சின்முறை ஒழிமின்'

(ப.139)

'இதுவரை கேட்ட செய்திகளின் சாரம்' என்றாற் போல், 'இதுவரை சொன்ன செய்திகளின் சார'மாக - கருத்துக்களின் பிழிவாக - இவை அமைந்துள்ளன.

## மொழிக் கொள்கை

'ஆங்கிலம் இருக்கட்டும், அதற்குக் கல்வித் துறையில் நல்லிடம் இருக்கட்டும். இந்தி இருக்கட்டும், அது பொது மொழிகளுள் ஒன்றாக இருக்கட்டும். ஏனைய மொழிகள் இருக்கட்டும், அவை இந்திக்கு நிகராக இருக்கட்டும். எல்லாம்

தமக்குரிய நிலைகளில் இருக்கட்டும்' (ப.52) - இதுவே இக் கடிதங்களின் வாயிலாக வ.சுப.மா. கூறும் நல்லுரை, 'எட்டாவது அட்டவணையிற் கண்ட நம் மொழிகள் அனைத்தும் பாரதப் பொது மொழிகளாம் எனச் சட்டம் செய்தல். இதற்கு மாறான சட்டங்களை அகற்றிவிடல்' (ப.151) - இதுவே நாட்டுப்பற்றை அடிப்படையாகக் கொண்டு அவர் வலியுறுத்தும் மொழிக் கொள்கை. இக்கொள்கையின் விரிவாக்கமே 'தலைவர்களுக்கு'.

## III. உரையாசிரியர் வ.சுப.மா.

'ஒரு புலவன் காலக் கழிவு நோக்காது நெடிதாராய்ந்து தன் வாணாளில் ஒரு நூற்கு உண்மையுரை எழுதி முடிப்பினும் போதியதே' என்பர் பண்டிதமணி மு. கதிரேசனார் (உரைநடைக் கோவை, இரண்டாம் பாகம், ப.29). தம் ஆசிரியப் பெருந் தகையான பண்டிதமணியாரின் இவ்வாக்கினை நெஞ்சாரப் போற்றுவதோடு, வாழ்வில் பின்பற்றவும் வேண்டும் என அழுத்தமாக எண்ணிய வ.சுப.மா., பிற எழுத்துப் பணிகளோடு நூலுக்கு உரை எழுதும் பணியையும் ஆர்வத்தோடு மேற் கொண்டார். இவ்வகையில் அவர் உரை எழுதி வெளியிட்டுள்ள நூல்கள் மூன்று. அவையாவன:

1. திருக்குறள் தெளிவுரை
2. நீதிநூல்கள் உரை
3. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழிமரபும் மாணிக்கவுரை

இனி, உரையாசிரியர் என்ற நோக்கில் வ.சுப.மா.வின் திறனை ஆராய முற்படுவோம்.

### 1. 'திருக்குறள் தெளிவுரை'

'திருவள்ளுவரின் எல்லாக் கருத்துக்களையும் எல்லாரும் எளிதில் அறிந்து கொள்ளுதற்குத் தெளிவான இந்த உரைநடைத் திருக்குறள் பெரிதும் துணைசெய்யும் என்று நம்புகிறேன்' என்னும் முகவுரைக் குறிப்போடு 'உரைநடையில் 1330

திருக்குறள்' என்ற நூல் 1963-ஆம் ஆண்டில் வெளிவந்தது. காரைக்குடி 'பேகன் பதிப்பக'த்தின் வெளியீடான இந்நூலின் விலை ஒரு ரூபாயே என்பது குறிப்பிடத்தக்கதாகும். இளையர், நடுத்தர வயதினர், முதியோர் எனப் பல நிலையினரும் - ஆடவர், மகளிர் என இரு பாலினரும் - கற்றுப் பயன்பெறும் வண்ணம் இந்நூலை அழகுற உருவாக்கி இருந்தார் வ.சுப.மா. இந்நூலே அவரது மறைவுக்குப் பின் - 1991 - ஆம் ஆண்டில் - குறள் மூலத்தோடு 'திருக்குறள் தெளிவுரை' என்னும் பெயரில் 'மணிவாசகர் பதிப்பக'த்தின் வெளியீடாக வெளிவந்துள்ளது.

## குறள்போல் அமைந்திருத்தல்

திருக்குறள் போல் அமைந்திருத்தலே இவ்வுரையின் தனிச் சிறப்பாகும். 'குறளுக்குக் குறளைப் போல் உரை வகுத்த செம்மல்' என்று வ.சுப.மா.வையும், 'திட்ப நுட்பம் செறிந்த, சுருக்கமான, தெளிவான உரை' என்று அவரது உரைத் திறனையும் போற்றுகின்றார் முனைவர் ச. மெய்யப்பன் ('மாணிக்க உரை', திருக்குறள் தெளிவுரை). 'இவ்வுரை ஈரடியால் சுருங்க இருப்பினும் உருவு கண்டு எள்ளாப் பெருமையது' என இவ்வுரைக்குப் புகழாரம் சூட்டுகின்றார் முனைவர் இரா. சாரங்கபாணி ('ஆய்வுரை', திருக்குறள் தெளிவுரை). இவ்விரு அறிஞர்களின் பாராட்டு மொழிகளுக்கு அரண் சேர்க்கும் வகையில் 'திருக்குறள் தெளிவுரை' யிலிருந்து ஒரு சில சான்றுகளைக் காண்போம்.

> *'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்*
> *பொய்யா விளக்கே விளக்கு'*

என்பது 'வாய்மை' அதிகாரத்தில் இடம்பெறும் ஒரு குறட்பா (299). இதற்கு வ.சுப.மா. குறள் நடையில் எழுதியுள்ள உரை விளக்கம் இதோ:

> *'எல்லா ஒளியும் ஒளியல்ல; சான்றோர்க்கு*
> *உண்மை ஒளியே ஒளி'*

(ப.60)

ஒட்டிப் பிறந்த இரட்டைப் பிள்ளைகளைப் போல் இங்கே மூலமும் உரையும் ஒன்று போல் காட்சியளிப்பது கண்கூடு.

*'இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்*
*துன்பம் உறுதல் இலன்'*

என்பது வள்ளுவர் வாய்மொழி ('இடுக்கண் அழியாமை', 629). இதற்குக் குறளோ என்று மயங்கும் வகையில் வ.சுப.மா. வரைந்துள்ள 'மாணிக்க உரை' வருமாறு:

*'மகிழ்ச்சியில் மகிழ்ச்சி அடையாதவன்*
*கவலையில் கவலை அடையான்'*

(ப.128)

இங்கே 'இன்பத்துள்ள இன்பம்', 'துன்பத்துள் துன்பம்' என்னும் வள்ளுவத் தொடர்களுக்கு இணையாக, 'மகிழ்ச்சியில் மகிழ்ச்சி', 'கவலையில் கவலை' என்னும் மாணிக்கத் தொடர்கள் அமைந்திருக்கும் பான்மை பயில்வார் நெஞ்சை அள்ளுவதாகும்.

மேற்குறித்த சான்றுகளால் இவ்வுரை குறளனைய சுருக்க முடையது என்னும் உண்மை உறுதியாகின்றது.

## முன்னோர் உரைபோற்றலும் புத்துரை காணலும்

வ.சுப.மா..தம் 'திருக்குறள் தெளிவுரை'யுள் பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார் முதலான முன்னைப் பழைய உரையாசிரியர்களின் கருத்துக்களையும், திரு.வி.க., மு.வ. போன்ற பின்னைப் புதிய உரையாசிரியர்களின் கருத்துக் களையும் பொன்னே போல் போற்றித் தழுவிக் கொள்ளும் இடங்களும் உண்டு; இவர்களின் கருத்துக்களிலிருந்து மாறுபட்டுத் தம் நுண்மாண் நுழைபுலத்தால் அவரே புத்துரை காணும் இடங்களும் உண்டு. இக்கருத்தினைத் தக்க சில சான்றுகளைக் கொண்டு மெய்ப்பிக்கலாம்.

*'பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்*
*பொருளல்லது இல்லை பொருள்'*

என்பது 'பொருள் செயல் வகை' அதிகாரத்தில் இடம்பெறும் முதற்குறள் (751). இக்குறளுக்குப் பரிமேலழகர், மணக்குடவர் ஆகிய முன்னைய உரையாசிரியர்களின் உரைகளைத் தழுவி,

*'மதிப்பு இல்லாதவரையும் மதிப்பு உடையராகச்*

*செய்யும் செல்வமே சிறந்த செல்வம்'*

(ப.154)

என உரை விளக்கம் செய்துள்ளார் வ.சுப.மா.

இதேபோல், 'நுண்ணிய நூல் பல கற்பினும் மற்றுந்தன், உண்மை அறிவே மிகும்' என 'ஊழ்' அதிகாரத்தில் வரும் குறட்பாவுக்கு (373) மணக்குடவர் உரையைத் தழுவி,

*'நுண்ணிய நூல் பல கற்றாலும் ஒருவர்க்குத்*
*தன் போக்கிலே தான் அறிவு வளரும்'*

(ப.76)

என உரை விளக்கம் வரைந்துள்ளார் வ.சுப.மா.

*'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்'*

என்பது 'மக்கட்பேறு' அதிகாரத்தில் வரும் ஒரு புகழ்பெற்ற குறட்பா (69). இதற்குப் பரிமேலழகர் வரைந்துள்ள உரை விளக்கம் வருமாறு:

'தான் பெற்ற பொழுதை மகிழ்ச்சியிலும் மிக மகிழும் தன் மகனைக் கல்வி கேள்விகளால் நிறைந்தான் என்று அறிவுடையோர் சொல்லக் கேட்ட தாய் என்றவாறு... பெண்ணியல்பால் தானாக அறியாமையின் கேட்ட தாய் எனவுங் கூறினார்'.

பரிமேலழகரின் இவ்வுரை விளக்கத்திலிருந்து மாறுபட்டு, இக்குறளுக்கு வ.சுப.மா. வரைந்துள்ள புத்துரை இதோ:

*'தன் மகன் வீரன் என்று புகழக் கேட்ட தாய்*
*பெற்ற காலத்திலும் பெருமகிழ்ச்சி அடைவாள்'*

(ப.14)

சங்க இலக்கியப் பயிற்சியின் அடிப்படையில் இங்கே 'சான்றோன்' என்ற சொல்லுக்கு 'வீரன்' எனப் பொருள் கொண்டுள்ளார் வ.சுப.மா.

*'இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை'*

என்பது 'இல்வாழ்க்கை' அதிகாரத்தில் முதலாவதாக இடம்பெறும் குறட்பா (41). இதில் வரும் 'இயல்புடைய மூவர்'

என்னும் தொடருக்குப் 'பிரமசாரி, வானப் பிரஸ்தன், சந்நியாசி' என்றே பரிதியார், காலிங்கர், மணக்குடவர் போன்ற முன்னைய உரையாசிரியர்கள் பொருள் கொண்டுள்ளனர். ஆயின், வ.சுப.மா.வோ இத்தொடருக்கு 'மரபான மூவேந்தர்' எனப் பொருள் கொண்டு,

> *'இல்லறத்தால் மரபான மூவேந்தர்க்கும்*
> *நல்லாட்சிக்கு உற்ற துணையாவான்'*
>
> *(ப.10)*

எனப் புத்துரை செய்துள்ளார்.

வ.சுப.மா. முன்னோர் உரைகளைத் தழுவி எழுதியுள்ள இடங்கள் அவரது பரந்த நூலறிவை எடுத்துக்காட்டுகின்றன என்றால், அவர் புதுவதாகக் கண்டு உணர வரைந்துள்ள இடங்கள் அவரது ஆழ்ந்த நுண்ணறிவைப் புலப்படுத்துகின்றன எனலாம்.

## வெல்லும் சொல்லைக் கையாண்டு உரை எழுதுதல்

'கேளாரும் வேட்பச் சொல்லுக!' *(643)* என்றும், 'திறனறிந்து சொல்லுக!' *(644)* என்றும், 'வெல்லுஞ் சொல் இன்மை அறிந்து சொல்லுக!' *(645)* என்றும், 'நிரந்தினிது சொல்லுக!' *(648)* என்றும், 'சில சொல்லுக! *(649)* என்றும் 'சொல்வன்மை' அதிகாரத்துள் வரும் குறட்பாக்களில் மொழிவார் வள்ளுவர். அவர் 'சொல் வன்மை'க்குக் கூறிய இவ்விலக்கணத்தை வ.சுப.மா. 'உரை வன்மை'க்குக் கையாண்டு, அதில் குறிப் பிடத்தக்க வெற்றி பெற்றுள்ளார். அவ்ர் தம் தெளிவுரையுள் எடுத்தாண்டிருப்பது குறளுக்குக் கூடுதலாக ஒரு சொல்லே என்றாலும், அச்சொல்லைத் திறனறிந்து கையாண்டிருப்பதால் வெல்லுஞ் சொல்லாகத் தேர்ந்து கையாண்டிருப்பதால் - பயில்வார் நெஞ்சில் நிலைத்த இடத்தினைப் பெற்று விடுகின்றது. ஓரிரு சான்றுகளால் இக் கருத்தினை உய்த் துணரலாம்.

> ***'அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்***
> ***என்னுடைய ரேனும் இலர்'***

என்பது 'அறிவுடைமை' அதிகாரத்தில் இடம்பெறும் இறுதிக்

குறட்பா (430). இதில் வரும் 'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்னும் தொடருக்கு 'அறிவுடையார் பிறிதொன்று இலராயினும் எல்லாம் உடையவராவர்' என்று பரிமேலழகரும், 'அறிவினையுடையார் யாதொன்றும் இல்லார் ஆயினும், எல்லா முடையவர்' என்று மணக்குடவரும் உரை விளக்கம் வரைந் துள்ளனர். ஆயின், வ.சுப.மா.வோ வெல்லும் சொல் ஒன்றி னைக் கூடுதலாகச் சேர்த்து 'அறிவுடையவர் **அறிவால்** எல்லாம் உடையர்' என உரை விளக்கம் தந்திருப்பது அருமையிலும் அருமையாகும்.

இதேபோல், 'தோன்றின் புகழொடு தோன்றுக' (புகழ், 236) என்னும் தொடருக்கு முன்னைய உரையாசிரியர்கள் 'பிறக்கின் புகழுண்டாகப் பிறக்க' (மணக்குடவர்), 'பிறந்தால் புகழுடனே வாழ வேண்டும்' (பரிதியார்) என்றே உரை வரைந்திருக்க, வ.சுப.மா.வோ '**அவைக்கண்** புகழ் நோக்கோடு தோன்றுக' (ப.48) எனத் திறன் மிக்க சொல் ஒன்றினை முன்னே போட்டு உரை விளக்கம் எழுதியிருத்தல் மனங்கொளத்தக்கதாகும்.

## வினா - விடை நடையில் உரை வரைதல்

குறள் நடையை மாற்றி வினா - விடை நடையில் உரை எழுதிச் செல்லும் பாங்கினையும் வ.சுப.மா.விடம் சிறப்பாகக் காண முடிகின்றது. படிப்பவர் நெஞ்சில் குறட் கருத்தினை நன்கு பதியச் செய்ய இந்நடைப்போக்கு அவருக்குத் துணைபுரிகின்றது.

> ***'மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்***
> ***வளத்தக்காள் வாழ்க்கைத் துணை'***

என்பது 'வாழ்க்கைத் துணைநலம்' அதிகாரத்தில் வரும் தலைக்குறள் (51).

இதற்கு வினா-விடை நடையில் வ.சுப.மா. எழுதியுள்ள உரை விளக்கம் வருமாறு:

> ***'வாழ்க்கைத் துணை யார்? குடும்பப் பண்பினள்,***
> ***கணவன் வருவாய்க்கேற்ப வாழ்பவள்'***
>
> (ப.12)

இதேபோல், 'கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன், கற்ற

செலச்சொல்லு வார்' என்னும் குறட்பாவுக்கும் (722) வினா-விடை வடிவில் வ.சுப.மா. உரை விளக்கம் வரைந்துள்ளார். அவ்விளக்கம் இதோ:

*'கற்றவருள் கற்றார் எனப்படுவார் யார்?*
*கற்றவர்முன் எடுத்துச் சொல்ல வல்லவரே.'*

*(ப.148)*

## மாணிக்க உரையின் முப்பெரும் பண்புகள்

எளிமை (Simplicity), சுருக்கம் (Brevity), தெளிவு-(Clarity) - இவையே வ.சுப.மா.வின் 'திருக்குறள் தெளிவுரை'யை அணி செய்யும் முப்பெரும் பண்புகள் ஆகும். பழகுதமிழ்ச் சொற்களைக் கையாண்டு குறளின் கருத்தினை எளிமைப்படுத்தித் தருதல், சில சொற்களால் சுருங்கக் கூறி குறளின் பொருளினை விளங்க வைத்தல், குறளின் உள்ளே ஆழ்ந்திருக்கும் உட் பொருளைத் தெளிவுறவே மொழிந்திடுதல் ஆகிய போக்குகள் அவரது உரை விளக்கத்தில் ஆங்காங்கே களி நடமிடுவதைக் காணமுடிகின்றது.

*'புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்*
*துச்சில் இருந்த உயிர்க்கு'*

என்பது 'நிலையாமை' அதிகாரத்தில் இடம்பெறும் இறுதிக் குறட்பா (340).

இதற்கு வ.சுப.மா. எழுதியுள்ள உரை விளக்கம் இதோ:

*'உடலில் ஒட்டுக் குடியிருக்கும் உயிர்க்கு*
*நிலையான ஒரு வீடு கிடைக்கவில்லையோ?'*

*(ப.68)*

இப்பகுதியில் இடம்பெற்றுள்ள 'ஒட்டுக்குடி' என்னும் வ.சுப.மா.வின் சொல்லாட்சியில் பழகுதமிழ்ச் சுவை விளங்கக் காணலாம். இதேபோல், 'நகுதற் பொருட்டன்று நட்டல்' என 'நட்பு' அதிகாரத்துள் வரும் குறட்பாவுக்கு (784), 'நட்புச் செய்தல் அரட்டை அடித்தற்கன்று' (ப.160) என வழக்குச் சொல்லினைக் கையாண்டு விளக்கம் எழுதியுள்ளார் வ.சுப.மா.

'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன், ஆகுல நீர

பிற' என்னும் குறட்பாவுக்கு (34),

'மனத்திழை மின்றி நட; அதுவே அறம்;
மற்றவை யெல்லாம் வெளிப்பகட்டு'

(ப.34)

என உரை வரைந்திருப்பது சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாங்கிற்குச் சிறந்த சான்றாகும்.

'நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு'

என்பது 'நாடு' அதிகாரத்தில் வரும் ஓர் அரிய குறட்பா (729). இதற்கு வள்ளுவர் உள்ளத்தைப் புலப்படுத்தும் வண்ணம் செவ்விய உரை விளக்கம் தந்துள்ளார் வ.சுப.மா. அரிதினும் அரிய அவ்வுரை விளக்கம் வருமாறு:

'தன்னிறைவுடைய வளநாடே உரிமை நாடு;
பிறர்நாட்டை எதிர்நோக்கும் நாடு நாடன்று'

(ப.150)

## வாழ்க்கைக்குத் துணைநிற்கும் உரை

'சுருக்கமும் தெளிவும் விளக்கமும் பெற்று, முன்னோர் கூறிய நல்லுரையும் தம் புத்துரையும் ஏற்றுத் திகழ்வதால், செம்மல் மாணிக்கனாரின் இத் திருக்குறள் தெளிவுரை வள்ளுவர் உள்ளம் அறிய வழி வகுப்பதோடு செம்மை சேர் வாழ்க்கைக் கும் துணைநிற்கும்' என்னும் முனைவர் இரா. சாரங்கபாணியின் மதிப்பீடு நூற்றுக்கு நூறு உண்மையே ஆகும்.

## 2. 'நீதிநூல்கள் உரை'

ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நறுந்தொகை, மூதுரை, நல்வழி, நன்னெறி, உலக நீதி என்னும் ஏழு அற நூல்களையும் ஏழினத் தமிழ் என்ற அழகிய பெயரால் சுட்டுவர் வ.சுப. மாணிக்கம் (திருக்குறட் சுடர், ப.105). 'நீதி விளக்கம்' என்னும் தலைப்பில் எழுதிய ஓர் அரிய ஆய்வுக் கட்டுரையில் அவர் ஏழினத்தமிழின் இனிமையையும் எளிமையையும் சொற் செட்டினையும் பொருளாழத்தையும் பெரிதும் போற்றி மகிழ்வர் (திருக்குறட் சுடர், பக்.104-122). காரைக்குடியில் தமிழ்ச் சங்கம் அமைத்து அதன் தலைவராய் விளங்கிய ஞான்று அவர் இந்

நீதிநூல்கள் ஏழையும் சிறுவர், சிறுமியர் உள்ளங்களில் என்றும் நிலைநிறுத்த விரும்பினார்; இந்நூல்களுக்கு எளிய தெளிவுரை வரைந்து தமிழ்ச் சங்க வெளியீடாகப் பல பதிப்புக்கள் வெளிவரச் செய்தார். 'காரைக்குடி தமிழ்ச் சங்கப் பதிப்'பாக முன்பு வெளிவந்த வ.சுப.மா.வின் 'நீதி நூல்கள்' உரை, அவரது மறைவுக்குப் பின் 'மணிவாசகர் பதிப்'பாக 1991-ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 'வருங்கால்க் குடிமக்களாகிய இக்காலச் சிறுவர் உள்ளங்களில் அறவுணர்வு பெருக வேண்டும்' என்னும் அவாவினால் உந்தப் பெற்று இவ்வுரை விளக்க நூலினை வெளியிட முன்வந்துள்ளார் வ.சுப.மா.

மகாவித்துவான் இராகவையங்கார், நாவலர் ந.மு. வேங்கட சாமி நாட்டார் போன்ற 'அறனறிந்து மூத்த அறிவுடை'ப் பெருமக்கள் பலர் நீதி நூல்களுக்கு உரை வரைந்திருப்பது கொண்டு அவற்றின் தரத்தினையும் திறத்தினையும் உய்த் துணரலாம். நீதிநூல்களில் ஆழ்ந்த பற்றும் பயிற்சியும் கொண்ட வ.சுப.மா.வும் இப்பெருமக்களை அடியொற்றி நீதிநூல்களுக்கு உரை எழுத முன்வந்துள்ளார்.

இளஞ்சிறார்களைக் கருத்தில் கொண்டு எழுதப்பெற்றதால், இவ்வுரையில் எளிமை, இனிமை, சொற்செட்டு, பொருளாழம் முதலான கூறுகள் மேலோங்கி நின்றன. சான்றாக, ஔவை யாரின் ஆத்திசூடிகள் சிலவற்றுக்கு வ.சுப.மா. எழுதியுள்ள நயமிகு உரை விளக்கங்களைச் சுட்டிக்காட்டலாம்.

| ஆத்திசூடி | | உரைவிளக்கம் |
|---|---|---|
| 1. 'ஙப்போல் வளை' | (15) | 'ங' எழுத்துப் போல நீயும் உன் சுற்றத்தைத் தழுவு' |
| 2. 'தையல் சொற்கேளேல்' (62) | | 'மனைவி சொல்வதை யெல்லாம் அப்படியே கேட்டு நடவாதே' |
| 3. 'பொருள்தனைப் போற்றி வாழ்' | (85) | 'வீண் செலவு செய் யாமல் பொருள்களைக் காத்துப் பெருக்கி வாழ்வாயாக' |

| | | |
|---|---|---|
| 4. 'போர்த் தொழில் புரியேல்' | (86) | 'யாருடனும் வீண் சண்டை போடாதே' |
| 5. 'மோகத்தை முனி' | (97) | 'தேவையில்லாத பொருள்கள் மீது ஆசையை நீக்கு' |

இதேபோல், 'எழுத்தறி வித்தவன் இறைவனாகும்' என்னும் 'நறுந்தொகை' (1) நீதிக் கருத்திற்கு வ.சுப.மா. 'கல்வி கற்பித்த ஆசிரியர் கண்ணாற் காணப் பெறும் கடவுள் ஆவான்' என எழுதியுள்ள உரை விளக்கமும், 'ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்' என்னும் 'உலக நீதி' (1) அடிக்கு வ.சுப.மா. 'நாள்தோறும் தவறாமல் படிக்க வேண்டும்' என உடன்பாட்டு முறையால் எழுதியுள்ள உரைவிளக்கமும் பயில்தொறும் பேரின்பம் பயப்பவையாகும்.

**3. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழி மரபும் - மாணிக்கவுரை**

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் 'தொல்காப்பியப் புலத் தகைமை' ஆய்வுக் கட்டிலில் முதல் தொல்காப்பியத் தகைஞ ராக வீற்றிருந்த போது வ.சுப.மா. எழுதிய உரை நூல் இம் 'மாணிக்கவுரை'. இந்நூல் தொல்காப்பிய எழுத்ததி காரத்தின் முதலிரு இயல்களான நூன்மரபுக்கும் மொழி மரபுக்கும் அமைந்த உரை விளக்கமாக 1989-ஆம் ஆண்டில் வெளிவந்தது. ''எல்லாத் தமிழரும் அறிய வேண்டிய தமிழ் மறை முதனூலான தொல்காப்பியத்தை 'எண் பொருளாகச் செலச் சொல்லி' என்ற திருக்குறட் படி ஒல்லும் வழியெல்லாம் எளிமைப்படுத்துவோம்; காலத்துக்கேற்ற எடுத்துக்காட்டுக்கள் தந்தும் இலக்கியம் காட்டியும் எண்மைப்படுத்துவோம்... மக்களின் தமிழ்ப் பிடியும் தமிழ்த் தரமும் தொல்காப்பிய வுணர்வுமே என் உரை நோக்கம்'' (ப.6) எனத் தம் 'மாணிக் கவுரை'யின் நோக்கத்தினை அவரே 'உரைப் பாயிரத்'தில் தெளிவுபடுத்தியுள்ளார்.

### வ.சுப.மா.வின் உரைநெறியங்கள்

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் நூன்மரபு, மொழிமரபு நூற்பாக்களுக்கு உரை வரையும் பொழுது வ.சுப.மா. பின்பற்றி

யுள்ள உரைநெறிகள் - அவரது மொழியிலேயே சொல்ல வேண்டும் என்றால் 'உரைநெறியங்கள்' - வருமாறு:

1. *இயல் முன்னுரை*
2. *இயற்கருத்து*
3. *அகலவுரை*
4. *வழக்கு*
5. *திறனுரை*
6. *இயல்முடிவுரை*

இவ்வுரை நெறியங்களை நன்கு பின்பற்றி நுண்மையும் ஆழமும் அறிவுச் சுவையும் விளங்கத் தம் 'மாணிக்கவுரை'யை உருவாக்கியுள்ளார் வ.சுப.மா.

### உண்மை உரையாசிரியர்

'நூலாசிரியர் உள்ளக் கிடக்கையை நுணுகி ஆராய்ந்து தெளிவு பெற எடுத்தெழுதும் வன்மையாளரே உண்மை உரையாசிரியராவர்' என உரையாசிரியருக்கு இலக்கணம் வகுப்பர் பண்டிதமணியார் (உரைநடைக் கோவை: இரண்டாம் பாகம், ப.29). இவ்விலக்கணத்திற்கு நல்லதோர் இலக்கியமாக - நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் கொண்ட 'உண்மை உரையாசிரிய'ராக - வ.சுப.மா. விளங்குகின்றார். நூலாசிரியரின் அரிய கருத்துக்களையெல்லாம் உணர்ந்து இன்புறுவதற்கு வ.சுப.மா.வின் உரை விளக்கங்கள் பேருதவி புரிகின்றன என்றால் மிகையாகாது.

## IV. பதிப்பாசிரியர் வ.சுப.மா.

பதிப்புத் துறைக்கும் வ.சுப.மா. தம்மால் இயன்ற பங்களிப்பினைச் செய்துள்ளார். 'இரட்டைக் காப்பியங்கள்' (1958), 'நகரத்தார் அறப்பட்டயங்கள்' (1961) என்னும் இரு நூல்களும் அவரது பதிப்புத் திறனைப் பறைசாற்றி நிற்கின்றன. இவற்றுள், உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பிற்கு இணையான சிறப்பினையும் சீர்மையினையும் கொண்டு வ.சுப.மா.வின் 'இரட்டைக் காப்பியங்கள்' பதிப்பு விளங்கு

கின்றது. காதைச் சுருக்கம், காப்பியத் திறன், ஒப்புமைச் சுருக்கம், காப்பிய மாந்தர், இலக்கியக் குறிப்புக்கள் என்னும் பொருள் களில் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு காப்பியங் களுக்கும் அவர் எழுதியுள்ள பகுதிகள் காப்பிய ஆர்வலர்க்கும் ஆய்வாளர்க்கும் பெரிதும் பயன்படுவனவாகும். இதேபோல், தமிழினத்தின் நாகரிக வளர்ச்சியைக் காண முயல்வார்க்குத் துணைசெய்யும் எட்டு வகை ஏடுகளை வ.சுப.மா. 'நகரத்தார் அறப் பட்டயங்கள்' என்னும் நூலில் பதிப்பித்துள்ளார்.

இங்ஙனம் நாடகப் பணி, கடித இலக்கியப் பணி, உரைப் பணி, பதிப்புப் பணி எனப் பல்வகைப் பணிகளை அன்னைத் தமிழ் மொழியின் ஆக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் பாங்கறிந்து ஆற்றியுள்ளார் வ.சுப.மா.

## 7. சில நிகழ்ச்சிகள் - சில நினைவுகள்

***'ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்ப் படிப்பு வட்டத்தில் முதல் நிலைக் கருத்தாளராக மாணிக்கனார் இருந்தார். இவர் ஆய்வுப் பயிற்சி தன்முயற்சியால் பெற்றது.'***

*-வ.அய். சுப்பிரமணியன் ★*

### 1.'நன்று சொன்னாய்'!

இராமகிருஷ்ண பரமஹம்சருக்கும் விவேகானந்தருக்கும் இடையே நிலவியதைப் போல் ஓர் ஆழ்ந்த - உள்ளார்ந்த - உறவு **பண்டிதமணி கதிரேசனார்க்கும்** வ.சுப. மாணிக்கனார்க்கும் இடையே எப்போதும் நிலவியது. 'என் ஆசிரியர்' என்ற கட்டுரையில் பண்டிதமணியாரை நினைவுகூர்ந்து வ.சுப.மா. எழுதியுள்ள இரு நிகழ்ச்சிகள், இன்றைய ஆசிரிய உலகும் மாணவருலகும் என்றென்றும் மனங்கொளத் தக்கவையாகும். இங்கே வ.சுப.மா.வின் வாய்மொழியாகவே அவ்விரு நிகழ்ச்சிகளையும் காண்போம்.

''வித்துவான் இறுதி நிலையில் சொல்லதிகாரச் சேனாவரையர் உரையைப் பண்டிதமணி பாடம் நடத்தினர்... அப்பாடத்தில் 96 விழுக்காடு நான் பெற்றேன். 'இவ்வுரையில் இவ்வளவு மதிப்பெண் வாங்கியிருக்கிறாய்' என்று என்னிடம் அள்ளூற மொழிந்தனர். 'நான்கு மதிப்பெண் ஏன் குறைந்தது?' என்று பணிவொடு கேட்டேன். விடைத்தாளில் ஓரிரு இடங்களைச் சுட்டிக்காட்டி இவ்விடங்களில் எழுதிய விளக்கம் போதாது என்று கூறினார்கள். இங்ஙனம் மாணவர்தம் விடைத்தாளைப் படித்துக் குறைவான இடத்தைக் கோடிட்டுத் திருத்தும் ஆசிரியவுலகை இனிக் காண முடியுமா? என்று ஏங்குகின்றேன்.

---

★ வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வும் பணியும், ப.55.

சேனாவரையர் பாடம் நடத்தும்போது ஒரு சுவையான நிகழ்ச்சி. சேனாவரையர் மாணவன் வினாவுவது போலத் தாமே சில வினாக்களை எழுப்பிக் கொள்வர். 'நன்று சொன்னாய்' என்று பாராட்டி விட்டு விடை கூறப் புகுவர். தொல்காப்பியம் 92, 115, 120, 182 என்ற நூற்பாக்களில் இவ்வகைப்பட்ட உரை முறையைக் காணலாம். பண்டிதமணி அவர்கள் சில சமயங்களில் அவ்வினாவை மாத்திரம் படித்து நிறுத்திவிடுவர். வரி விடாது படித்தல் நன்மாணாக்கன் இலக்கணமாதலின், 'நன்று சொன்னாய்' என்று அடுத்த தொடரை நான் படிப்பேன். பார்வைக்குப் பண்டிதமணி அவர்கள் மாணவன் போல வினவுவதாகவும், 'நன்று சொன்னாய்' என்று நான் சேனா வரையர் போலப் பாராட்டுவதாகவும் தோன்றும். இதனை உணர்ந்த மாணவர்கள் சிரித்தபோது பண்டிதமணி என்ன என்று கேட்டார்கள். அச்சத்தால் ஒருவரும் வாய் திறக்கவில்லை. உண்மையைச் சொல்லியிருந்தால் நயம் உணரும் பண்டிதமணி அவர்களும் சேர்ந்து சிரித்திருப்பார்கள்'' (ஒப்பியல் நோக்கு, பக். 183-184).

## 2. 'வற்றாத தமிழ்க் கடல்'

தமிழ் மொழி, தமிழ் இலக்கியம் ஆகியவற்றின் மீது தணியாத பற்றும் பாசமும் கொண்டவர் வ.சுப.மா. தாய் மொழியாம் செந்தமிழுக்குப் பெருவளம் சேர்க்க வேண்டும் என்பது அவரது தலையாய குறிக்கோள்களுள் ஒன்று. கலைஞர் மு. கருணாநிதி தம் இரங்கல் செய்தியில் குறிப்பிட்டதைப் போல் 'வற்றாத தமிழ்க் கடல் வ.சுப. மாணிக்கம்' (வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வும் பணிவும், ப.3). தமிழ் வழி பாட்டினையே இறைவழிபாடாகக் கொண்டவர் வ.சுப.மா. பிள்ளையார் சுழிக்குப் பதில் 'த' என்று தொடங்குவது அவர் இயல்பு. த-தமிழைக் குறிக்கும். அவரது பயணப் பெட்டியில் திருக்குறளும் திருவாசகமும் எப்போதும் இருக்கும். 'தமிழுக்குத் தொல்காப்பியம், வாழ்வின் உயர்வுக்குத் திருக்குறள், உயிர்த் தூய்மைக்குத் திருவாசகம்' என்பது அவரது தாரக மந்திரம். பிறிதோர் இடத்திலும், 'தொல்காப்பியம் திருக்குறள்

சிலப்பதிகாரம் திருவாசகம் பாரதியம் என்றினைய பனுவல்கள் ஐம்பூதங்கள் போலும் என்றும் அடிப்படைச் சிந்தனைக்கு உரியவை; உள்ளங்கள் உள்ளளவும் உள்ளத் தக்கவை' ('உரைப்பாயிரம்', தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழிமரபும் மாணிக்கவுரை, ப.3) என அவர் குறிப்பிட்டுள்ளார்.

தமிழின் சிறப்பினை வ.சுப.மா. எடுத்துக்காட்டும் விதமே தனியாக இருக்கும். சான்றாக, 'உடல் உறுப்புக்களின் பெயர் களை எடுத்துக்கொண்டால் தமிழில்தான் குறைந்த எழுத்துக் களால் அவற்றைச் சுட்ட இயலும். 26 எழுத்துக்களை உடைய ஆங்கிலத்தால் அப்படிச் சொல்ல இயலாது' என்னும் தம் கருத்தினைத் தக்க சான்றுகளோடு நிறுவுவார் அவர்.

## உறுப்பின் பெயரும் எழுத்தும்

| தமிழில் | | ஆங்கிலத்தில் | |
|---|---|---|---|
| 1. தலை | (2) | Head | (4) |
| 2. நா | (1) | Tongue | (6) |
| 3. கை | (1) | Hand | (4) |
| 4. வயிறு | (3) | Stomach | (7) |
| 5. விரல் | (3) | Finger | (6) |
| 6. கண் | (2) | Eye | (3) |
| 7. கால் | (2) | Leg | (3) |
| 8. மூக்கு | (3) | Nose | (4) |

தமிழைப் பற்றிக் குறைத்துப் பேச வ.சுப.மா. ஒருகாலும் இசையமாட்டார். 'திருக்குறள் படித்த தமிழாசிரியர்கள் அதற்கு மாறுபட்டு நடக்கிறார்களே' என்று யாரோ ஒரு முறை சொல்ல, அப்படிச் சொன்னவரைப் பார்த்துச் சினக் குறிப்போடு 'திருக்குறள் மனிதர்களுக்காக எழுதப்பட்ட நூல்; தமிழாசிரியர் களுக்காக மாத்திரம் எழுதப்பட்ட நூலன்று. இதற்கு ஏன் தமிழையும் தமிழாசிரியர்களையும் சந்திக்கு இழுக்கிறீர்கள்?' என்று திருப்பிக் கேட்டார் வ.சுப.மா. தமிழாசிரியர்களைப் பற்றித் தவறாகப் பேசிய அந்த அன்பர் மறுமொழி கூற முடியாமல் தலைகுனிந்தார்.

## 3. 'மனுநீதிச் சோழ மாணிக்கம்'

சின்ன வயதில் பர்மாவில் ஒரு வட்டிக் கடையில் கணக்குப் பிள்ளையின் கையாளாக இருந்து எடுபிடி வேலைகளைச் செய்த வ.சுப.மா. பிற்காலத்தில் ஒரு பல்கலைக்கழகத்திற்கே துணை வேந்தராகப் பொறுப்பேற்கும் நிலைக்கு உயர்ந்தார்; இளமையில் வெறும் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மாத்திரமே படிக்கும் வாய்ப்பினைப் பெற்றிருந்த வ.சுப.மா., பின்னாளில் ஒரு பல்கலைக்கழகத்தில் சேர்ந்து வித்துவான் பட்டம் பெற்றதோடு, தனிப்பட்ட முறையிலேயே பயின்று எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி., பட்டங்களைப் பெற்றுச் சிறந்தார். அவரது இவ்வுயர்வுக்கும் சிறப்புக்கும் காரணமாக அமைந்தது எது? உழைப்பு, உழைப்பு, உழைப்பு.

உழைப்பும், நாணயமும், நேர்மையுமே வ.சுப.மா.வின் மூலதனம். அவரது நேர்மைத் திறத்தைப் பறைசாற்றும் ஒரு நிகழ்ச்சி. காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் வ.சுப.மா. முதல்வராகப் பணியாற்றிய நேரம். அப்போது அவருடைய இரண்டாவது மகன் பூங்குன்றனும் அதே கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறான். ஒரு முறை தேர்வறையில் பல்கலைக் கழகத்தின் சட்டவிதிகளுக்கு மாறாக அவன் நடந்து கொண்டான் என்பதற்காக வ.சுப.மா. இரண்டு ஆண்டுகள் அவனைத் தேர்வு எழுதுவதிலிருந்து விலக்கி வைக்கிறார் (Debar); தவறு செய்திருப்பது தம் மகன் என்று தெரிந்தும் உடனே பின்வாங்கி விடாமல் சட்டப்படி உரிய நடவடிக்கை எடுக்கிறார்; 'மனுநீதிச் சோழ மாணிக்க'த்தின் இந்தச் செய்கை அந்தக் காலத்தில் - அதாவது 1967-68-இல்-கல்லூரி வளாகங்களில் பரபரப்பாகப் பேசப்பட்ட ஒரு செய்தியாகும்.

## 4. மெய் சிலிர்க்க வைத்த நிகழ்ச்சி

முனைவர் **இரா. சாரங்கபாணி,** மூதறிஞர் வ.சுப.மா.விடம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான்கு ஆண்டுகள் புலவர் வகுப்பில் பயின்றவர். அதன் பின்னர் இருபது ஆண்டுகள் அவரோடு விரிவுரையாளராகவும், பேராசிரி

யராகவும் காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் பணிபுரியும் பேறு பெற்றவர். நாள்தோறும் மாலையில் அவர்கள் இருவரும் இணைந்து உலாவச் செல்வது வழக்கம். 'நான் கண்ட செம்மல்' என்ற தலைப்பில் வ.சுப.மா. குறித்து எழுதிய இரங்கல் கட்டுரையில் முனைவர் இரா. சாரங்கபாணி நினைவுகூரும் ஒரு நிகழ்ச்சி பயில்வார் நெஞ்சைத் தொடும் பான்மையதாகும். அந்நிகழ்ச்சி வருமாறு:

''பேராசிரியர் (வ.சுப.மா.) அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணி புரிந்தபோது என்னை அறக்கட்டளைச் சொற்பொழிவு ஒன்றுக்கு அழைத்திருந்தார். அக்கூட்டத்தில் தலைமை உரையில் என்னை அறிமுகப்படுத்தும்போது, 'நாங்கள் நாள்தோறும் பழகுபவர்கள். இனையம் இவர் எமக்கு இன்னம் யாம் என்று புனையினும் புல்லென்னும் நட்பு ஆதலின் இவரைப் பற்றிப் பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் அறிமுகம் செய்வார்கள் என்று கூறினார்கள். எனக்கும் பேராசிரியராகத் திகழ்ந்த பெருந்தகை என்னை நண்பராகக் கருதி இக்குறளைக் கூறியபோது என் மெய் சிலிர்த்தது. இன்று இந்நிகழ்ச்சியை நினைக்கும்போது கண்ணீர் அரும்புகிறது'' ('குறளியம்', வ.சுப. மாணிக்கனார் நினைவுச் சிறப்பு மலர், 1.6.89, பக். 11-12).

## 5. சிக்கனமே உன் பெயர்தான் வ.சுப.மா.வோ?

'தேவைக்கு மேல் செலவு செய்வது டம்பம். தேவையின் அளவு செலவு செய்வது சிக்கனம். தேவைக்கும் செலவு செய்யாதது கருமித்தனம்' என வாழ்வியல் இலக்கணம் ஒன்றினை வகுப்பார் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் (மணமக்களுக்கு, ப.21). இம்மூன்று பண்புகளுள், வ.சுப.மா. சிக்கனத்திற்குப் பெயர் பெற்றவர்; செட்டாக வாழ்வதில் என்றும் கண்ணும் கருத்துமாக இருந்தவர். காட்டாக, வித்துவான் வகுப்பில் பயின்ற போது அவர் தமக்குக் கிடைத்த உதவித் தொகை பத்து ரூபாயில் 6 ரூபாயை உணவு விடுதிக்கும், 3 ரூபாயை நூல்கள் வாங்குவதற்கும், 1 ரூபாயைக் காப்பி

குடிப்பதற்குமாகப் பகிர்ந்து பயன்படுத்திக் கொண்டமையைச் சுட்டலாம். இச்சிக்கனப் பண்பே பிற்காலத்தில் அவர் ஒரு துணைவேந்தராக ஆனபோது பல்கலைக்கழக வளர்ச்சிக்குப் பெரிதும் கைகொடுத்தது.

வ.சுப.மா., மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராக இருந்தபோது, அங்கே கல்லூரி வளர்ச்சிக் குழுவின் புல முதன்மையர் (Dean) பொறுப்பில் உடன் பணியாற்றியவர் பேராசிரியர் **தி.அ. சொக்கலிங்கம். 'குகன்'** என்னும் புனைபெயரைக் கொண்ட அவர், மூன்று ஆண்டுகளில் வ.சுப.மா. வுக்கும் தமக்கும் இடையே ஏற்பட்ட சில சுவையான நிகழ்ச்சிகளைப் 'பொய் சொல்லா மாணிக்கம்' (பெரும் புள்ளிகள், பக். 105-109) என்ற தலைப்பில் எழுதிய ஒரு கட்டுரையில் பதிவு செய்துள்ளார். அப்பதிவில் இடம் பெற்றுள்ள ஓர் அரிய நிகழ்ச்சி இதோ:

''வருஷா வருஷம் கல்லூரிகளில் புதிய பாடங்கள் தொடங்குவதற்கு அரசாங்கம் அனுமதி தர வேண்டும். இதற்கான கூட்டம் சென்னை கோட்டையில் மார்ச்/ஏப்ரல் மாதம் நடைபெறும். இப்படி நடைபெற்ற ஒரு கூட்டத்தில் துணைவேந்தர் டாக்டர் வ.சுப.வும் நானும் கலந்து கொள்கிறோம். காலை 7 மணிக்குப் பாண்டியன் எக்ஸ்பிரஸ் மூலம் சென்னை சென்று வழக்கமாகத் தங்கும் விடுதிக்குப் போகிறோம். அந்த விடுதியில் அன்றிலிருந்து புதிய உத்தரவு போட்டிருந்தார்கள். அதாவது எப்போது வந்து சேர்ந்தாலும் மதியம் 12 மணியிலிருந்துதான் நாளைக் கணக்கிடுவார்கள் (அதாவது செக் அவுட் டைம் மதியம் 12 மணி). நாங்கள் காலை 7 மணிக்குப் போய்ச் சேர்கிறோம். அப்போது ரூம் எடுத்தால் மதியம் 12 மணியோடு ஒரு நாள் கணக்கு (ஐந்து மணிநேரம் தங்க ஒரு நாள் வாடகை).

துணைவேந்தர் என் முகத்தைப் பார்க்கிறார். 'பரவா யில்லை சார், இரண்டு நாள் வாடகை கொடுத்துவிடலாம்' என்று நான் சொல்லத் துணைவேந்தரோ 'நமக்கோ மதியம் 3 மணிக்குத் தானே கூட்டம்? சாமான்களை வரவேற்பறையில் வைத்து

விடுவோம்: அப்படியே எங்காவது நடந்து போய்விட்டு 12 மணி வாக்கில் வருவோம். பல்கலைக்கழகப் பணத்தை வீணாக்குவது தவறு அல்லவா? என்று சொன்னதோடு அப்படியே செய்தும் காட்டினார்.'' இப்படியெல்லாம் சிக்கனமாக இருந்த வ.சுப.மா., பல்கலைக்கழக வளர்ச்சி என்று வரும்பொழுது பணத்தை வேண்டிய அளவு செலவழிக்கவும் செய்தார்; பல்கலைக் கழகத்தில் பல்வேறு புதிய துறைகளை உருவாக்கி, பல்கலைக் கழக ஊழியர்களுக்குப் பல்வேறு நலத்திட்டங்களையும் நிதியுதவிகளையும் நடைமுறைப்படுத்தினார்.

## 6. கறைபடாக் கையினர்

வ.சுப.மா. பொய் கூறாத வாயினர் போலவே கறைபடாக் கையினர். இதனை மெய்ப்பிக்கும் ஒரு நிகழ்ச்சி:

ஒரு முறை செல்வர் ஒருவர் மதிப்பெண் நிறையப் போடச் சொல்வதற்காக பேராசிரியர் வ.சுப.மா. வீட்டுக்கு வந்தார். வந்தவர், முதலில் தம் பணச் செருக்கால் 'இக்காலத்தில் யார் ஒழுங்காக இருக்கிறார்கள்? எல்லாரும் பணம் பெற்றுக் கொண்டு மதிப்பெண் போடுகிறார்கள்' என்று வாய்க்கு வந்தபடி கூறிவிட்டுத் தாம் வந்த வேலை நிறைவேறுவதற்காக வ.சுப.மா.வின் உதவியை நாடினார். வ.சுப.மா.வோ 'எல்லோரும் பணம் பெற்றுக்கொண்டு மதிப்பெண் போடு கிறார்கள் என்று மேம்போக்கில் கூறினீர்களே, நான் போட வில்லை என்று தெரிந்து கொள்ளுங்கள்' என்று சொல்லி அச்செல்வரை விரைவில் வீட்டை விட்டு அனுப்பி வைத்தார். செல்வரோ வாயடைத்து நின்றார்.

## 7. உற்றுழி உதவிடும் உள்ளம்

'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் அப்பர் வாக்கில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர் வ.சுப.மா. அப்பர் வாக்கிலே பொருத்தமாக ஒரு சொல்லைச் சேர்த்து, 'என் கடன் இந்தியப் பணி செய்து கிடப்பதே' (தலைவர்களுக்கு, ப.151)

என்றும் முழங்கியவர் அவர். 'மக்களினம் பெருகி வரும் இக் காலத்தில் தொண்டுக்கு இடமும் பெருகியுள்ளது. பொரு ளிருந்துதான் தொண்டு செய்ய வேண்டும் என்பதில்லை. பொரு ளில்லாமலே எவ்வளவோ தொண்டுகள் செய்யலாம். மேலும் தொண்டுகளில் சிறியன, பெரியன என்ற வேறுபாடும் இல்லை. வீதியிற் கிடக்கும் முள்ளினை, கண்ணாடித் துண்டினை, இலாடத்தைக் குனிந்து எடுத்து ஒதுக்குப் புறமாகப் போடுவது தொண்டில்லையா? கிடப்பது தெரிந்தும் எடுத்தெறியா விட்டால் யார் காலிலாவது கண்ணாடித் துண்டு பாய்ந்தால் எவ்வளவு புண்பாடு ஏற்படும்? தீய விளைவை நோக்கும்போது, கண்ணாடித் துகளை அப்புறப்படுத்துவது பெருந் தொண்டல்லவா? வீதிக் குழாயிலிருந்து தண்ணீர் விழுந்து கொண்டிருந்தால் அதனை அடைத்துத் தண்ணீரைக் காப்பது பொதுவாயத் தொண்டு. வீட்டில் கூட்டிய குப்பையை வீதியில் எறியாது, வீட்டுக் குழியில் போடுவதும், கொண்டு சென்று வீதித் தொட்டியிற் போடுவதும் ஊராயத் தொண்டு. கண்ட னிடங்களில் காறித் துப்பாமை, பொதுவிடங்களைக் கெடுக் காமை, சுவர்களில் கண்டபடி எழுதாமை, காம விளம்பரங்கள் ஒட்டாமை இவையெல்லாம் சிறியனவாகத் தோன்றினாலும் சிறந்த பொதுமைத் தொண்டுகளாம்' (திருக்குறட் சுடர், பக். 26 - 27) எனப் பல வகையான தொண்டு நெறிகளைக் குறித்து விரிவாகவும் விளக்கமாகவும் எழுதியவர் அவர். இங்ஙனம் எழுதியதோடு மட்டுமன்றி, எழுதியதைத் தம் நடைமுறை வாழ்வில் பின்பற்றியும் காட்டியவர் அவர். ''உலாவச் சென்ற போது ஒரு வண்டி மணலில் சிக்கிக் கொண்டு செல்ல முடியாமல் தடைப்பட்டது கண்டு, தாமே சென்று வண்டியைத் தள்ளினார். காய்கறிக் கூடைச் சுமையை இறக்கி வைத்துவிட்டுத் தூக்கிவிட ஆள் இல்லாமல் ஏங்குபவரின் குறிப்பறிந்து தாமே சென்று உதவுவார். இப்படிச் செல்லும் வழியெல்லாம் சிறுமை யெனக் கருதாது உற்றுழியுதவுவது இவர்தம் (வ.சுப.மா.வின்) இயல்பாகும்'' ('நான் கண்ட செம்மல்', குறளியம், 1.6.89, ப.14) என்னும் முனைவர் இரா. சாரங்கபாணியின் நினைவுக் குறிப்பால் இதனை உணரலாம்.

## 8. பிறர் பொருளுக்கு ஆசைப்படாத பேருள்ளம்

வ.சுப.மா. எதிலும் நேர்மையாக இருப்பவர்; பிறருடைய பொருளுக்குச் சிறிதும் ஆசைப்படாத இயல்பினர். இப் பண்பினை எடுத்துக்காட்டும் வகையில் மதுரை நகரத்தார் சங்கச் செயலர் **எம்.சி.என். மாணிக்கம்** நினைவுகூர்ந்து எழுதும் சிறிய-ஆனால் சீரிய-நிகழ்ச்சி இது:

''1982 ஏப்ரலில் இலங்கையில் 'இந்து சமய அற நிலைய மாநாடு' நடைபெற்றது. அப்போது நான் அங்கு இருந்தேன். வ.சுப.மா. அவர்களுடன் அம்மாநாட்டிற்குப் பலரும் வந்திருந் தனர். ஒரு நாள் மாவன்னா அவர்கள் என்னிடம் 'தேங்காய் எண்ணெய்க் குப்பி ஒன்று வேண்டும்' என்றார்கள். வாங்கிக் கொடுத்தேன். அவர்கள் தாயகம் திரும்பிய பிறகு இலங்கைக்கு எனக்கு 4.5.82 அன்று ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள். அதில் நன்றி தெரிவித்து எழுதியிருந்த அவர்கள், 'நீங்கள் வாங்கிக் கொடுத்த தேங்காய் எண்ணெய்க்கு விலை எவ்வளவு என்று தெரிவிப்பதுடன், அத்தொகையை இங்கு யாரிடம் கொடுக்க வேண்டும் என்று எழுதினால் அத்தொகையை அவர்களிடம் கொடுக்கிறேன்' என்றும் குறிப்பிட்டிருந்தார்கள்.

தேங்காய் எண்ணெய்க் குப்பி விஷயம் மிக மிகச் சிறியது. ஆனால், வ.சுப.மா. அவர்கள் பிறருடைய பொருளுக்கு ஆசைப் படாதவர்கள் என்பதால் மறவாமல் அது பற்றி எழுதியிருந் தார்கள்'' (நகரத்தார் குரல், பிப்ரவரி 1993, ப.16).

## 9. நகைச்சுவையாளர் வ.சுப.மா.

நல்ல எழுத்தாளர்கள் நகைச்சுவை உணர்வு படைத்தவர் களாகவும் இருப்பார்கள் என்பதற்குப் பாரதியும் புதுமைப் பித்தனும் கல்கியும் சிறந்த எடுத்துக்காட்டுக்கள். இத்தகைய நகைச்சுவையாளர் பட்டியலில் வ.சுப.மா.வுக்கும் முன் வரிசை யில் ஓர் இடம் உண்டு. தனிப்பட்ட முறையில் உரையாடும் போதும், சொற்பொழிவின் போதும் அவர் பேச்சில் அவ்வப் போது நகைச்சுவை மின்னல் தோன்றி ஒளிவீசும்.

0 நீண்ட நாள் கழித்துப் பார்த்த நண்பர் ஒருவரின் உடல் பருத்திருந்ததைக் கண்டபோது வ.சுப.மா. இப்படிச் சொன்னார்:

'என்னப்பா நீ வான் நோக்கி வளராமல் திசை நோக்கி வளர்கிறாயே!'

வ.சுப.மா.வின் பேச்சு அந்த நண்பரையே தன்னை மறந்து முறுவலிக்க வைத்துவிட்டது.

0 ஒரு விருந்தில் வ.சுப.மா.வைப் பார்த்து ஒருவர் 'நீங்கள் பிறவிச் சைவமா?' எனக் கேட்க, வ.சுப.மா. உடனே, 'நான் சைவப் பிறவி' என்றார். 'முரட்டுக் காளைக்கு எதிர்ப்பதம் என்ன?' என்று ஒருவர் கேட்ட போது வ.சுப.மா. சட்டென்று, 'முரட்டுக் காளி' என்றாராம். பிறிதொரு முறை கூட்டத்தில் ஒருவர் புகைத்துக் கொண்டிருந்ததைப் பார்த்ததும் வ.சுப.மா. 'வள்ளுவர் இதைத்தான் **தீ நட்பு** என்று சொல்லியிருப்பார் போலும்!' என்று சொல்ல, அங்கே உடனே சிரிப்பலைகள் எழுந்தன.

இங்ஙனம் நண்பர்களிடையே நகைச்சுவை உணர்வு மிளிர வ.சுப.மா. உரையாடியுள்ள நிகழ்ச்சிகள் பலவாகும். வ.சுப.மா.வின் சொற்பொழிவு மேடைகளிலும் அவ்வப்போது நகைச்சுவை என்னும் மெல்லிய பூங்காற்று வீசுவதுண்டு. ஓர் எடுத்துக்காட்டு:

'தலைப்பின்மேற் சொற்பொழிவதற்கு முன் என்னை இவ்வாண்டுப் பொழிவுக்கு அழைத்த நம் பல்கலைக் கழகத்தார்க்கும் நிறுவிக் காத்து வரும் அரசத் தோன்றலுக்கும் நன்றியுடையேன். கேட்கக் குழுமியிருக்கும் பேராசிரியப் பெருமக்கட்கும் மாணவ இளையர்க்கும் நன்றியேன். நன்றி கூறக் கேட்டதும் பேச்சு முடியப் போகிறதோ என்று சிலர் நினைக்கலாம். சில கூட்டத்து நன்றி கூறத் தொடங்கும் போது பலர் இருப்பதில்லை. நன்றி கூறுவதைக் கேளாத குற்றத்துக்கு அவர்கள் ஆளாக வேண்டாமேயென்று நன்றிக் கடன் மொழிந்து சொற்பொழியத் தொடங்குகின்றேன்' (கம்பர், ப.4).

## 10. 'அன்பன், வ.சுப. மாணிக்கம்'

கடிதங்களுக்கு உடனுக்குடன் கைப்பட மறுமொழி எழுதுவது வ.சுப.மா.வின் இயல்பு. அவரது கடித நடை திருக்குறள் போல் அளவானது; அழகானது; உணர்ச்சியும் எழுச்சியும் ஊட்ட வல்லது. 'வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வும் பணியும்' என்ற நூலில் அவரது ஒரு சில கடிதங்கள் இடம் பெற்றுள்ளன.

'தமிழகத்தில் எத்துறையிலும் எவ்விடத்திலும் தமிழுக்கே முதலிடம்; பிறவற்றிற்குப் பின்னிடம். இதுவே தமிழ் மந்திரம்' - நண்பர் முருகேசனுக்கு வரைந்த மடலில் வ.சுப.மா. எழுதியுள்ள இரத்தினச் சுருக்கமான வரிகள் இவை.

'நம் இயக்கம் வினைத் தூய்மையானது; நமக்கு வேண்டும் வினைத் திட்பம் உண்டு. வினை செயல் வகை அரிதில்லை' - பேராசிரியர் ச.மெய்யப்பனுக்குத் தமிழ் வழிக் கல்வியியக்கம் குறித்து வ.சுப.மா. எழுதிய கடிதத்தில் இடம்பெற்றிருக்கும் பொன்னான வரிகள் இவை. இவ்வரிகளில் ஒளிவிடும் திருக் குறட் சுடர் பயில்வார் நெஞ்சை அள்ளுவதாகும்.

'என் பருவத்தோடு ஒத்த நிலை நண்பர்கள் மெல்ல மெல்ல மறைகின்றனர். இறப்பு பேரியற்கையாகும். எனினும் வருத்தமும் இயற்கையுணர்வாகும். அவர் புலமையும் துணிவும் போற்றற்குரியவை. எனினும் அவர் தொண்டினை நினை வோம்' - பேராசிரியர் க. வெள்ளைவாரணனாரின் மறைவை ஒட்டி, முனைவர் இரா. சாரங்கபாணிக்கு எழுதிய மடலில் வ.சுப.மா. தீட்டியுள்ள அனுபவ மொழிகள் இவை.

எதிர்காலத்தில் வ.சுப.மா.வின் கடிதங்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டுத் தனியொரு நூலாக வெளிவருமாயின், அது அன்னைத் தமிழுக்கும் கடித இலக்கியத்திற்கும் நல்லதோர் ஆக்கமாகவும் நிலைத்த தொண்டாகவும் அமையும்.

★★★

# பின்னிணைப்பு 1

## 1. வ.சுப.மா.வின் தமிழ் நூல்கள்

### 1. ஆராய்ச்சி

1. **தமிழ்க் காதல்.** சென்னை: பாரி நிலையம் (விற்பனையுரிமை), முதற்பதிப்பு: மார்ச்சு, 1962.
2. **ஒப்பியல் நோக்கு.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், இரண்டாம் பதிப்பு: சூலை, 1984.
3. **தொல்காப்பியக் கடல்.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், தொகை முதற்பதிப்பு: சூன், 1987.
4. **சங்க நெறி.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், தொகை முதற்பதிப்பு, சூன், 1987.
5. **திருக்குறட் சுடர்.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், தொகை முதற் பதிப்பு, சூன், 1987.
6. **காப்பியப் பார்வை.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், தொகை முதற்பதிப்பு, செப்டம்பர், 1987.
7. **இலக்கியச் சாறு.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், தொகை முதற் பதிப்பு, அக்டோபர், 1987.
8. **கம்பர்.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், திருத்திய பதிப்பு: அக்டோபர், 1987.
9. **வள்ளுவம்.** சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், மறுபதிப்பு: டிசம்பர், 1993.

### 2. நாடகம்

10. **மனைவியின் உரிமை**, சென்னை: பாரி நிலையம் (விற்பனையுரிமை), முதற்பதிப்பு: 1947.
11. **நெல்லிக் கனி**, சென்னை: பாரி நிலையம் (விற்பனையுரிமை), முதற்பதிப்பு: டிசம்பர், 1962.
12. **உப்பங்கழி**, சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், முதற்பதிப்பு: நவம்பர், 1972.
13. **ஒரு நொடியில்.** சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், முதற்பதிப்பு: டிசம்பர், 1972.

## 3. கவிதை

14. **கொடை விளக்கு**. காரைக்குடி: செல்வி பதிப்பகம் (விற்பனையுரிமை), முதற்பதிப்பு: சூலை, 1957.

15. **மா மலர்கள்**. காரைக்குடி: கதிரகம், முதற்பதிப்பு: 1978.

16. **மாணிக்கக் குறள்**. சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: ஏப்பிரல், 1991.

## 4. உரை

17. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபும் மொழி மரபும் - மாணிக்கவுரை**. தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம், முதற்பதிப்பு: அக்டோபர், 1989.

18. **திருக்குறள் தெளிவுரை**. சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: 1991.

19. **நீதி நூல்கள்**. சிதம்பரம், மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: டிசம்பர், 1991.

## 5.கடித இலக்கியம்

20. **தலைவர்களுக்கு**. சென்னை: பாரி நிலையம் (விற்பனையுரிமை), முதற்பதிப்பு: சூலை, 1965.

## 6. பதிப்பு

21. **இரட்டைக் காப்பியங்கள்**. காரைக்குடி: செல்வி பதிப்பகம் (விற்பனையுரிமை), முதற்பதிப்பு: சனவரி, 1958.

22. **நகரத்தார் அறப்பட்டயங்கள்**. நெற்குப்பை: முதற்பதிப்பு, ஜூலை, 1961.

## II. ஆங்கில நூல்கள்

23. The Tamil Concept of Love
24. A Study of Tamil Verbs
25. Collected Papers
26. Tamilology

## III. ஒரு பொருட் கட்டுரைகள்

1. *எழுத்துச் சீர்திருத்தம், எங்கே போய் முடியும்?.* பதிப்பளிப்பு: மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1.4.1989.

2. *தமிழ் வழிக் கல்வியியக்கம்: மொழியறிக்கை.* பதிப்பளிப்பு: மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 15.5.1989.

3. *தமிழ் வழிக் கல்வியியக்கம்: மதுரை ஊர்வலம் நிகழ்ச்சி விளக்கம்,* பதிப்பளிப்பு: தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம், சென்னை, 12.6.1988.

★★★

# பின்னிணைப்பு 2

## 1. வ.சுப.மா. பற்றிய நூல்களும் கட்டுரைகளும்

### 1. நூல்கள்

1. **இளங்குமரன், இரா.** மாணிக்கக் குறள் தெளிவுரை, சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: ஜூன், 1992.

2. **முத்துவீரப்பன், பழ.** வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம், சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: டிசம்பர், 1988.

3. **மெய்யப்பன், ச.** (பதிப்பாசிரியர்). வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வும் பணியும், சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: சூன், 1989.

4. ------ (பதிப்பாசிரியர்). மாணிக்கக் குறள் ஓர் அறிமுகம், சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: ஆகஸ்டு, 1993.

### 2. நூல்களில் இடம்பெற்றுள்ள கட்டுரைகள்

1. **குகன்,** 'பொய் சொல்லா மாணிக்கம்', பெரும்புள்ளிகள், மதுரை: குகன் பதிப்பகம், முதற்பதிப்பு: டிசம்பர், 1994, பக். 105-109.

2. **மோகன், இரா.** 'மூதறிஞர் வ.சுப. மாணிக்கம்', இலக்கிய வளம், சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: அக்டோபர், 1989, பக். 147-157.

3. -------. 'தமிழ் இமயம் வ.சுப. மாணிக்கம்', இலக்கியச்

சுடர், சென்னை: ஓரியண்ட் லாங்மேன், முதற்பதிப்பு: 1992, பக். 136-146.

4. ------. 'மாணிக்கக் குறள் காட்டும் தனிமனித, சமுதாய முன்னேற்றச் சிந்தனைகள்', இலக்கியச் சோலை, சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு: டிசம்பர், 1994, பக். 51-61.

## 3. இதழ்கள் மற்றும் சிறப்பு மலர்கள்

1. இளந்தமிழன், ஏப்ரல் 1989.
2. குறளியம், 1.6.1989.
3. தமிழ் மாருதம், வைகாசி 1993.
4. நகரத்தார் குரல், ஜூன் 1989.
5. -----, பிப்ரவரி, 1993.

★★★

‘வ.சுப.மா.’ எனச் சுருக்கமாக அழைக்கப்பெறும் வ.சுப. மாணிக்கம் தமிழுக்கும் தமிழர்க்கும் தமிழகத்திற்கும் பல்லாண்டுக் காலம் நிலைத்த தொண்டாற்றியவர்; ‘எங்கும் தமிழ், எதிலும் தமிழ்’ என்ற கொள்கையைப் பறைசாற்று வதற்காகத் ‘தமிழ் வழிக் கல்வியியக்கம்’ கண்டவர்; தமிழுக்குப் புதிய புதிய சொல்லாக்கங்களையும் உவமை களையும் படைத்துத் தருவதில் தனி ஈடுபாடு உடையவர்; ஆராய்ச்சி, கட்டுரை, நாடகம், கவிதை, உரை, கடித இலக்கியம், பதிப்பு எனப் பல வகை நூல்களை வெளியிட்டு, தமிழ் இலக்கிய இலக்கண ஆய்வு உலகில் தனித்துவம் ஒன்றை நிலை நாட்டியவர். அவரது சீரிய வாழ்வையும் நேரிய எழுத்தையும் அறிமுகம் செய்யும் நோக்கில் எழுதப் பட்டுள்ளது இச்சிறுநூல்.

முனைவர் இரா. மோகன், மதுரைக் காமராசர் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறைப் பேராசிரியர் ஆவார். அறிஞர் மு.வ. புனைகதைத் திறன், காந்தியக் கவிஞருடன் ஒரு கைகுலுக்கல், ‘ஆய்வியல் வழிகாட்டி’ முதலிய பல சீரிய நூல்களைத் தந்தவர், புதுக்கவிதை, ஹைகூ, தற்காலச் சிறுகதைகள், ஒப்பிலக்கியம் பற்றி 62 நூல்களை வழங்கியுள்ளார். வல்லமையும் வளமையும் மிக்க மொழி நடையால், இவர் ‘வ.சுப.மா.’ வினை எழிலுற அறிமுகம் செய்துள்ளார்.

Va. Suba. Manickam (Tamil) Rs. 25

ISBN 81 - 260 - 0289 - 1.



சாகித்திய அகாதெமி